# ஆவணம்

இதழ் : 8 சூலை : 1997





தமிழகத் தொல்லியல் கழகம்

தஞ்சாவூர்

# ஆவணம் இதழில் பங்கேற்போர் நினைவுக்கு

தமிழக வரலாற்றை வளப்படுத்தும் அடிப்படைச் சான்றுகள் குறித்து கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளல் தமிழகத் தொல்லியல் கழகத்தின் முதன்மையான குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடையும் வகையில் கீழ்க்குறிப்பிட்ட பரந்த தலைப்புகளை ஒட்டிக் கட்டுரைகளும் குறிப்புகளும் வரவேற்கப்படுகின்றன.

1. புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தொல்பொருள்கள், தொன்மையான ஊரிருக்கைச் சின்னங்கள், கலைப்பொருள்கள், காசுகள், கல்வெட்டுக்கள், செம்பு அல்லது ஓலைப் பட்டயங்கள், சுவடிகள், ஆகியன பற்றிய குறிப்புகள்:
2. கல்வெட்டு முதலிய எழுத்தவாணங்களானால் அவற்றின் மூல பாடம், மைப்படி அல்லது கண்படி:
3. மூலச்சான்றுகள் அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட வரலாற்றுக் கட்டுரைகள், திறனாய்வுகள்:
4. புதிய நூல்கள், கட்டுரைகள் பற்றிய மதிப்பீடு அல்லது குறிப்புகள்;
5. நாளேடுகளில் வந்த அரிய வரலாற்றுச் செய்திகளின் திரட்டு;
6. கருத்தரங்க நிகழ்ச்சிகள் பற்றிய செய்தித் திரட்டு

மேற்கண்ட யாவற்றுக்கும் ஒளிப்படமும், வரைபடமும் அனுப்பலாம். படங்கள் 8 x 10செ.மீ மிகாமல் இருக்க வேண்டும்.

கல்வெட்டுகளில் மைப்படிகள், கண்படிகள் அனுப்புவோர் அவற்றின் தெளிவான ஒளிப்படங்களை மட்டும் (8 x 10செ.மீ மிகாமல்)அனுப்புதல் வேண்டும். மூல மைப்படிகளை அனுப்புதல் கூடாது.

வரைபடங்கள் யாவும் 8 x 10 செ.மீ மிகாமல் இருத்தல் வேண்டும். வரைபடங்களின் விளக்கங்கள் யாவும் தமிழில் இருக்க வேண்டும்.

பார்வை நூல்களைக் கட்டுரைகளில் குறிப்பிடும் போது கீழ்க்கண்ட முறையைப் பின்பற்ற வேண்டும்

1. குறிப்பு எண்கள் தொடர் எண்களாகத் தரப்படவேண்டும்;
2. கட்டுரையின் முடிவில் பார்வை நூல்களைத் தரவேண்டும்;
3. கீழ்க்கண்ட அமைப்பில் பார்வை நூல் விவரங்கள் இருத்தல் வேண்டும்:

## நூல்களுக்கு

நூல் ஆசிரியர் பெயர் (தந்தை அல்லது குறிப்பு எழுத்துக்கள் முதலிலும், தொடர்ந்து முழுப்பெயரும்), நூல் பெயர் (அடிக்கோடிடப்படல் வேண்டும்). தொகுதி எண், நூலின் பதிப்பு, நூல் வெளியிட்டடோர் மற்றும் அவர் ஊர்-இடம், வெளிவந்த ஆண்டு, பக்க எண்-எண்கள், படங்கள், நிலப்படங்கள், புகைப்படங்கள் உள்ள பக்க எண் மற்றும் அதன் வரிசை எண்.

(தொடர்ச்சி பின் அட்டையில்)

# ஆவணம்

இதழ் : 8




# AVANAM

VOL. 8

எ. சுப்பராயலு
பதிப்பாசிரியர்

தமிழகத் தொல்லியல் கழகம்
தஞ்சாவூர்

1997

ஆவணம் : 8 (1997)



**Avanam,** Journal of the Tamil Nadu Archaeological Society, Thanjavur.

இவ்விதழ் இந்திய வரலாற்று ஆய்வுக் கழகத்தின்
(INDIAN COUNCIL OF HISTORICAL RESEARCH)
நல்கை உதவியுடன் வெளியிடப் பெறுகிறது.
இவ்விதழில் வெளியிடப்படும் செய்திகளுக்கு
அவ்வக்கட்டுரையாசிரியரே பொறுப்பு.

அச்சிட்டோர் : அலமு பிரிண்டிங் வொர்க்ஸ்,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

# தமிழகத் தொல்லியல் கழகம்

மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்,
*தஞ்சாவூர் – 613 005.*

## செயற்குழு

| | | |
|---|---|---|
| தலைவர் | : | கோ. விசய வேணுகோபால், மதுரை. |
| துணைத் தலைவர்கள் | : | நடன காசிநாதன், சென்னை.<br>என். சேதுராமன், கும்பகோணம். |
| செயலர் | : | செ. இராசு, தஞ்சாவூர் |
| பொருளாளர் | : | கா. ராஜன், தஞ்சாவூர் |
| இணைச் செயலர் | : | சு. இராசகோபால், சென்னை. |
| உறுப்பினர்கள் | : | இரா. தமிழாதன்,<br>இல. தியாகராசன், அரியலூர்.<br>வள்ளி சொக்கலிங்கம், காரைக்குடி.<br>வெ. வேதாசலம், மதுரை.<br>சு. இராசவேலு, சென்னை.<br>கரு. இராஜேந்திரன், மேலப்பனையூர்<br>எஸ்.எம். கமால், இராமநாதபுரம்<br>ப. சண்முகம், சென்னை.<br>எ. சுப்பராயலு, தஞ்சாவூர். |

---

**பதிப்புக் குழு**

நடன காசிநாதன், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை.

ப. சண்முகம், சென்னைப் பல்கலைக் கழகம்.

கொடுமுடி ச. சண்முகன், தமிழ்நாடு அரசு பொதுப்பணித்துறை.

**பதிப்பாசிரியர்**

எ. சுப்பராயலு, தமிழ்ப் பல்கலைக் கழகம்.

## கிரந்த எழுத்துக்களும் அவற்றிற்கு நிகரான தமிழ் எழுத்துக்களும்

| | | |
|---|---|---|
| அ | a | 𑌅 |
| ஆ | ā | 𑌆 |
| இ | i | 𑌇 |
| ஈ | ī | 𑌈 |
| உ | u | 𑌉 |
| ஊ | ū | 𑌊 |
| எ | e | |
| ஏ | ē | 𑌏 |
| ஐ | ai | 𑌐 |
| ஒ | o | |
| ஓ | ō | 𑌓 |
| ஔ | au | 𑌔 |
| ரு0 | ṛ, ṛi | 𑌋 |
| ளு0 | ḷ | 𑌌 |

| | | |
|---|---|---|
| க | k | 𑌕 |
| க2 | kh | 𑌖 |
| க3 | g | 𑌗 |
| க4 | gh | 𑌘 |
| ங | ṅ | 𑌙 |
| ச | c | 𑌚 |
| ச2 | ch | 𑌛 |
| | j | 𑌜 |
| ச4 | jh | 𑌝 |
| ஞ | ñ | 𑌞 |
| ட | ṭ | 𑌟 |
| ட2 | ṭh | 𑌠 |
| ட3 | ḍ | 𑌡 |
| ட4 | ḍh | 𑌢 |
| ண | ṇ | 𑌣 |
| த | t | 𑌤 |
| த2 | th | 𑌥 |
| த3 | d | 𑌦 |
| த4 | dh | 𑌧 |
| ந | n | 𑌨 |

| | | |
|---|---|---|
| ப | p | 𑌪 |
| ப2 | ph | 𑌫 |
| ப3 | b | 𑌬 |
| ப4 | bh | 𑌭 |
| ம | m | 𑌮 |
| ய | y | 𑌯 |
| ர | r | 𑌰 |
| ல | l | 𑌲 |
| வ | v | 𑌵 |
| ழ | ḻ | |
| ள | ḷ | 𑌳 |
| ற | ṟ | |
| ன | ṉ | |
| ச0 | ś | 𑌶 |
| | ṣ, sh | 𑌷 |
| | s | 𑌸 |
| | h | 𑌹 |

2,3,4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்து தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

# பொருளடக்கம்

## நன்றி

இவ்விதழுக்குக் கட்டுரைகள் அளித்த ஆசிரியர் யாவருக்கும் இவ்விதழ் அச்சாகுங்கால் பலவகையிலும் துணைபுரிந்த திருவாளர்கள் ப. சண்முகம், சு. இராசகோபால், சு. இராசவேலு ஆகியோருக்கும் நன்றி. இவ்விதழை நேர்த்தியாகவும் விரைவாகவும் கணிப்பொறியில் கோர்த்தளித்த மாருதி லேசர் பிரிண்டர்ஸ் நிறுவனத்தாருக்கும் அச்சிட்டு அளித்த அலமு பிரிண்டிங் வொர்க்ஸ் நிறுவனத்திற்கும் நன்றி.

எ. சுப்பராயலு
(பதிப்பாசிரியர்)

# 1. தொண்டை மண்டலத்துக் கோழிக் கற்கள்

ஐராவதம் மகாதேவன், சென்னை

## முன்னுரை

'நடுகற்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம்; கோழிக் கற்கள் என்றால் என்ன?' என்ற வினா இக்கட்டுரையின் தலைப்பை வாசிப்பவர்களுக்கு எழுவது இயற்கையே.

தமிழகத்தில் செங்கம், தருமபுரி, கிருஷ்ணகிரி ஆகிய வட்டாரங்களில் நடுகற்கள் அதிகமான எண்ணிக்கையில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இக் கற்களில் வீர மரபை எய்தியவர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டு அவர்கள் எந்தப் போரில் இறந்துபட்டனர் என்ற விவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.[1]

தொண்டை மண்டலத்தில் கோழிப்போரில் உயிர் துறந்த சேவல்களின் நினைவுச் சின்னங்களாகப் பொறிக்கப்பட்டுள்ள இரு நடுகற்கள் முதன்முதலாக அண்மைக் காலத்தில் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன. இவற்றைத்தான் தலைப்பில் சுருக்கமாகக் 'கோழிக் கற்கள்' என்று குறிப்பிட்டிருக்கிறேன். சேவலின் அழகிய சிற்பங் களுடன் பண்டைய வட்டெழுத்துகளில் கல்வெட்டுகளும் இக்கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. எழுத்தமைதியின் அடிப் படையில் இவ்விரு கோழிக் கற்களும் இதுவரை கிடைத்துள்ள நடுகற்களைவிட காலத்தால் முந்தியவை, அதாவது சுமார் கி.பி. 5 - 6 நூற்றாண்டுகளைச் சார்ந்தவை என்று கூற முடியும். 1500 ஆண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தின் கிராமங்களில் நடைபெற்று வந்த கோழிப்போர் விளையாட்டைப்பற்றி இக்கற்கள் சுவையான செய்திகளைத் தருகின்றன.

---

இக்கட்டுரையின் முன்வரைவு சென்ற ஆண்டு (1996) ஜூன் மாதத்தில் சென்னையில் தமிழ்நாடு தொல்லியல் துறையினர் 'தொண்டை மண்டலத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்' என்ற தலைப்பில் நடத்திய கருத்தரங்கில் வாசித்தளிக்கப்பட்டது. அப்பொழுது இக்கல்வெட்டுக்களின் வாசகங்களில் சிற்சில திருத்தங்கள் தேவைப்படுகின்றன என்று விவாதத்தில் பல ஆய்வாளர்கள் (எ. சுப்பராயலு, நடன காசிநாதன், சு. ராஜவேலு முதலியோர்) கருத்துத் தெரிவித்தனர். அதையொட்டி கட்டுரை மீளாய்வு செய்யப்பட்டு திருத்தங்களுடன் இங்கு வெளியிடப்படுகிறது.

## 1:1 அரசலாபுரம் கோழிக்கல்

தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம் - செஞ்சி சாலையில் விழுப்புரத்திலிருந்து 19 கி.மீ. தொலைவில் அரசலா புரம் என்ற சிற்றூர் உள்ளது. அங்குள்ள பிள்ளையார் கோயிலின் முன்பாக நடப்பட்டிருந்த, சேவலின் சிற்பம் பொறித்த ஒரு நடு கல்லை 1991ல் மங்கை ராகவன் கண்டுபிடித்தார். தொல்லெழுத் தியல் அறிஞர் டாக்டர் இரா. கலைக்கோவன் அக்கல்லைப் பார்வையிட்டு அது ஒரு போர்க்கோழியின் நடுகல் என்று உறுதி செய்தார். அதையடுத்து அந்த அரிய நடுகல்லைத் தகுந்த பாது காப்புக்காக தமிழறிஞர் டாக்டர் கொடுமுடி சண்முகன் விழுப் புரத்திற்கு எடுத்துச் சென்று அங்கு பொதுப்பணித்துறை அலுவலக வளாகத்தில் ஒரு மேடை அமைத்து நாட்டி வைத்துள்ளார்.[2]

இப்பலகைக் கல்லின் உயரம் 62 செ.மீ; அகலம் 55 செ.மீ. கல்லின் மேற்புறத்தில் பிறைவடிவத்தில் இரு ஆழமான வளைவுகள் செதுக்கப்பட்டுள்ளன. மழுமழுப்பாக உள்ள இவ்வளைவுகளை முற்காலத்தில் கத்தி, அரிவாள் போன்ற ஆயுதங்களைத் தீட்டுவதற்குப் பயன்படுத்தி வந்தார்கள் என்று ஊரார் கூறுகின்றனர். கோழிக்கல்: 'Stone used in Polishing Iron' என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியில் விளக்கம் கூறியிருப்பது இப்பழக்கத்தின் அடிப்படையில் இருக்கலாம். இப் பலகைக் கல்லின் வலது மேல் மூலை உடைந்து மூளியாக உள்ளது.

கல்லின் முன்புறத்தில் ஏறத்தாழ முழுப் பரப்பிலும் ஒரு சேவலின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. (படம் 1: மசிப்படி) சேவல் கம்பீரமான தோற்றத்துடன் காட்சியளிக்கிறது. அதன் சிற்பத்தை இக்கற்பலகையில் நடு நாயகமாகச் செதுக்கி வைத்ததற்கு ஒரு முக்கிய காரணம் இருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்க முடிகிறது.

சேவலின் முதுகுப் புறத்திற்கு மேலாக இரண்டு வரிகளிலும் அதன் கால்களுக்கு முன்னராக ஒரு கடைசி எழுத்தின் பகுதி உடைந்துபோய்விட்டது. மற்ற எழுத்துகளும் மிகவும் தேய்ந்து காணப்பட்டாலும் படிக்கக்கூடியபடி உள்ளன. இக்கல்வெட்டு தமிழ்மொழியில் வட்டெழுத்துகளில் எழுதப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டை முதன்முதலில் ஆய்வு செய்த கொடுமுடி சண்முகன் அதைப் பின்வருமாறு வாசித்துள்ளார்.[3]

*1:1 அ* *1. பகையுரு மேற் பே[ர]*
*2. ரிடுயாடி ப*
*3. ருகிய கோழி*

இதற்கு 'பகைவர் மேல் போரிட்டு ஆடி (ரத்தம்) பருகிய கோழி' என்று அவர் விளக்கமளித்திருக்கிறார்.

அடுத்தபடியாக இக் கல்வெட்டை ஆய்வு செய்த கல்வெட்டாய்வாளர் சு. ராஜவேலு தமது ஆங்கிலக் கட்டுரையில்[4] இதன் வாசகத்தைப் பின்வருமாறு திருத்தியமைத்துள்ளார்.

*1:1 ஆ* *1. மூகையுரு மேற் [சே]*
*2. ரிடுயாடி க*
*3. ருகிய கோழி*

இக்கட்டுரையில் கல்வெட்டின் படியோ அதன் வாசகத்திற்கு நேரான மொழி பெயர்ப்போ தரப்படவில்லை. ஆயினும் மூகையூர் என்று ஊரின் மேற்குப் பகுதியான மேற்சேரியில் நடந்த ஒரு கோழிப் போரில் இறந்துபட்ட கோழிக்காக நிறுவிய நடுகல் என்று பொதுப்படையான கருத்தைக் கூறியிருக்கிறார். இந்த விளக்கம் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவே உள்ளது.

கடந்த சில ஆண்டுகளில் இக்கல்வெட்டைப் பல முறை நேரில் கண்டு ஆய்வு செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. (படம் 2 : கல்லிலிருந்து நேரடியாக விளம்பிய வரைபடம்)[5]. இவ்வாய் வின் அடிப்படையில் இக்கல்வெட்டின் திருத்திய வாசகம் வருமாறு:

*1:1 இ* *1. முகையுரு மெற்[ஏ] ச*
*2. ரிடுயாடி க்க*
*3. ருகிய கொழி*

*எழுத்தமைதி*

(i) ற - கரமெய்யின் மீது புள்ளியிடப்பட்டுள்ளது.

(ii) ச - கரத்தின் மேற்பகுதி சிதைந்துள்ளது. இடத்தைப் பொறுத்து இதைச் 'செ' என்று வாசிக்கலாம்.

(iii) மு,யு,ரு,மெ (முதல் வரி); டு, யா, டி (2ஆம் வரி); ரு, கொ (3ஆம் வரி) ஆகிய எழுத்துக்களின் உயிர்மெய்க் குறியீடுகள் தமிழ் - பிராமி முறையில் உள்ளன. கை (முதல் வரி); ரி (2ஆம் வரி); கி, ழி (3ஆம் வரி) ஆகிய எழுத்துகளின் உயிர்மெய்க் குறியீடுகள் வட்டெழுத்து முறையைச் சார்ந்தவையாகும். ஆகையால் இக்கல்வெட்டு இவ்விரு எழுத்து முறைகளுக்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்தது என்று தெரிகிறது.

(iv) இக்கல்வெட்டின் ஒரு சிறப்பான அம்சம் இதில் க்க என்ற கூட்டெழுத்து (2ஆம் வரி கடைசி எழுத்து) காணப்படுவதாகும். இக் கூட்டெழுத்தை முதன்முதலில் கல்வெட்டாய்வாளர் பி. வெங்கடேசன் பறையன்பட்டு சமண நிசீதிகைக் கல்வெட்டில் கண்டுபிடித்து வெளியிட்டார்[6]. அரசலாபுரம் நடுகல்லில் காணப்படும் அதே கூட்டெழுத்து தமிழ்க் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தையது ஆகும். இதற்குப் பிறகு, பிற்காலத் தமிழ்க் கல்வெட்டுகளிலும் ஓலைச்சுவடிகளிலுமே மீண்டும் கூட்டெழுத்துகள் காணப்படுகின்றன.

***காலம் :*** இக்கல்வெட்டின் பெரும்பாலான எழுத்துகள் பூலாங்குறிச்சிக் கல்வெட்டைப் பின்பற்றியுள்ளதாலும், சில எழுத்துகள் மேலும் சிறிது வளர்ச்சியுற்றிருப்பதாலும், இது சுமார் கி,பி. 5ம் நூற்றாண்டின் இறுதியிலோ அதற்குச் சற்றே பின்னரோ பொறிக்கப்பட்டது என்று கொள்ளலாம்.

***பொருள் :*** இக் கல்வெட்டின் பொருளைக் காண்பதற்கு இதன் வாசகத்தைப் பின்வருமாறு சந்தி பிரித்து வாசிக்க வேண்டும்.

*முகையூரு மேற்சேரி - இட்டு - ஆடி -க்கரு [க்] கிய கோழி*

*இச் சொற்களின் பொருளைத் தனித்தனியே கீழ்க்கண்டபடி விளக்கலாம்.*

*முகையூரு : முகையூர். விழுப்புரம் - திருக்கோயிலூர் சாலையில் விழுப்புரத்திலிருந்து 23 கி.மீ. தூரத்தில் முகையூர் என்ற ஊர் உள்ளது. இதுவே இந்த நடுகல்லில் குறிப்பிட்டுள்ள ஊரா என்று சொல்லவியலாது. அப்படியானால் இந்த நடுகல் அங்கிருந்து தொலைவிலுள்ள அரசலாபுரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டது ஏன் என்று தெரியவில்லை.*

*மேற்சேரி:* ஊரின் மேற்குப்பகுதி. அக்காலத்தில் பெரிய ஊர்களில் மேற்சேரி என்றும் கீழ்ச்சேரி என்றும் இரு பகுதிகள் இருந்தன போலும். அடுத்துவரும் இந்த ஊர் கோழிக்கல்லில் 'கீழ்ச்சேரி' குறிப்பிடப்படுவதைக் காண்க.

*இட்டு :* முன்னிட்டு, முன் நிறுத்தி.

*ஆடி :* 'விளையாடி, போராடி, வெற்றிபெற்று' ஆகிய மூன்று பொருள்களுமே இங்கு பொருந்தி வருகின்றன.

*கரு[க்]கிய :* 'கருக்கிய' என்று ஒற்று மிகுந்து வாசிக்க வேண்டும். கருக்கு: 'பொறித்த சித்திரம்' (தமிழ் அகராதி). தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டில் காணப்படும் 'கருக்கு' என்ற சொல் "bas-relief" (புடைப்புச் சிற்பம்) என்று மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. (தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், தொகுதி பக் 2, 5, 11). இதே சொல் மலையாளத்தில் 'கருக்குப்பணி' என்றும், கன்னடத்தில் 'கரு, கருவிடு' என்றும், தெலுங்கில் 'கருகு, கருவு' என்றும் இன்று வரை வழக்கத்தில் உள்ளது (DEDR. 1280)[7].

*கோழி :* பொதுப்பெயர். சேவலுக்குப் பொருந்தும்.

முகையூர் என்ற ஊரின் மேற்சேரி நடத்திய கோழிப்போரில் வென்று (இறந்துபட்ட) சேவற் கோழிக்கு நினைவுச் சின்னமாக எழுப்பிய நடுகல்லில் பொறிக்கப்பட்ட சிற்பம் என்பது இக்கல்வெட்டு வாசகத்தின் பொழிப்புரையாகும்.

### 1:2 இந்தளூர் கோழிக் கல்

செங்கற்பட்டு மாவட்டத்தில் அச்சரப்பாக்கத்துக்குத் தென்கிழக்கில் 8 கி.மீ. தூரத்தில் இந்தளூர் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயிலின் நுழைவாயிலின் வலப்புறம் சாலையோரமாக ஒரு நடுகல் நடப்பட்டுள்ளது. இக் கல்வெட்டை முதன்முதலில் கண்டு பிடித்தவர் அச்சரப்பாக்கம் தமிழாசிரியர் தாமரைக் கண்ணன் ஆவார். இக்கண்டுபிடிப்பை 1971ல் சென்னையில் நடைபெற்ற செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கில் நடன. காசிநாதன் தொல்லியலாளர் கவனத்துக்குக் கொண்டு வந்தார்.[8] அதே ஆண்டின் இறுதியில் சென்னையில் நடைபெற்ற தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கில் தாமரைக்

கண்ணன் இந்த நடுகல்லைப் பற்றிய ஒரு விரிவான ஆய்வுரையை வாசித்தளித்தார்.[9]

இந்த நடுகல்லின் உயரம் 68 செ.மீ.; அகலம் 61 செ.மீ. இக்கல்லின் முன்புறம் ஒரு சேவல் கம்பீரமான தோற்றத்துடன் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. அதன் முதுகுப் புறத்துக்கு மேலே இரண்டு வரிகளாலான ஒரு கல்வெட்டு பொறிக் கப்பட்டுள்ளது (படம் 3: மசிப்படி). எழுத்துகள் மிகவும் தேய்ந்து இருந்தபோதிலும் அவற்றைத் தெளிவாகப் படிக்க முடிகிறது.

மேற்கூறிய இரு அறிஞர்களும் இக்கல்வெட்டைப் பின்வருமாறு வாசித்துள்ளனர்:

*1:2: அ 1. கீழச்சேரிக் கோழி பொ*
*2. டு கொத்த*

இதற்கு அவர்கள் 'தானியங்களைக் கொத்தித் தின்னும் கோழி' என்று விளக்கம் அளித்துள்ளனர். மேலும் தாமரைக் கண்ணன் தம் கட்டுரையில், 'கீழச்சேரிக் கோழி பகைக் கோழியைப் பொட்டலாகப் போகுமாறு, அதாவது சிறகுகளெல்லாம் சிதைந்து போகுமாறு கொத்தி வீரப்போர் புரிந்தது' என்ற விரிவான விளக்கத்தையும் தந்திருக்கிறார். இவ்விரு அறிஞர்களும் இக் கல்வெட்டின் எழுத்தமைதியிலிருந்து இது சுமார் கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்றும் கூறியிருக்கிறார்கள்.

சென்ற சில ஆண்டுகளில் நான் இந்தளூருக்கு மூன்று முறை சென்று இக் கல்வெட்டை நேரில் ஆய்வு செய்தேன். (படம் 4: கல்லி லிருந்து நேரடியாக விளம்பிய வரைபடம்). இவ் ஆய்வின் அடிப் படையில் இக் கல்வெட்டின் திருந்திய வாசகம் பின்வருமாறு:

*1:2 : ஆ 1. கிழச்செரிக் கொழி பொ*
*2. ற கொறறி*

இதைக் 'கீழ்ச்சேரிக் கோழி பொற்கொற்றி' என்று வாசிக்க வேண்டும்.

**எழுத்தமைதி**

(i) முதல் வரியில் ச், க் என்ற மெய்களுக்குப் புள்ளிகள் இடப்பட்டுள்ளன. இரண்டாவது வரியில் றகரமெய்களுக்குப் புள்ளியில்லை.

(ii) முதல் வரியின் கடைசி எழுத்தான பொ-கரத்தில் உயிர்மெய்க் குறியீடு இடதுபுறம் நீண்டும் வலதுபுறம் குறுகியும் உள்ளது. இதற்குக் காரணம் முதல் வரி கல்லின் வலதுபுற விளிம்பு வரை எழுதப்பட்டு மேலும் இடமின்மையால் வலது புற உயிர்மெய்க் குறியீடு குறுக்கப்பட்டுள்ளது. (நான் இந்த எழுத்தை முதலில் 'பெ' என்று தான் வாசித்திருந்தேன்).

(iii) ழ-கரத்தின் 'வால்' வளைந்துள்ளபோதிலும் இதை 'ழு' என்று எடுத்துக்கொள்ளாமல் 'ழ' என்றே வாசிக்கலாம். ஏறத்தாழ இதே அமைதியில் தமிழ் - பிராமியில் ழ-கரத்தின் ஒரு வகை காணப்படுகிறது.

(iv) இ-கர, ஈ-கார உயிர்மெய்க் குறியீடுகளில் வேற்றுமை இல்லை.

(v) முதல் வரியில் கொ-கரத்தின் உயிர்மெய்க் குறியீடு தமிழ்-பிராமி முறையிலும், இரண்டாவது வரியில் அதே எழுத்தின் உயிர்மெய்க் குறியீடு வட்டெழுத்து முறையிலும் அமைந்துள்ளன. இதிலிருந்து இக்கல்வெட்டு இவ்விரு எழுத்துமுறைகளின் இடைப் பட்ட காலத்தைச் சேர்ந்தது என்று தெரிகிறது.

**காலம் :** அரசலாபுரம் கோழிக் கல்லுடன் ஒப்பிடும்போது, இந்தளூர் கோழிக்கல் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு பிந்தையது என்று கொள்ளலாம். என் கணிப்பின்படி இந்தளூர்க் கல்வெட்டு சுமார் கி.பி.6 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

**பொருள்**

*கீழ்ச்சேரி:* ஓர் ஊர் அல்லது ஊரின் கிழக்குப்பகுதி. அரசலா புரத்துக் கோழி மேற்சேரியிலும், இந்தளூர்க்கோழி கீழ்ச்சேரியிலும்

இருந்தன என்பது இக் கல்வெட்டுகள் தெரிவிக்கும் சுவையான செய்திகளாகும். இந்தளூருக்கு வடகிழக்கில் சுமார் 15 கி.மீ. தூரத்தில் செய்யூருக்கு அருகில் கீழச்சேரி என்ற ஊர் இப்பொழுது உள்ளதாகத் தாமரைக்கண்ணன் தம் கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

*பொற்கொற்றி:* சேவலின் பெயர். பொன் கொற்றி என்று சந்தி பிரியும். இதிலிருந்து போர்க்கோழிகளை வளர்த்தவர்கள் அவற்றுக்குச் செல்லமாகப் பெயர் சூட்டியிருந்தனர் என்று தெரிந்து கொள்கிறோம். கொற்றி என்பது கொற்றவைக்கு மற்றொரு பெயராகும். கொற்றவை வெற்றித் தெய்வம் என்பதால் இப்பெயர் சூட்டப்பட்டிருக்கலாம். மேலும் * கொற்(றி) என்ற சொல்லே பழங்குடி திராவிட மொழிகளில் 'சேவல், கோழி' என்ற பொருளில் இன்றும் வழங்கி வருகிறது. *(கோண்டி: 'கொற், கொர்ர்'; கொண்ட: 'கொறு': கொலாமி: 'கொர்'; பார்ஜி: 'கொர்ர்'; மீட்டுருவம்:* * கொற்ற-, 'சேவல்,கொழி', *DEDR 2160). பழந்தமிழ் இலக்கியங்களிலும் நிகண்டுகளிலும் கையாளப்படவில்லை என்றும் மேற்கூறிய திராவிட மொழிகளின் ஒப்பாய்வின் அடிப்படையில் பண்டைத் தமிழிலும் இடைக்காலம் வரை மக்கள் பேச்சுமொழியில் 'கொற்றி' என்ற சொல் 'கோழி' என்ற பொருளில் வழங்கியது என்று கொள்ள இடமுண்டு.*

### *1:3 பண்டைத் தமிழகத்தில் கோழிப் போர்*

*கோழி வென்றி:*

*பண்டைத் தமிழகத்தில் ஏறுதழுவுதல் போன்றே கோழிப் போரும் ஒரு வீர விளையாட்டாகவும் பொழுது போக்காகவும் கருதப்பட்டது. ஐயனாரிதனார் இயற்றியுள்ள புறப்பொருள் வெண்பாமாலையில் 'கோழி வென்றி' என்ற தலைப்பில் பின் வரும் அழகிய வெண்பா உள்ளது (பெருந்திணைப் படலம், 348)*[10]

பாய்ந்தும் எறிந்தும் படிந்தும் பலகாலும்
காய்ந்தும் வாய்க் கொண்டும் கடுஞ்சேவல் - ஆய்ந்து
நிறங்கண்டு வித்தகர் நேர்விட்ட கோழிப்
புறன்கண்டும் தான்வருமே போர்க்கு.

இந்நூலின் பழைய உரையிலிருந்து தமிழில் கோழி நூல் ஒன்று இருந்தது என்றும் இத்துறையில் வல்லுநர் போர்க் கோழிகளின் திறமறிந்து தரம் பிரித்தனர் என்றும் அறிகிறோம்.

*மேற்சேரிக் கோழியும் கீழ்ச்சேரிக் கோழியும்:*

தொல்காப்பியம் சேனாவரையர் உரையில் 'மேற்சேரிக்கோழி அலைத்து கீழ்ச்சேரிக் கோழி அலைப்புண்டது' என்று எடுத்துக் காட்டாகக் குறிப்பிடுகிறார் (தொல். சொல். கிளவி.60).[11] நன்னூ லுக்கு உரை எழுதிய சங்கர நமச்சிவாயரும் 'மேலைச்சேரிச் சேவல் அலைத்ததென்ற துணையானே கீழைச்சேரிச் சேவல் அலைப் புண்டது' என்று எடுத்துக்காட்டாகக் குறிப்பிட்டிருக்கிறார் (நன்னூல் சூத்திரம் 402).[12] இவ்விலக்கியச் சான்றுகளுக்கு வலி வூட்டி புறச்சான்றுகளாக இப்பொழுது அரசலாபுரம் மேற் சேரிக் கோழியும் இந்தளூர் கீழ்ச்சேரிக் கோழியும் நடுகல் கல்வெட்டு களில் மூலம் கிடைத்திருப்பது அறிந்து இன்புறத் தக்கது.

*சேரிக் கோழியும் குப்பைக் கோழியும்:*

குறுந்தொகை 305ம் பாடலில் கோழிப்போரைப் பற்றிய ஒரு சுவையான குறிப்பு கிடைக்கிறது.[13]

உய்த்தனர் விடாஅர் பிரித்து இடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல

சேரிக்கோழிகளின் போரைக் காண ஊர் மக்கள் திரளாகக் கூடுவார்கள்; கோழிகளை மேலும் கடுமையாகப் போரிட உசுப்பி (உய்த்து) விடுவார்கள்; போரில் களைத்துப்போன கோழிகளைப் பிரித்தும் விடுவார்கள். ஆனால் குப்பைமேட்டில் தானியம் கொத்தித் தின்னும் கோழிகள் தம்முள் போரிட்டுக் கொண்டால் அதை எவரும் பொருட்படுத்தமாட்டார்கள். நோயினால் தனிமை யில் வருந்தும் ஒரு நங்கைக்கு இது உவமையாகக் கூறப் பட்டுள்ளது. இச்சுவையான பாடலைப் பாடிய புலவரின் பெயர் தெரியாமையால், தொகுத்தவர்கள் பாடலில் வரும் சிறப்பான பகுதியிலிருந்து இவருக்குக் 'குப்பைக் கோழியார்' என்றே பெயர் சூட்டிவிட்டார்கள்.[14]

*நன்றி :*

அரசலாபுரம் கோழிக்கல்லின் மசிப்படத்தை வழங்கிய மையத் தொல்லெழுத்தியல் துறை முதல்வர் டாக்டர் எம்.டி. சம்பத் அவர்களுக்கும், இந்தளூர் கோழிக்கல்லின் மசிப்படத்தைத் தந்துதவிய தமிழ்நாடு அரசு தொல்லியல் துறைத்தலைவர் நடன காசிநாதன் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகிறது.

*குறிப்புகள்*


1. இரா. நாகசாமி, செங்கம் நடுகற்கள், 1972; Seminar on Hero-stones, 1974; தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை.
2. தினமலர், பாண்டிச்சேரி பதிப்பு, 13-11-1991, பக்.5.
3. கொடுமுடி சண்முகன், தட்டச்சுப்படி, 13-12-1991.
4. சு. ராஜவேலு, 'Inscription from Arasalapuram', *Journal of the Epigraphical Society of India*, Vol.XXII, 1996, பக். 88-89, (இக்கட்டுரை வெளியான பிறகு இதன் ஆசிரியர் தாம் முகையுரு (முகையூர்) என்றே சரியாகக் குறிப்பிட்டிருந்ததாகவும், இதழில் பிழைபட அச்சாகியுள்ளது என்றும் என்னிடம் கூறினார்.
5. படங்கள் 2, 4: இவை கல்லின்மீது மெல்லிய தாள்களைப் பரப்பி நேரடியாக விளம்பிய வரைபடங்கள் (Tracings); கண்படிகள் அல்ல.
6. பி. வெங்கடேசன், 'An Early Inscription from Paraiyanpattu', *Epigraphia Indica*, XLII (1977-78: 1992), பக். 174-76.
7. DEDR : *Dravidian Etymological Dictionary*, Second Rev. Edn, T. Burrow & M.B. Emeneau, Oxford, 1984.
8. நடன காசிநாதன், 'தொண்டை மண்டலத்தில் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்', செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பதிப்பாசிரியர்: இரா. நாகசாமி (வரலாற்றுப் பேரவை, சென்னை, 1978) பக்.86-87.
9. தாமரைக்கண்ணன், 'நடுகல் கண்ட கீழ்ச்சேரிக்கோழி', தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, பதிப்பாசிரியர்: இரா. நாகசாமி (வரலாற்றுப்பேரவை, சென்னை 1979) பக்.120-29. (என்:கட்டுரையின் கடைசிப்பகுதியில் மிகவும் சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கும் இலக்கிய மேற்கோள்களை மேலும் பல விவரங்களுடன் தாமரைக் கண்ணன் தம் கட்டுரையில் முன்னரே தந்துள்ளார்).
10. புறப்பொருள் வெண்பா மாலை (மூலமும் உரையும்), உ.வே. சாமிநாதையர், முதல் பதிப்பு, சென்னை, 1991.
11. தொல்காப்பியம், சேனாவரையர் உரை.
12. நன்னூல் (மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும்), உ.வே. சாமிநாதையர், 5ஆம் பதிப்பு, சென்னை, 1991.
13. குறுந்தொகை (மூலம்), எஸ். ராஜம் பதிப்பு, சென்னை, 1957.
14. சங்க காலச் சிறப்புப் பெயர்கள், மொ.அ.துரை அரங்கசாமி, சென்னை, 1960, பக். 28-31.

## 2. விழுப்புரம் இராமசாமி படையாட்சியார் மாவட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள்.

*சி. வீரராகவன், மங்கையர்க்கரசி வீரராகவன், விழுப்புரம்.*

***2:1*** *விழுப்புரம் இராமசாமி படையாட்சியார் மாவட்டம், சங்கராபுரம் வட்டம், பாக்கம் ஏரி மதகுக்கு அருகில் உள்ளது.*

*பல்லவ அரசன் சிம்மவிஷ்ணு, யா.24, கி.பி.574 (?)*

ஊர் ஆநிரை கவர்ந்த அன்று சேடாரு என்பவனின் மகன் கட்டி இறந்து பட்டமைக்கு எடுக்கப்பட்ட நடுகல்.

1. *கோவிசைய சிங்க விண் [ண]*
2. *பரும [ற்] கு இருபத்து*
3. *நல்கவது இவ்வூர் தொறு கொண்*
4. *ட ஞான்று [சேடாரு] மக்*
5. *கள் கட்டி எறிந்து பட்டான்*
6. *... கல்.*



**2:2** விழுப்புரம் இராமசாமி படையாட்சியார் மாவட்டம், திண்டிவனம் வட்டம், ஓங்கூர் கிராமம், ஏரிக்கரைக்கு அருகில் உள்ள முருகன் கோயில்.

கி.பி. சுமார் ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டு.

இதுவரையில் கிடைத்துள்ள வட்டெழுத்து பொறிப்புகள் உள்ள நடுகற்களில் இந்நடுகல்லில் உள்ள வாசகம் மிகவும் குறைந்த சொற்களால் ஆனது. கொற்றன் மகன் ஊறன் ஆற்றிய வீரச் செயலுக்கு எடுக்கப்பட்ட நடுகல் ஆகும்.

1. *கோ... கொற்றன்*
2. *மகன் ஊற ன்*

**2:3** வட ஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், பள்ளூர் கிராமம், தொடக்கப்பள்ளிக்கு அருகில் உள்ள நவகண்ட சிலைக்கல்.

முதற் பராந்தகன், கி.பி.907-955

பழங்காலத்தில் மன்னன் நலன் பொருட்டும், மக்கள் நலன் பொருட்டும், நாட்டு நலன் பொருட்டும், ஊர்நலன் பொருட்டும் , வேண்டுதலின் பேரில் தன் உடலை ஒன்பது இடங்களில் அரிந்து கொண்டு உயிரை மாய்த்துக் கொள்ளும் முறை வழக்கத்தில் இருந்து வந்தது. இதனை நவகண்ட பலி என அக்காலத்தில் வழங்கி வந்தனர்.



பலகைக் கல்லால் ஆன இந் நவகண்ட சிலையில் அமர்ந்த நிலையில் உள்ள வீரனின் உருவம் தன் தலைமுடியை அருகில் நடப்பட்டுள்ள கழி ஒன்றில் கட்டப் பட்டும் தலை அரிந்து கொண்ட பின் அந்த ரத்தில் தொங்குவது போலவும் செதுக்கப் பட்டுள்ளது.

பலகைக் கல்லின் பின்பக்கத்தில் எழுத்துக் கள் இருந்து சிதைந்த நிலையில் காணப் படுகின்றது. மன்னன் பெயர் மட்டும் உள்ளது.

1. மதுரை கொண்ட கோபரகெசரி

2. (பன்மற்கு)... யாண்டு

3 - 10 ...

**2:4** விழுப்புரம் இராமசாமி படையாட்சியார் மாவட்டம், விழுப்புரம் வட்டம், புராணசிங்குபாளையம் என்னும் ஊரில் ஏரி மதகுக்கருகில் உள்ள தூம்பு

கி.பி.10ஆம் நூற்றாண்டு.

திருவாசல் அல்லது தூம்பு செய்யப்பட்டமை.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சாத்தந் கண்

2. ணந் வேணாட்டரையந்

3. இத் திருவாசல் செய்தாந்



## 3. புதிய குமிழிக்கல்வெட்டுகள்

**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்**

***3:1*** பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் மாவட்டம், திருப் பத்தூர் வட்டம், எஸ்.எஸ். கோட்டை என்ற சத்ரு சம்காரக் கோட்டை சியமுத்துக்கண்மாயின் பெரியமடைத் தூணில் உள்ள கல்வெட்டு.

கி.பி. 8-9ஆம் நூற்றாண்டு.

நல்லூர் பெருந்தச்சன் என்பவர் மடை செய்தது பற்றியது.

1. *ஸ்ரீ நல்லூர்*
2. *பெருந்தச்ச*
3. *ந் செய்த மடை*

***3:2*** மேற்படி மாவட்டம், மேற்படி வட்டம், செண்பகம் பேட்டை வளநிக் கண்மாயின் பெரியமடையிலுள்ள இணைப்புக் கல்லில் உள்ள கல்வெட்டு.

கி.பி. 13ஆம் நூற்றாண்டு.
மடை செய்தது பற்றியது.

1. *ஸ்வஸ்தி ஸ்ரீ இம்மடை*
2. *நோக்கிக் கால் நாட்*
3. *டிநமையால் வளநல்*
4. *லூராரோ*
5. *ம் பொந்ந*
6. *வயக்கல்*

***3:3*** புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம், வயலோகம் பெரிய கண்மாயின் பெரிய மடையிலுள்ள தூண் கல்வெட்டு.

கி.பி. 10ஆம் நூற்றாண்டு.

தீரங்காடி என்பவர் மடை செய்தது பற்றியது.

1. *ஸ்வஸ்தி ஸ்ரீ*
2. *தீரங்காடி*

*3. செய்வித்*

*4. த குமிழி*

***3:4*** அதே ஊர் பெரிய கண்மாய் வடக்கு மடையின் தூணில் உள்ள கல்வெட்டு.

கி.பி.13ஆம் நூற்றாண்டு.

தன்காடபீமன் என்பவர் மடை (மணவாளக்கால்) செய்தது பற்றியது.

*1. ஸ்வஸ்தி ஸ்ரீ இம்*

*2. ணவாளக்கால்*

*3. தந் காடை பீமன் உ*

***3:5*** புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், அரமலை என்ற ஊருக்குத் தென்புறத்திலுள்ள அய்யனார்கோவில் மலையில் சுவாமி சிலைகளிருக்குமிடத்திற்கு அருகில் பாறையிலுள்ள கல்வெட்டு

கி.பி. 1547.

அரசமீகாமன் நிலையில் இருந்த வலையர்க்கு, சவம் அடக்கம் செய்வதற்கும் துறை ஆற்றுவதற்கும் சுழுந்து இடவேண்டாம் என்று அவ்வூரார் ஆணையிட்டது பற்றியது.

*1. சகாத்தம் 1469 மேல் செல்லா நின்ற ஆனந்த வருஷம் சித்திரை 5 உ அரசமீகாமன் நிலை ஊராக அ*

*2. மைந்த ஊரவரோம் மேற்படியூர் வலவற்கு நின்றையம் இட்டபடிக்கு சவம் அடக்கிறதும் துறை ஆற்றுகிறதும்*

*3. மியானக் கரைக்கு சுழுந்து இடவேண்டாம் என்று சட்டன் இட்டுக் குடுத்தபடிக்கு அரச மீகா*

*4. மன்நிலை ஊரவர் சொற்படிக்கு வாழைக்குறிச்சி தொண்டை மானார்.... பெருமாள் எழுத்து உ.*

***3:6*** புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், பொன்னமராவதி நகர், வலம்புரி வடுகநாதன் உயர் நிலைப்பள்ளிக்கு அருகிலுள்ள சந்திவீரன் கல்லில் உள்ள கல்வெட்டு.

கி.பி. 1462-63

சமர கோலாகல நல்லூர் என்ற ஊருக்கு மாவலிவாணர் சுந்தரத் தோளுடையார் அடைக்கலம் (ஆசிரியம்) கொடுத்தது.

*1. சுபமஸ்து சித்ரபா*
*2. னு வருஷம் சித்திரை*
*3. 8 உ ஸ்ரீமந் மூவரா*
*4. யர் கண்டந் கண்*
*5. டநாடு கொண்டு*
*6. கொண்ட நாடு*
*7. குடாதான் வீரக*
*8. ஞ்சுகன் வேதியர்*
*9. காவலன் சமர*
*10. கோலாகலன் இர*
*11. சமிசர கண்டன்*
*12. பூபால கோபால*
*13. ன் புவனேக வீரந்*
*14. மதியாத மன்னர்*
*15. மணவாளன் ப*
*16. கர வீரபயங்கர*
*17. ன் பட்டமானங்*
*18.காத்தான் ஸ்ரீ வீரப்*
*19. பிரதாப மாவலி வாணாதராய*
*20. குமாரர் சுந்தரத் தோளுடை*
*21. யார் ஆசிரியமான பொன்னமராப*
*22. ...ச சமரகோலாகல நல்லூர்*
*23. ... பட்டமானங்காத்த ....*

**3:7** புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், செவ்வலூர் சேகரம் மலையடிப்பட்டி அந்நூத்தன் கண்மாய்க் கரை ஓரத்திலுள்ள சிறிய பாறையில் உள்ள கல்வெட்டு.

கி.பி. 15ஆம் நூற்றாண்டு

முழுமையாக இல்லை.

*1. ஸ்ரீமந் மூவராயர் கண்டன்*
*2. சமர கோலாகலன் பட்டமா*
*3. னங் காத்தான் ... வீரபிரதாவ*
*4. திருமாலிருஞ்சோலை நின்றார்*
*5. மாவலி வாணாத ராயர்கு செல்*
*6. லாநின்ற சகாத்தம் 1398ன்*
*7. மேல் உ. வருஷம் ....*

# 4. சாலைக்கிராமம் பாண்டியர் கல்வெட்டுகள்

சொ. சாந்தலிங்கம், மதுரை.

பசும்பொன் தேவர்திருமகன் மாவட்டம், இளையான்குடி வட்டம் சாலைக்கிராமத்தில் புதிதாகக் கட்டப்பட்ட சேதுமாகாளி அம்மன் கோயில் அருகில் புதிய இரு கல்வெட்டுகள் கிடைத்தன. இக்கல்வெட்டுகள் பற்றிய செய்தியைத் தெரிவித்தவர். சாலைக் கிராமத்தைச் சேர்ந்த பொன்னுச்சாமி செட்டியார் அவர்கள்.

முதல் கல்வெட்டு வட்டெழுத்தால் ஆனது. கல்வெட்டு முழுமையாகக் கிடைக்கவில்லை. காலம் சுமார் கி.பி.10ஆம் நூற்றாண்டு, இரண்டாம் கல்வெட்டு கி.பி.13ம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களால் ஆனது. மன்னன் பெயரோ மெய்க்கீர்த்தியோ இடம் பெறவில்லை. பஞ்சாங்கக் குறிப்புகளைக் கொண்டு முதலாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1190-1216) காலத்தது எனக் கருதலாம்.

**4:1.** வட்டெழுத்து, கி.பி.10ஆம் நூற்றாண்டு.

*1. ......வி*
*2. யாபாரி அல*
*3. ங்கார செட்டி*
*4. யாயின குழ*
*5. வம் பாண்டன்*
*6. செய்து நாட்*
*7. டுவிச்ச நி*
*8. லை*

**4:2** முதல் சடையவர்மன் குலசேகரன், யா. 13 11 (கி.பி.1214)

திருவாய்க்குலத் தெம்பெருமான் கோயிலுக்கு சில உள்ளூர் வரிகள் நீக்கி சாலைக்கிராம சபையார் கொடுத்தமை. சபையின் சில உட்குழுக்களும் இதில் ஈடுபட்டன.

*1. யாண்டு பதின் மூன்*
*2. றாவது எதிர்பதினொ*
*3. ன்றாமாண்டு கன்னி*
*4. நாயற்று அமர ப*
*5. க்ஷத்து சப்தமியும் சனிக்*

6. கிழமையும் பெற்ற ரோகணி
7. நாள் துவ்வூர் கூற்றத்து ப்ர
8. ஹ்மதேயம் ஸ்ரீஸாலைக் ராம
9. த்து மஹாஸபையும் ஸ
10. பைக்குச் சமைந்த பண்ணை
11. செய்வோமும் வேலி செய்
12. வோமும் இவ்வனைவோம் இவ்
13. வூர் நாலாஞ் சேரியில் திருவா
14. ய்குலத் தெம்பெருமானுக்கு
15. த ர்மதானம் பண்ணிக்
16. குடுத்த பரிசாவது
17. இவ்வெம்பெருமா
18. ன் திருவிடையாட்
19. டநிலத்தில் விரிவினி
20. ல் அரையே இரண்
21. டு மாநிலத்தால்
22. வந்த ஸபா வினி
23. யோகங்களும் க
24. ர்ப்பூரவிலையும் திருவெழு
25. ச்சி இறுக்க வேண்டிவந்த
26. ததாகில் திருவெழுச்சியும்
27. மற்றும் எப்பேர்ப்பட்டன
28. வீயக்கடவ விநியோகங்களெ
29. ல்லாம் இந்நிலம் அரையே
30. இரண்டு மாவுக்கும் சந்திரா
31. தித்தவற் இறுப்பதல்லவா
32. க ஸம்மதித்து தர்மதான
33. ம் பண்ணிக்குடுத்தோம்
34. இத்திருவாய்க்குலத்
35. தெம்பெருமானுக்கு மஹா
36. ஸபை யும் ஸபை த்கு
37. சமைந்த பண்ணை செய்
38. வோமும் வேலி செய்வோமும்.

# 5. முதலாம் பராந்தக சோழன் மேலப் பழுவூர்க் கல்வெட்டு

**சு. சுவாமிநாதன், மைசூர்.**

திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார்பாளையம் வட்டம், மேலப்பழுவூர் அகஸ்தீஸ்வரர் கோயிலினுள் அமைந்த சோளேசுவரர் கோயிலின் வடக்குச் சுவர். (இக. 1924, எண் 386)

முதலாம் பராந்தக சோழன், யா.40 (கி.பி.947)

அவநிகந்தர்ப்ப ஈசுவரர் கோயிலைச் சார்ந்த நடன மங்கையான (கூத்தப்பிள்ளை) நக்கன் அய்யாற்றடிகள் என்பார் இக்கோயிலுக்கு உரிமையான (தேவதானமான) பொய்கை நாட்டிலுள்ள ஊரகன்குடி என்ற கிராமத்தில் பாழாகக் கிடந்த நான்கு மா நிலத்தை கோயிலிடமிருந்தே விலைக்கு வாங்கினார். அந்நிலத்தைத் திருத்தி பண்படுத்தி நீர்நிலமாக மாற்றி இதனால் வரும் விளைச்சலை ஒரு நொந்தா விளக்கெரிப்பதற்கு இக்கோயிலுக்கே அளித்தார்.

1. *ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேசரி பந்மக்கு யா*
2. *ண்டு 10ஆவது குன்றக் கூற்றத்து தே ுவதா ுனம் அவநி கந்தர்ப்ப ஈச்வர*
3. *க் ருஹத்து த ுண்டீச்வர படாரரிடை இத்தளிக் கூத்தப்பி [ள்] ளை*
4. *நக்கன் அய்யாற்றடிகளித் தளி தே ுவதா நம் பொய்கை நா-*
5. *ட்டு ஊரகன் குடி அபோஹனங்கிடந்த பூ ுமியை விலைக்கு கொண்*
6. *டு கல்லி இரண்டு பூவும் விளைய நீர்நிலம் நான்கு மாவும்*
7. *இதின் போந்த போ ுகங் கொண்டு சந்த்ராதித்தவத் ஒரு நொ*
8. *ன்தா விளக்கு இரவும் பகலும் எரிப்போமானோம் இத்தளி*
9. *பட்டுடையோம் எழுவோம் இது பந்மாஹேச் ுவர ரக்ஷை.*

சோழர் காலத்திய பொருளியல் வரலாற்றில் முதலாம் பராந்தக சோழரின் ஆட்சி குறிப்பிடத்தக்கது. இம்மன்னர் காலத்தில் ஏராளமான தரிசு நிலங்கள் விளை நிலங்களாக மாற்றப்பட்டன. இவர் கல்வெட்டுக்களில் கல்லி, வயக்கி, திருத்தி, மசக்கி போன்ற சொற்றொடர்கள் மலிந்து காணப்படுகின்றன. இதே கோயிலிலுள்ள இவரது கல்வெட்டுக்கள்[1] கோயிலுக்கு உரிமையான பல பாழ்நிலங்களை பலரும் விலைக்கு வாங்கி திருத்தி கோயிலுக்கு அளித்தனர் என்று தெரிவிக்கின்றன.

சோழ அரசை உருவாக்கிய விசயாலயனும், முதலாம் ஆதித்தனும் போர்களிலேயே தங்கள் ஆட்சியைக் கழித்தனர். முதலாம் பராந்தக சோழனும் பல போர்களில் ஈடுபட்டிருந்தாலும் இவனுடைய ஐம்பது கால நீண்ட ஆட்சி மக்களின் பொருளாதார மேம்பாட்டுக்காக அமைந்திருந்தது. வேளாண்துறையில் அதிக கவனம் செலுத்தப்பட்டது. பல சீர்திருத்தங்களும், பல நிர்வாக அமைப்புகளும் உருவாக்கப்பட்டன.[2] மூவேந்தர் வேளார் என்ற உயர் அரசியல் அலுவலர் பதவியும், புரவுவரி திணைக்களம் என்ற அலுவலும், வேளாண்துறையை ஒட்டி இவர் காலத்தில் உருவாக்கப்பட்ட பதவிகளாகும்.[3] அல்லூர், திருச்செந்துறை, நங்கவரம், கீழ்பழுவூர், திருத்தணி போன்ற பல ஊர்களில் கிடைக்கும் கல்வெட்டுக்கள் ஆக்கப்பணிக்காகப் பல தரிசு நிலங்கள் விளைச்சலுக்கு கொண்டுவரப்பட்டதைத் தெரிவிக்கின்றன.[4] இதனால் கோயில்களும் சமூகமும் பயனடைந்தன எனலாம்.

---

அடிக்குறிப்புகள்

1. *இக. 1926, எண்கள். 369, 380, 386, தெக. 8, எண். 460. தெக. 13, எண். 227, 235, 298.*

2. *சு. சுவாமிநாதன், வேளாண்குடிகளும் முற்காலச் சோழரும் (1992).*

3. *எ. சுப்பராயலு,* "The Cola State", *Studies in History* (vol.iv)

4. *தெக.8, எண் : 689, 690, 698, 699, 611, 612; 13 எண் : 227, 235, 298*

## 6. கொல்லிமலைச் செப்பேடு

வெ.இரா. துரைசாமி, நாமகிரிப்பேட்டை.

சேலம் மாவட்டம் கொல்லிமலை, சித்தூர்நாட்டு முன்னாள் ஊர்த்தலைவர் வெள்ளைய கவுண்டர் மகன் வெங்கடாசலம் என்பவரிடம் இச்செப்பேடு உள்ளது. இவர் தற்போது சேலம் மத்திய தந்தி அலுவலகத்தில் பணியாற்றி வருகிறார். தங்கள் குடும்பத்தின் சொத்தாக இதைக் கருதுகிறார். இரண்டு ஏடுகளில் இரு பக்கத்திலும் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஏட்டின் மேல் இடது மூலையிலும் சிறிய துளை உள்ளது. செப்பேட்டைக் கோர்த்து வைக்க வாகாக இத்துளைகள் உள்ளன. செப்பேட்டுச் செய்திகள் முழுமை பெறவில்லை. அதனால் இவ்விரண்டேடு களைத் தவிர மீதம் ஒன்றோ இரண்டோ ஏடுகள் இருத்தல் வேண்டும். இச்செப்பேடு கி.பி.11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. பொன்மாடத்தாண்ட மணிமுடி மகாராஜர் ஆட்சியின் ஏழாம் ஆண்டில் எழுதப்பட்டது.

முதல் ஏடு-முதல்பக்கம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பொன்மாடத்தாண்ட மணி முடிமாஹாராஜர் ஆட்
2. சிக்குச் செல்லா நின்ற யாண்டு ஏழாவது கொல்லிம
3. லை மேல் குச்சக நாட்டுக் கருங்கயத்து நகரத்துக்
4. குப் புலவெல்லை தெரித்த பரிசாவது திருவற
5. ப்பள்ளி தேவர் நிலத்தோடு கருங்கயத்தார் நில
6. த் தோடெல்லையாவது கட்டியந் சாத்தந் ஆறெய்
7. பிடித்துக் குவளைக் கழந்நிக்கேய் வந்து நட்ட
8. புதலேய் புதாலாக மீகரைக் கருங்கயத்து நகரத்தாரது கு
9. வளை கழந்னித்தலைக் கழந்னியூற்றுக்கேய் சென்று

முதல் ஏடு - இரண்டாம் பக்கம்

10. கிழக்கு நோக்கி இற்றியொடு கல்லுக்கேய் சென்று கிழ
11. க்கு நோக்கி சென்று திடுதிடுக்கை அறைக்கேய் சென்று கிழக்கு
12. நோக்கி சென்று வடவூர் ஏரியேய் சென்று பூதப் பருதைய்க்
13. கேய் செந்று சேற்றாம்பலொடுடறெக்கேய் செந்று கல்
14. லூரலுக்கேய் சென்று ஆற்றுக் கேய் செந்றற்றது. தேவர் நிலத்தி

15. ல் எல்லை கருங்கயத்து நகரத்துக்கு வலப்பெருகோடு எல்

16. லையாவது வடக்கு நோக்கி சென்று ஆறாறெய் வுற்றது கருங்

17. கயத்து நகரத்தார்க்கும் பெருங்கறைக்குமே யெல்லை

18. யாவது வடக்கு நோக்கி ஆறாறெய் செந்றறருவிக்கே அற்ற

19. து பெருங்கறைய் கோட்டை எல்லை கருங்கயத்து

இரண்டாம் ஏடு - முதல்பக்கம்

20. நகரத்தாரொடு அருவியூரொடு மெல்லையாவது அருவி பு

21. ணைத்துறையில் நின்றேறிக் கள்ளாரந் பள்ளி குந்று

22. க்கேய் வந்து இந்திரபாடெல்லாம் நகரத்தாரது அந்நி

23. டாடு அருவியூரது கடுகுகால் குந்றுக்கேய் வந்து ஆற்று

24. க்கேய் வந்து ஆற்றி நின்று மயிலாடிப் பருதைக்கேய் வ

25. ந்து கற்கடைக்கேய் வந்து கற்க்கடை மேலை இற்றி

26. கல்லுக்கேய் வந்து ஊமையந் வாரை தலை செட்டுக்

27. கேய் வந்து நுணர்க்கற்றைக் கறாய்க்கேய் வந்து கடறு

28. கேய் வந்து வெள்ளைக்கல்லுக்கேய் வந்து நெட்டறை ஆடி

29. க்கேய் வந்து விழுத்தியலூற்றுக்கேய் வந்து பெரிய

30. வாறைக்கேய் வந்து எருவம்புல்லொடறைக்கேய்

இரண்டாம் ஏடு - இரண்டாம் பக்கம்

31. வந்து வடக்கு நோக்கி கீழருக்கறைக்கேய் வந்து ந

32. ன் நலப்பருதைக்கேய் செந்று தியாவகையார் எல்லை

33. க்கேய் சென்றறது. அருவியூரார் எல்லை கருங்கயத்து நக

34. ரத்தாரொடு தியாவகையாரொடெல்லையாவது பால்லுண்

35. டந் பருதைக்கேய் செந்று பூண்டியது கல்லுக்கேய்

36. சென்று கல்லுருட்டி ஆறே செந்று பெகறங்ககேய்

37. செந்று ஆறாறாறெய் செந்று இழிந்துப் பள்ளத்துக்

38. கேய் செந்றறது தியாவகையார் கோட்டை எல்லைய்

39. பூண்டியர்கொடு கருங்கயத்து நகரத்தாரொடெல்

40. லையாவது ஆற்று நின்றுத் தெற்க்கு நோக்கி

**விளக்கக்குறிப்பு:**

கொல்லிமலை குச்சகநாட்டுக் கருங்கயம் என்ற ஊரின் எல்லையும், திருவறப்பள்ளி தேவர் நிலத்து எல்லையும் இதில் குறிப்பிடப்பட்டு அறுதி செய்யப்படுகின்றன. நிலத்தின் எல்லை,

அருவி, பாறை, ஆறு, குன்று, ஏரி, கழனி, பருதை, கிராய் முதலியவற்றைக் கொண்டு விளக்கப்படுகிறது. மலைப்பகுதியில் இவ்விடங்களே இருத்தல் முடியும். பருதை, கிறாய் என்பன மலைப்பகுதியில் உள்ள சமவெளியையும், பயிர் செய்யப்படும் நிலத்தையும் குறிக்கும். கட்டியன் சாத்தன் என்ற பெயரும் உள்ளது. பெருங்கிறாய்க் கோட்டை, தியாவகையார்க்கோட்டை என்ற கோட்டைகளும் இதில் குறிப்பிடப்படுகின்றன.

**கருங்கயம்:**

தற்போது குச்சகநாடு என்ற பிரிவு வழக்கில் இல்லை. கொல்லிமலையில் உள்ள பதினான்கு நாடுகளில் அரியூர் நாட்டைச் சேர்ந்த மேல் கலிங்கம் என்ற ஊரே இங்குக் குறிப்பிடப்படும் கருங்கயம் ஆகும். கருங்கயம் அறப்ப்ள்ளி ஈசுவரர் கோயிலிலிருந்து வடமேற்கில் மூன்று கல் தொலைவில் உள்ளது. ''மேல் கலிங்கம் கருங்கயத்து நகரத்து'' என்னும் தொடரால், இவ்வூர் அக்காலத்தில் வணிகர்களின் இருப்பிடமாக இருந்துள்ளது எனலாம்.

மேலும் ''கருங்கயத்து நகரத்துப் பல குடிகளாய்க் கடவ பொன்'' என்றும் அறப்பள்ளி ஈச்வரர் கோயில் கல்வெட்டும் இக்கலிங்கத்தில், வணிகர்களேயன்றிப் பல்வேறு குடிகளும் இருந்துள்ளனர் என்பதைத் தெரிவிக்கின்றது. 'வெருனூர் அறப்பள்ளி செட்டி' என்றும், 'கொல்லிமலை நாட்டு ஐந்நூற்றுவர் ரக்ஷை', என்றும் அறப்பள்ளி ஈச்வரர் கோயில் கல்வெட்டுகள் குறிப்பிடுவதால், கொல்லி மலையில் வணிகர் குழுக்கள் இருந்தமை உறுதி செய்யப்படுகின்றது.

வரலாற்றில் புதியதாக பொன்முடி மாடத்தாண்ட மணிமுடி மஹாராஜன் என்ற தலைவன் பெயர் காணப்படுகிறது. ஆட்சியாண்டு கொடுத்துச் செப்பேடு வெளியிடும் அளவுக்குச் செல்வாக்குப் பெற்றவனாக இருந்துள்ளான். அறப்பள்ளி ஈச்வரர் கோயில் கல்வெட்டில் 'பொன்னேரி வர்மன்' என்ற பெயர் வருகிறது. அப்பொன்னேரிவர்மனும் இப்பொன்மாடத்தாண்ட மணிமுடி மகாராஜரும் ஒருவராக இருத்தல் வேண்டும். மற்றபடி இப்பெயரில் மலையிலும் கீழேயும் தொடர்புடைய செய்திகள் கிடைக்கவில்லை. கொல்லிமலையின் தெற்கில் எருமைப்

பட்டியை ஒட்டிப் பொன்னேரி என்ற சிற்றூர் உள்ளது. ஒருவேளை இவ்வூர் இத்தலைவன் பெயரில் ஏற்பட்டதாக இருத்தல் வேண்டும்.

மேல் கலிங்கத்தில் சோழமுடையான் கோயில் என்ற சிவன் கோயில் உள்ளது. இது சேலமுடையான் என்றும் வழங்கப் படுகிறது. பழமையான இக்கோயில் அண்மைக்காலத் திருப் பணியினால் முற்றிலும் மாறுபட்ட, சாதாரணக் கட்டடமாக உள்ளது. இக்கற்களின் சுண்ணாம்புப் பூச்சுக்குள் சில கல்வெட்டுத் தொடர்கள் தொடர்பின்றி உள்ளன. ''தூணிப்பதக்கு'', ''கருங்கயத்து நகரத்து'', என்ற தொடர்கள் காணப்படுகின்றன. இவை கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும். இக்கோயில் சோழ அரசன் ஒருவனாலோ அல்லது அவன் பெயரிலோ கட்டப்பட்டிருத்தல் வேண்டும். அண்மையில் உள்ள அறப்பள்ளி ஈச்வரர் கோயிலில் உத்தம சோழன் தொடங்கிப் பல சோழ அரசர்களின் கல்வெட்டுகள் உள்ளன. செம்பியன் மாதேவியார் நூறு கழஞ்சு பொன்னைக் கொல்லிமலையில் உள்ள பன்னிரண்டு ஊரவரிடம் கொடுத்து, அதன் வட்டியைக் கொண்டு ஒவ்வொரு மாதமும் கார்த்திகை நாளன்று வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்ததைப் பற்றி உத்தமசோழன் கல்வெட்டுக் கூறுகிறது. அப்பன்னிரண்டு ஊர்களில் கருங்கயமும் ஒன்று. சோழமுடையான் கோவிலின் அருகில் கல்செக்கு ஒன்றுள்ளது. அதில், ''ஸ்வஸ்திஸ்ரீ இச்செக்கு உள்ளூர் மாதேவர்க்கு குடுத்தேந் அறப்பள்ளி சாத்தநேந்'' என்ற கல்வெட்டுள்ளது. அறப்பள்ளி என்ற இறைவன் பெயருடன் தம் குலப்பெயரையும் குறித்துள்ளான். செப்பேட்டிலும் கட்டியன் சாத்தன் என்ற பெயர் வந்துள்ளது. வாசலூர்ப்பட்டியில் செக்கில் உள்ள மற்றொரு கல்வெட்டில், பன்றி சாத்தன் என்ற பெயர் உள்ளது. இன்றும் மலைவாழ் மக்களிடையே வழங்கும் குலப்பிரிவுகளில் 'சாத்தன்' என்பதும் ஒன்றாகும்.

சோழமுடையான் கோவிலின் சற்று மேற்கில் சமண தீர்த்தங்கரர் சிலை உள்ளது. சமணாண்டிப்பாட்டன் என்று தற்போது மக்கள் வழங்குகின்றனர். கோவில் இருந்து அழிந்து போன சுவடுகள் ஆங்குள்ளன. சமண தீர்த்தங்கரர் சிலையிலிருந்து

சற்று வடக்கே சோலையில் அழகிய துர்க்கையின் சிலை உள்ளது. ஏறக்குறைய நான்கடி உயரமுள்ள இச்சிலை அழகிய வேலைப்பாடு கொண்டது. இச்சிலையைத் தற்கால மக்கள் கொல்லிப்பாவை என்று கூறுகின்றனர். கொல்லிப்பாவைக்கும் இத்துர்க்கை சிலைக்கும் தொடர்பில்லை. இத்துர்க்கை சிலைக்குப் போகும் வழியில் ஐயனாரின் சிற்பம் உள்ளது. இதுவும் புதரடைந்து கிடக்கின்றது.

மேற்கண்ட செய்திகளைக் கொண்டு பார்க்குமிடத்துக் கருங்கயம் என்ற ஊர் வணிக இருப்பிடமாகவும், பல்வகைச் சமயங்களின் நிலைக்களனாகவும் சிறப்புப் பெற்றிருந்தது எனலாம்.

---

நன்றி : இக்கல்வெட்டினைப் பற்றி தெரிவித்தவர் தொல்லியல் துறை கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர் ஜெ. முருகேசன். கல்வெட்டினைப் படியெடுக்க உதவியவர் ப. இராசேந்திரன், பதிவு அலுவலர் அலுவலகம், திருச்சி.

# 7. தேவிமங்கலம் அக்கரைப்பட்டி ஏரிக்கரை கல்வெட்டு

**கி. ஸ்ரீதரன், திருச்சிராப்பள்ளி.**

திருச்சிராப்பள்ளி - பெரும்பிடுகு முத்தரையர் மாவட்டம், லால்குடி வட்டம். தேவிமங்கலம், அக்கரைப்பட்டி. சமயபுரம் - கரியமாணிக்கம் சாலையில் 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஏரியின் கரையில் இயற்கையாய் அமைந்த பாறையில் பொறிக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் குலோத்துங்க சோழன், யா.20 (கி.பி. 1198).

ஏரியின் கரை உடைப்பைக் கடும்பனவன் தியாகவினோத வேளான் என்பவன் சரி செய்து, கரையை உயர்த்தி 'அஞ்சாத பெருமாள் ஏரிக்கரை' எனப் பெயரிட்டான்.

*1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்கரவர்தி*

*2. கள் ஸ்ரீ குலோத்துங்க சோழ*

*3. தேவற்கு யாண்டு இருபதாவ*

*4. து தலை கொண்ட குலோத்துங்*

*5. க சோழவாணவ தரையன் ப*

*6. ணியால் இக்குளம் உடைந்து இற*

*7. ங்கிக் கிடந்தமையில் இவ்வு*

*8. டைப்பு அடைத்தான் கொடு*

*9. ம் பனவன் தியாக வினோத வேளா*

*10. ன் இக்கரைக்குப் பேர் அஞ்சாத*

*11. பெருமாள்*

## 8. வெள்ளாறு-கொள்ளிடம் ஆற்றுப் பள்ளத்தாக்கில் ஏரி-தூம்பு கல்வெட்டுகள்

**இல. தியாகராஜன், அரியலூர்.**

அரியலூர், பெரம்பலூர், உடையார்பாளையம் உள்ளிட்ட வெள்ளாறு-கொள்ளிடம் ஆற்றுப்பகுதியில் உள்ள ஊர்களில் ஏரி, தூம்பு, வாய்க்கால், கிணறு ஆகியவை அமைக்கப்பட்டதைத் தெரிவிக்கும் புதிய கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. அவை அந்தந்தப் பகுதியில் வாழ்ந்த காணியாளர், நிலக்கிழார்களால் அமைக்கப்பட்டதைக் காட்டுகின்றன. இது நிலவுடைமைச் சமுதாய வளர்ச்சியையும் இப்பகுதியில் சோழர் காலத்தில் பிராமணர் அல்லாதார் காணியாளராக செல்வாக்குப் பெற்று திகழ்ந்ததையும் அவர்களின் சமுதாய உணர்வையும் நமக்குக் காட்டுவனவாக உள்ளன. இக்கல்வெட்டுகளைக் கண்டுபிடிக்க உதவிய உதவிப் பேராசிரியர் எஸ். பாண்டியன், மாணவர் எஸ். சுப்பிரமணியம் ஆகியோருக்கு என் நன்றி உரியது.

***8:1*** பெரம்பலூர் வட்டம், கொளக்காநத்தம் ஊர்த் தெருவில் குமரவேல் ஆசிரியர் வீட்டு படிக்கல்

மூன்றாம் இராஜராஜன். யா.10, கி.பி. 1226.

*1. ஸ்வஸ்திஸ்ரீ*
*2. இராஜராஜதேவற்கு*
*3. யாண்டு 10வது இத்*
*4. தூம்பு செய்வித்தான்*
*5. ஊற்றத்தாருடையா*
*6. ன் சுருதிமான் சனநாதர்*
*7. அரைய தேவநான*
*8. வாண வி*
*9. ச்சாதிர நா*
*10. டாழ்வான்*

**8:2** பெரம்பலூர் வட்டம், சாத்தனூர் ஏரிக்கரையின் கீழ் நடப்பட்டுள்ள மதகுகல்.

*கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு.*

1. *ஸ்வஸ்திஸ்ரீ*
2. *இத்தூம்பு அரங்*
3. *கன் அரையன்*
4. *செய்வித்தான்*
5. *சாத்தந்நூர்*
6. *உடையான்*

**8:3** அதே இடம் மற்றொரு கல்லில் (மூன்று சிறு வரிகளில்).

*ஸ்ரீ விளக்கினை மனகதி*

**8:4** துறையூர் வட்டம், துறையூர் வேணுகோபால ஸ்வாமி கோயில் முன்மண்டப வடசுவர் பீடம்.

கி.பி. 12-13ம் நூற்றாண்டு.

1. *[ஸ்வஸ்திஸ்ரீ இத்] திருமஞ்சணக் கிணறு செய்தான் பல்லபுரமுடை*
2. *அமுதனான அழகிய மணவாள நம்பி*

**8:5** அரியலூர் வட்டம், கீழக்குளத்தூர் வண்ணான் குளக்கரை கல். மூன்றாம் இராஜராஜன் (கி.பி.1226).

1. *ஸ்வஸ்திஸ்ரீ திரி இ*
2. *ராஜ இராஜ*
3. *தேவற்கு யாண்*
4. *டு 10வது இக்கிண*
5. *று பெருங்கம்ப*
6. *னூருடையான் பெ*
7. *ரியான் பொன்ப*
8. *ரப்பிநான் தர்ம*
9. *ம்*

**8:6** திட்டக்குடி வட்டம், சத்தியவாடி ஆலந்துறையார் கோயில் தூண். மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1186).

| | | | |
|---|---|---|---|
| *1.* | *ஸ்வஸ்திஸ்ரீ கு* | *7.* | *ம்பு இட்* |
| *2.* | *லோத்து* | *8.* | *டாந் ஆட்* |
| *3.* | *ங்க சோழ* | *9.* | *கொண்டா* |
| *4.* | *தேவர்க்கு* | *10.* | *ந் காட* |
| *5.* | *எட்டாவ* | *11.* | *வராதித்* |
| *6.* | *து இத்தூ* | *12.* | *தன்* |

**8:7** விருத்தாசலம் குமாரதேவர் மடம் கிழக்கு வாயில் உட்கூரை.

கி.பி. 12ஆம் நூற்றாண்டு.

| | | | |
|---|---|---|---|
| *1.* | *...* | *11.* | *ன் மகன் ஆட்* |
| *2.* | *... இ* | *12.* | *கொண்ட நாய* |
| *3.* | *த்தூம்புக்கு* | *13.* | *னான ராஜரா* |
| *4.* | *க் கிழக்கு ஏரி க* | *14.* | *ஜக் காடவரா* |
| *5.* | *ல்லுவித்து இத்* | *15.* | *யர் பிரியா வே* |
| *6.* | *தூம்பிட்டார்* | *16.* | *ளைக்காறி கே* |
| *7.* | *உறுமூர் அசல* | *17.* | *ய வல்லியார்* |
| *8.* | *குலோத்தமன்* | *18.* | *இத்தூம்பின்* |

| | | | |
|---|---|---|---|
| *9.* | *ஏழிசை மோக* | *19.* | *பேர் பிரியாவ* |
| *10.* | *ன் காடவராய* | *20.* | *ல்லியார்* |

**8:8** திட்டக்குடி வட்டம், ஆவட்டிக் குடிகாடு அரசமரத்தடி பிள்ளையார் கோயிலில் உள்ள கல்

கி.பி. 12-13ஆம் நூற்றாண்டு

*1. ஸ்வஸ்திஸ்ரீ இத்த*
*2. ன்மம் வேட்பூருடை*
*3. யான் நெதியந் விச*
*4. யாபரணப் பல்லவ*
*5. ரையந் இ வாய்க்கால்*
*6. வெட்டுவானாந வி*
*7. சையாபரண பல்*
*8. லவரையநேன் உ*

**8:9** உடையார்பாளையம் வட்டம், விக்கிரமங்கலம் வரதராஜ பெருமாள் கோயில் உட்கூரை துண்டுக்கல்.

கி.பி.12ஆம் நூற்றாண்டு.

*1. சேந்தமங்கலமுடையான்*
*2. அரையன் எதிரிலிசோழனா*
*3. ந இருங்கோள ரவியன்*
*4. பேரால் நியாய பரிபாலன் கலி*
*5. ங்கு இது செய்வித்தார் விரு*
*6. தராஜ பயங்கர வளநாட்டு மே*
*7. ற்கால் நாட்டு புலியூருடையா*
*8. ன் புகலோகசுந்தரன்*
*9. திருச்சிற்றம்பலமுடையாந்*
*10. அவனி விச்சாதிர பல்*
*11. லவரையன்*

# 9. கழனிப்பாக்கம் கல்வெட்டுகள்

ம. காந்தி, வேலூர்;
ப. வெங்கடேசன், பாணாவரம்.

**9:1.** வட ஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டம், வேலூர் வட்டம், கழனிப்பாக்கம் என்னும் ஊரில் பீமீஸ்வரர் கோயிலில் கருவறை மேற்கு வெளிச்சுவர் முப்பட்டை குமுதத்தில் உள்ள கல்வெட்டு

மூன்றாம் இராசராச சோழன், கி.பி. 1227.

கழனிப்பாக்கத்து ஸபையார் இவ்வூரிலுள்ள பீமீசுவரர்க்கு ஆயிரத்து இருநூற்று நாற்பது குழி நிலமும் ஒரு விளக்கும் தானமாக விட்டுள்ளனர்.

1. *ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜகேசரி பன்மற்கு யாண்டு பதினொன்றாவது படுவூர் கோட்டத்து மீயாறை நாட்டு கழனிப்பாக்கத்து ஸபையோம் வைத்த பரிவர்த்தனை யாவ*
2. *து எங்களூர் தேவர் பீமீச்வர தேவர்க்கு முன்பு உடைய பல்லைய சோமாசி நத்தமும் விராகிழா ஏதகுண்டில்களும் தவிர இன்னிலத்துக்கும் தேவ தேவற்கு பக்கல் பெறும் விலையும் கொண்டு விட்ட நிலம்*
3. *தேவதேவர் போகத்துக்கும் தென்பாற்கெல்லை விசய கோமான் தரம்பின்கீழ் மாவண்டு பெருங்காலுக்கு வடக்கும் கீழ்பாற்கெல்லை ஏரிப்பட்டிக்காலுக்கு மேற்கும் வடபாற் கெல்லை*
4. *யமுதேத்தது கிழக்கும் எங்களூர் மஞ்சிக்கமான குழியில் மேல்பாற் கெல்லைக்கு கிழக்கும் உண்ணில மொழியின்றி ஆயிரத்து இருநாற்று நாற்பது குழி நிலம் ஒரு விளக்கும் இரண்டு திருவமுதுக்கும் சந்திராதித்தவல் ப்ரசியமாக வைத்தோம் ஸபையோம்.*

**9:2** அதே ஊரில் பீமீஸ்வரர் கோயிலில் மகாமண்டபத்தின் கிழக்கில் முப்பட்டை குமுதத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

கம்பண்ண உடையார், கி.பி.14 நூற்றாண்டு.

கழனிப்பாக்கத்திலுள்ள பீமீசுவர நாயனார்க்கு அவ்வூரார் நாலுவேலி நிலம் தேவதானமாக விட்டுள்ளனர்.

1. *ஸ்வஸ்திஸ்ரீ மந் மகாமண்டலேஸ்வரர் ஸ்ரீபொக்கண உடையார் குமாரர் கம்பண்ண உடையார் மகா ப்ரதானி சோமய தெண்ணாயக்கர் ஆந்தி நாட்டு கெழனிப் பாக்கத்து உடையார் பீமீசுவரமுடைய நாயனார் கோயில் தானத்தார்க்கு குடுத்தப் பட்டயப் பிரதானப்படி*

2. *முன்னாள் இராச காரியத்துக்கு நாயனார்க்கு பிராதித நிலம் இரண்டுக்கு இராச காரியம் கைசேருகையில் முன்பு தேவதானம் இரண்டு வேலி நிலம் நீங்கலாகக் குடுத்த நிலம் இரண்டு ஆக க்ரோத வருஷம் ஆடி மாதம் முதல் சந்திராத்திவரை நடக்க பழைய...ப்படி*

3. *நிலம் நாலுக்கு கடமை ஆயம் கோமுற்றுப்பேறு உள்ளிட்ட பல நெல்லாயங்களும் பொன்வரி காணிக்கை திருவாசல் வினியோகம் சந்துவிக்கரகம் ஊர்கணக்கர் ஆசு பொது மக்கள் பேர்க்கடமை வாசல்ஒட்டு முகம்பார்வை நாட்டு... லக்கடைய*

4. *நத்தவரி ஊர்வரி காணிக்கை வழிநடை காணிக்கை திரு... காணிக்கை ஊர்க்கணக்கர் ஆசு பொதுமக்கள் பேரால் திருவாசல் வினியோகம் சந்துவிக்கிரக ஊசிவாசி இனவரி நற்கிடா கார்த்திகைப் மேற்கட்டிவரி நல்எருது பச்சை... அரிசி காணிக்கை*

5. *சூலவரி விடை அரிசி எடுத்தளவு விருத்தப்படி அரிசிகாணம் கைவிலைகாணம் புறக்கலனையார் பேரால் கடமைஆயம் ... சம்ப... வெட்டிவரி தலைவரி உவச்சரி மற்றும் இப்பற்றில் கொள்ளும்*

6. *எப்பேர்ப்பட்ட சகலவரிகளும் உபாதிகளும் உட்பட சந்திராத்தி வரையும் நடக்க சர்வமானியமாக குடுத்த தேவதானம் நிலம்*

*நாலுக்கும் திருசூலத்தா... உட்பட்ட திருமட விளாகத்துக்கும் தோட்டப்பற்றுக்கும் புஞ்சைக்கும் ஸவன*

7. *இறையிலி... கழனிபாக்கத்து ஊர்க்கு சமைந்த ஊர்கணக்கு கொத்தான்பாக்கமுடையான் எழுத்து ஸ்ரீ மாஹேஸ்வர ரக்ஷை.*

**9:3** அதே ஊரிலுள்ள பீமீசுவரர் கோயில் ஜகதியில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

வீர விசையராயர், (கி.பி.1421)

கழனிப்பாக்கம் பீமீசுவரர் கோயில் செலுத்த வேண்டிய சூலவரியான எண்பது பணத்தில் நாற்பது பணம் மாத பூசைக்கும் மீதியுள்ள நாற்பது பணம் பங்குனி பூசைக்கும் பயன்படுத்திக் கொள்ளும்படி அரசன் கட்டளை.

1. *ஸ்வஸ்திஸ்ரீ மன்மஹா இராஜாதி ராஜா பரமேஸ்வர ஸ்ரீ வீரப்ரதாப தேவ ராய மஹா இராய குமாரர் ஸ்ரீமன் மஹா மண்டலேஸ்வரர் ஸ்ரீ வீரவிசைய*

2. *பூபதி இராய உடைய ப்ரீதி இராஜியம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1343 மேல் செல்லா நின்ற...*

3. *ஸ்ரீமன் மஹா மண்டலேசுவரன் ஸ்ரீவீரவிஜய பூபதி இராய உடையார் ஆந்தி நாட்டு கழனிப்பாக்கத்து மடை விளாக*

4. *மான பீமீசுரத்துக் காணிக்கு பட்டையம் நம்ம சாசனத்துக்கு பலதளீஸ்வரர் சூலவரி பணம் 80 இப்பணம்.*

5. *எண்பதை மாதம் பூசைக்கு விட்ட பணம் 40 நீக்கி பணம் 40 இவ்வருஷம் பங்குனி பூசைக்கு விட்ட பணம் 40 ஆகவும் பீமீசுமுடைய நாயினாற்கு அந்தி போக அமுதுபடிக்கு சர்வமான்னிய இறை இலியாக சந்திராதித்தவரையும் நடக்கக்கடவதாகவும் விசையராய உடையார் ஒப்பம்.*

# 10. மூன்றாம் இராசேந்திர சோழனின் திருவடத்துறைக் கல்வெட்டு

சு. சுவாமிநாதன், மைசூர்.

தென்னார்க்காடு வள்ளலார் மாவட்டம், விருத்தாசலம் வட்டம், திருவடத்துறை தீர்த்தபுரீச்சுவரர் கோயிலின் கருவறைக்கு எதிரிலுள்ள மண்டபத்தின் தெற்குச்சுவர்.

மூன்றாம் இராசேந்திர சோழன், யா. 31 (கி.பி 1277).

1. *ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்ரவத்திக*
2. *ள் ஸ்ரீ இராஜேந்திர சோழதேவ*
3. *ற்கு யாண்டு 11வது உடை*
4. *யார் திருவரத்துறை உடைய நா*
5. *யனார் நாச்சியார் நெறிவார் கு*
6. *ழலியாற்கு இன்னாயநார் கோயிற் கா*
7. *ணி உடைய சிவபிராமணரில் ஆ*
8. *த்திரேயன் பெரியாழ்வான கங்கா*
9. *தரநான கங்காதர பண்டிதன் பாரி*
10. *யை அறம் வளர்த்தாள்ச் சானி*
11. *யேன் என் மக்கள் பெரியநாய*
12. *னான திருவரத்துறை பட்டனையு*
13. *ம் மிவந் தம்பி கூத்தப் பெருமா*
14. *ளான கங்காதர பண்டிதரையு*
15. *மிவர் தம்பி திருவரத்துறை உடை*
16. *யாரையும் முதுகண்ணாகக் கொண்டு என்*

17. பர்த்தா எனக்கு கட்டின தாலிநாணை பழ

18. உருப்படியே நாணில் கோத்த தாலியு

19. மிதில் அரக்கும் செம்பும் கநடைழியுங்

20. கடைத் தொழில்களு முட்படக் குடிணை இ

21. டை [9] மாறி பொன் இரு கழஞ்சரையுமி

22. ப்பயணி உடனே திருமங்கல்ய நாணாகச் சா

23. த்தினேன்

இக் கல்வெட்டு சமூக வரலாற்றுக்கு முக்கியமானது. கொடை நல்கிய அறம் வளர்த்தாள் சானி தன் கணவரான சிவபிராமணர் பெரியாழ்வான் கங்காதர பண்டிதர் இறந்துவிட்ட பிறகு தனது தாலியைச் செப்பனிட்டு ஒன்பது மாற்றுப் பொன்னும், இரண்டு கழஞ்சரை எடையுள்ளதுமான இதனை கோயிலுக்கு அளித்துவிட்டார். இக்காலகட்டத்தில், கணவன்மார் இறந்த பிறகு, மகளிர் தங்கள் தாலியை கோயிலுக்கு அளிக்கும் வழக்கம் இருந்தது என ஊகிக்கலாம். இக்கால மகளிர் பொருளாதார முறையில் தாம் விரும்பியபடி செயல்பட இயலவில்லை என்பதும், தங்களது ஆண் உறவினர்களை முதுகண் அல்லது பொறுப்பாளராகக் கொண்டு இது போன்ற செயல்களில் ஈடுபட்டனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

# 11. வடகாட்டுப்பட்டி வீரபாண்டியனின் கல்வெட்டு

சீ. இலட்சுமணன், தமிழூர்

திருச்சி பெரும்பிடுகு முத்தரையர் மாவட்டம், மணப்பாறை வட்டம், துவரங்குறிச்சியிலிருந்து நத்தம் செல்லும் தடத்தில் பழைய பாளையத்திற்கும், வடகாட்டுப்பட்டிக்கும் இடையில் உள்ள சிதைந்த கோவிலின் வடபுறச் சுவரில் மேற்கோபுரத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

திரிபுவனச் சக்ரவர்த்தி ஸ்ரீகோனேரின்மை கொண்டானான வீரபாண்டிய தேவர். யாண்டு 18. *(கி.பி. 1188)*

புறமலைநாட்டுப் பொன்னமராவதியிலுள்ள இராஜேந்திர சோழீச்சுரமுடையார் கோவிலில் சைவாச்சரியம் செய்யும் பட்டருக்கு நிலம் கொடுத்தமை.

*1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்ரவத்திகள்*

*2. ஸ்ரீகோனேரின்மை கொண்டானாயின வீ*

*3. ரபாண்டிய தேவற்கு யாண்டு 18 ஆ*

*4. வது பூர்வபக்ஷத்து திரயோதெசியும் வெ...*

*5. ளக... முடை....*

*6. அத்தத்து நாள் புறமலை*

*7. நாட்டு பொன்னமராவதியில் உடையார் இரா*

*8. சேந்திரசோழீச்சுரமுடைய நாய*

*9. னார் கோயிலில் சைவாசரியஞ்*

*10. செவார்களில் மவதன பட்டனிவ...*

*11. க்கு வாழ்வித்தார்...*

*12. தி கலுக்கு மருங்கூர் நாட்டு மரைக்கா*

*13. [டு] நான்கெல்லைக்குட் பட்ட நஞ்*

14. செய் புஞ்செய் மற்று எப்பேற்பட்டவையும் யி

15. வர்க்கு அண்ணன் குலசேகர தேவற்கு யாண்டு 4 ... பல்

16. லவதரயர் குரு த ுக்ஷணையாகக் குடுத்த அளவுக்கு இவ

17. ர்க்கு நாடா... மரியா... கடமை [குடிமை] உள்ளது

18. சந்திராத்தவெரை செல்ல இறையிலியாகக் கழித்தோ

19. ம் இப்படிக்கு வரியிலார் கணக்கிலும் [கழித்து]

20. இப்படிக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொளும்படி

21. க்கு விளங்காட்டுடையார் எழுத்து இவை அழகனார் எழுத்து

22. நயினார் திருவகத்தீஸ்வரமுடையார்கு [சிவராத்] திரைப் படிக்கு இ

23. வூரில் க.... முதலிலே அமுதுபடி சாத்துப்படிக்கு மாத்தால் [கல]

24. நெல்லும் கொள்ளவும் இப்படிக்கு சைுவச் சக்ரவத்திகள் எழுத்து பந்மாஹேச் ஸ்வர ரக்கைஷ

# 12. பட்டலூர்க் கல்வெட்டுகள்

அ. பழனியப்பன், பவானி.

பெரியார் மாவட்டம், பவானிக்கு அருகில் உள்ள மிகச் சிறிய கிராமம் பட்டலூர். ஒரு காலத்தில் பட்டு நெசவு இவ்வூரில் சிறந்து இருந்ததாகவும். பிறகு அத்தொழில் செய்தவர்கள் வேறு இடங்களுக்குக் குடியேறிவிட்டார்கள் என்றும் அங்குள்ள மக்கள் கூறுகின்றனர். பட்டலூரில் ஈசுவரன்கோயில் ஒன்று உள்ளது. இங்கு கொங்கு நாட்டை ஆண்ட கொங்குச் சோழரில் வீரராஜேந்திரன் ஆட்சிக் காலத்துக் கல்வெட்டுகள் நான்கு உள்ளன.

**12:1.** *ஸ்வஸ்திஸ்ரீ வீரராஜேந்திர தேவர்க்கு ஒன்பதாவது காஞ்சிக்கூவத் துண்டத்தீரோட்டில் யிராச யிராசப் பெருந் தெருவிலிருக்கும் வாணியரில் முப்பேருடை யான் பொன்னம்பலவநேன் வாகேசர முடையார்க்கு திருமண்டபம் யெடுக்க அச்சுக் குடுத்தேந்.*

**12:2.** *ஸ்வஸ்திஸ்ரீ நந்மங்கலஞ் சிறக்க ஸ்ரீவீரராஜேந்திர தேவக்கு யாண்டு இருபத்தொந்பதாவதற் கெதிர் அஞ்சாவது மார்கழி மாத முதல்லாக வடகரை நாட்டில் பட்டில்லிருக்கும் கொடும்பூர் வேட்டுவரில் பிள்ளையேந் வாகேச்வரம் முடையார்க்கு சந்திரா தித்திய பலழ .... மூந்று விளக்கு யேற்றி வருவோமா கவும் குடமும் குச்சியும் கோயில் புகுவாந் யாதொருவர் திருவிளக்கு வைச்சு...பெற்று வருவார்களாகவும் இவ்விளக்குப் ... புகில் பம்மாய் ... இது தப்புகில் கண் மண்ணுமிழக்கக் கடவார்களாகவும், வாகேச்வர முடையார் இரட்சிக்க.*

**12:3.** *ஸ்வஸ்திஸ்ரீ நந்மங்கலஞ் சிறக்க ஸ்ரீவீரராஜேந்திர தேவற்கு யாண்டு இருபத்தொந்பதாவதற்கெதிர் ஒந்பதாவது வடகரை நாட்டிலிருக்கும் ஊராளிகளில் கொடும்பூர் வேட்டுவரில் பெரிய தேவந் மகந் பெரிய பிள்ளையான பெரியதேவநேந் நாயனார் வாகீசுர முடையாற்கு சந்தியா தீபம் மூந்று விளக்கெரிப் பதாக கோயில் செய்கிற பிராமண கைக்கொண்ட அச்சு ஸ்ரீயக்கிய*

*பழஞ்சலாகை ஒன்றுங் குடுத்தேந் இது குடங் கொடு கோயில் புகுவாந்... யாதொருவந் மூற்று விளக்கெரிப்போமாக இது பம்மாகேசுவரரக்ஷை.*

*12:4.* *ஸ்வஸ்திஸ்ரீ வீரராஜேந்திர தேவக்குத் திருவெழுத் திட்டுச் செல்லா நின்ற திருநல்லி யாண்டு இருபத்து மூந்றாவது வடகரை நாட்டில் புன்னத்திலிருக்கும் பாண்டிவேட்டுவரில் புன்னத்தூரரான் மகன் பாண்டாண்டியேந் வாகேச்வர முடையாற்கு குடுத்த அச்சு கொண்டு அந்றாடு குடங்கொடு கோயில் புகுவாந் சந்தியா தீபம் மூந்று விளக்கும் இட்டுப் பூசிப்பான் சந்தராதிதவலம் உள்ள வரையும் செல்வதாக இத்தன்மம் பந்மா ஹேச்வர ரக்ஷை*

# 13. இடைக்காட்டூர் திருமணிகண்டேசுவரர் கோயில் கல்வெட்டுகள்

**வெ. வேதாசலம், மதுரை.**

மதுரை இராமேசுவரம் நெடுஞ்சாலையில், மதுரையிலிருந்து முப்பத்தாறு கிலோமீட்டர் தொலைவில் வைகையாற்றின் தென்கரையில் இடைக்காட்டூர் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள மணிகண்டேசுவரர் என்றழைக்கப்படும் சிவன்கோயிலில் பிற் பாண்டியர் காலத்தினைச் சார்ந்த பல கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகள் இவ்வூரை கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் என்று குறிப்பிடுகின்றன. திருமணி கண்டேசுவரர் கோயில், வரகுணிசுவரர்கோயில் என்ற இரண்டு சிவன்கோயில்கள் இவ்வூரில் இருந்திருக்கின்றன. இதில் வரகுணி சுவரர் கோயில் மட்டும் முற்றிலும் அழிந்துவிட்டது. அதன் சிற்பங் கள் மட்டும் எஞ்சியுள்ளன. இடைக்காட்டூரில் சமணப் பள்ளி ஒன்றும் இருந்து அழிந்துபோன நிலையில் தீர்த்தங்கரர் சிற்பம் மட்டும் எஞ்சியுள்ளது. இவை தவிர இவ்வூரில் பெருமாள் கோவிலும் இடைக்காடர் சித்தர்கோவிலும் (நவக்கிரகக் கோயில்) இருக்கின்றன.

மணிகண்டேசுவரர்கோவில் கல்வெட்டுகள் பிற்பாண்டியர் காலத்தில் பாண்டிய அரசின் நிர்வாகம், இவ்வூரின் நிர்வாகம், சமயம், சமுதாயம், பொருளாதாரம் பற்றி பல அரிய செய்திகளைத் தருகின்றன. பாண்டிய அரசு இப்பகுதியின் நிர்வாகத்தினைக் களவழிநாடாழ்வான் என்ற நாட்டுத் தலைவன் மூலமாக நடத்தியிருக்கிறது. வேளாண்சமூக நிலவுடமையாளர்கள் நிர்வாகத் தில் இடைக்காட்டூர் இருந்திருக்கிறது.

இடைக்காட்டூரில் 'மண்டலிகெம்பீரன் பெருந்தெரு' என்ற பெயரில் வணிகநகரம் ஒன்று இருந்திருக்கிறது. திருவாரூர் கீழை மடம் என்ற பெயரில் சைவமடம் ஒன்றும் இவ்வூரில் இருந் துள்ளது. காளையார்கோவிலில் இருந்த திருவாரூர் தட்சிண கோளகிமடத்திற்கு (சைவசிகாமணி மடம்) இடைக் காட்டூரில் நிலமளிக்கப்பட்டிருக்கிறது. திருப்பூவணத்தில் இருந்த அழகிய

பெருமாள் மடம் பற்றி இடைக்காட்டூர் கல்வெட்டில் குறிப்பு வருகிறது.

இடைக்காட்டூர் மணிகண்டேசுவரர் கோவில் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருத்திக் கட்டப் பட்டுள்ளது. அப்போது அதில் பொறிக்கப்பட்டிருந்த கல்வெட் டுகள் ஊர்க்கணக்கர் மற்றும் கோயில் நிர்வாகத்தினரால் படியெடுக் கப்பட்டு மீண்டும் அக்கோயிலில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன், முதல்மாற வர்மன் குலசேகரபாண்டியன் போன்ற பெருமன்னர்கள் பிறந்த நாளன்று சிறப்புவழிபாடு செய்ய நிவந்தங்கள் இக்கோயிலுக்கு அளிக்கப் பட்டுள்ளன. இன்னும் பல கொடைகள், திருவுருவங்கள் பற்றி செய்திகள் உள்ளன.

இக்கோவிலில் பணிபுரிந்த தேவரடியார் தொடர்பாகப் பிணக்கு ஏற்பட்டு வழக்கு ஒன்றும் நடந்திருப்பதைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. இவ்வூர் நிலமளக்கும் அளவுகோலும் இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளது. கீழே கோயிலில் உள்ள சில முக்கிய கல்வெட்டுகள் மட்டும் கொடுக்கப்படுகின்றன.

**13:1.** மணிகண்டேசுவரர் கோயில் அர்த்தமண்டபம் தென் புறம் ஜகதிப்படை கல்வெட்டு திருப்பணி செய்யும்போது மாறியுள்ளது. இடம்மாறிய பல இடங்களிலிருந்து தனித்தனியாகப் படித்து தொடர்ச்சிக்காக இணைத்து எழுதப்பட்டுள்ளது.

சடையவர்மன் குலசேகரன். யா.17 (கி.பி. 1207).

இடைக்காட்டூர் ஊரார் தங்கள் ஊருக்காக பதின்மூன்றாவது ஆட்சியாண்டு முதல் செலுத்திவந்த வரிகளைத் தவிர்த்துவிட்டு பதினேழாம் ஆட்சியாண்டிலிருந்து புதியதாக விதிக்கப்பட்ட வரிமுறைப்படி ஒவ்வொருவகை நிலத்திற்கும் வரிசெலுத்த வேண்டும் என்ற மன்னனது ஆணையைத் தெரிவிக்கிறது. இவ்வாணை களவழிநாடாழ்வான் மூலமாக ஊரார்க்கு அனுப்பப்பட்டுள்ளது.

*1. ... கவிழ்ப்ப ... மினங்கனகாஸனத்து வீற்றிருப்ப பாணகிரி சூழ்ந்த ஏழ்பொழில் வெண்குடை நிழற்றச் செங்கோல்....... விளங்கிய*

*கோமுதல் கோச்சடையப்பன்மரான திரிபுவனச் சக்கிரவத்திகள் ஸ்ரீகுல சேகரபாண்டியதேவர்க்கு யாண்டு 13 ஸ்வஸ்திஸ்ரீ களவழிநாடாழ்வான் ஓலை உடையார் திருமணிகண்டீச்ͨவர முடைய நாயனார்கோயில் ஸ்ரீருத்ͬர ஸ்ரீமாஹேச்ͨவரரும் தேவகன்மி....*

2. *கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டிய நல்லூர் [இறைகட்டின] படிக்கு உள்வரி யாண்டு 13 நாள் இறைகட்டின படிக்கு உள்வரி கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் முன்பு செலுத்தி வந்த இறைதவித்து இந்நாட்டு நிலம் அளக்குங்கோலால் நிலம் அளந்து பயிரேற்றி விளைந்த நிலத்துக்கும் மாத்தால் விளையிற்காலால்*

3. *நெல்லு எழுகலனே இருதுரணிப்பதக்கு நானாழியும் திரமம் இரண்டும் குறுவை விளைந்த நிலத்துக்கு இவ்வரிசையில் ஒன்று பாதியும் துலா விறைத்து விளைந்த நிலத்தில் ஒன்று காலும் புன்போகம் விளைந்த நிலத்துக்கு மாத்தால் கலமும் தினை வரகு விளைந்த நிலத்தை மாத்தால் இருகலமும் பதின்மூன்றாவதின் எதிர் நாலாமாண்டு முதல் இறுப்பதாக இறைக...*

4. *இவை புரவுவரித்திணைகளநாயகம் இராசராசப் பல்லவரையன் னெழுத்து இவை புரவரித்திணைகளநாயகம் குருகுலத்தரையன் னெழுத்து இவை புரவுவரித்திணைகள நாயகம் வில்லவராயன் னெழுத்து இவை புரவுவரித்திணை களநாயகம் மீனவன் விழுப்பரயன் னெழுத்து இவை அதிகைமான்....*

5. *இவை குமணராய னெழுத்து இவை விழுப்பதாதராய னெழுத்து இவை ராஜராஜ விழுப்பரயனெழுத்து இவை குலசேகர பிரம்மாதராய னெழுத்து இவை பொத்தப்பிச் சோழன் எழுத்து இவை நுளம்பாதராய னெழுத்து இவை மாதவராய னெழுத்து இவை விராடராயனெழுத்து இவை குலசேகரப் பல்லவரைய னெழுத்து இவை காங்கேயராஜனெழுத்து இவை....*

6. *டையான் எழுத்து உ ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்தி கோனேரின்மைகொண்டான் கீரனூர்நாட்டு இடைக் காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் ஊரார் தங்களூர் இறுத்து வந்த இறை தவிர்த்து இன்நாடு நிலம் அளக்கும் கோலால் நிலம் அளந்து*

*பயிரேற்றி விளைந்த நிலத்துக்கு மாத்தால் விளையிற் காலால் நெல்லு எழுகலனே இருதூணிபதக்கு நானாழியும் திரமம் இரண்டும் குறு*

7. *வை விளைந்த நிலத்துக்கு இவ்வரிசையில் ஒன்று பாதியும் துலாவிறைத்து விளைந்த நிலத்துக்கு இவ்வரிசையில் ஒன்று காலும் புன்போகம் விளைந்த நிலத்துக்கு மாத்தால் கலமும் தினை வரகு விளைந்த நிலத்துக்கு மாத்தால் இருகலமுமாகப் பதின் மூன்றாவதின் எதிர் நாலாமாண்டு முதல் கடமை இறுப்பதாகப் பெறவேணுமென்று களவழி நாடாழ்வான் நமக்குச் சொன்னமை யில் இவ்வாண்டு முதல்*

8. *முன்பு இறுத்து வந்தமை தவிர்ந்து இன்நாடு நிலம் அளக்குங்கோலால் நிலம் அளந்து பயிரேற்றி விளைந்த நிலத்துக்கும் மாத்தால் விளையிற் காலால் நெல்லு எழுகலனே தூணிப்பதக்கு நானாழியும் திரமம் இரண்டும் குறுவை விளைந்த நிலத்துக்கு இவ்வரிசையில் ஒன்று பாதியும் துலாவிறைத்து விளைந்த நிலத்துக்கு இவ்வரிசை யில் ஒன்று காலும் புன்போகம் விளைந்த நிலத்துக்கு மாத்தால்*

9. *கலமும் தினை வரகு விளைந்த நிலத்துக்கு மாத்தால் இரு கலமுமாக பதின் மூன்றாவதின் எதிராமாண்டு முதல் இறுப்பதாக இறை இறுக்கக் கடவ கேழ்வியும் வரியிலார் எழுதிட்ட உள்வரியும் தரச்சொன்னோம். இப்படி சந்ராதித்தவற் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளவும் மதுரோதைய வளநாட்டு காணையிருக்கை உழக்குடி முத்தன் ஆட்கொண்ட வில்லியான மீனவதரையனெழுத்து.*

**13:2.** மணிகண்டேசுவரர் கோயில், கருவறை மேற்புறம், ஜகதிப்படை.

மாறவர்மன் சுந்தரபாண்டியன், யா. 22 (கி.பி.1238)

மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் இடைக்காட்டூர் சிவன்கோயில் விமானம் புதுப்பிக்கப்பட, அதிட்டானப்பகுதியில் வெட்டப்பட்டிருந்த சடையவர்மன் குலசேகர பாண்டியனின் கல்வெட்டு (கி.பி. 1203) ஒன்று ஊர்க்கணக்கராலும் கோயில்

நிர்வாகத்தினராலும் படியெடுக்கப்பட்டு மீண்டும் அப்படியே அதிட்டானத்தில் பொறிக்கப்பட்டது. ஒரு நிலம் களவழி நாடாழ்வானிடமிருந்து திருப்பூவணமுடையான் செம்பியத்தரையானால் விலைக்கு வாங்கப்பட்டு கோயிலுக்கு இறையிலியாக அளிக்கப்பட்டதைத் தெரிவிக்கிறது.

1. *ஸ்வஸ்திஸ்ரீ திரிபு₄வனச்சக்கரவத்திகள் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபி₄சேகம் பண்ணி அருளிய ஸ்ரீஸுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு 20வதின் எதிராமாண்டின் எதிராமாண்டு தை..... கீரனூர் நாட்டு இடைக் காட்டூரான அழகியபாண்டியநல்லூர் உடையார் திருமணிகண்டீச்₂வரமுடையநாயனார் கோயில் திருமலை ஜீர்நித்தவிடத்து திருமலை வாங்கிச் செய்வதாக நாயனார் ப்ரஸாதந் செய்தருளின திருமுகம் வந்து ஜீர்ணோத்₃தா₄ரம் பண்ணினவிடத்து அதிஷ்டான*
2. *ப்படையில் வெட்டின கல்வெட்டு இப்படி இக்கோயில் ஸ்ரீருத்₃ரஸ்ரீமாஹேச்₂வரரும் இவ்வூர் ஊர்க்கணக்கு ஏறுசேவகன் சுந்தரதோளுடையானான தென்னதரையனும் கூட நின்று படி எடுத்த படி திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலசேகரதேவர்க்கு யாண்டு 13 வதின் எதிராமாண்டு அந்தராயமும் வினியோகமும் உட்பட தேவதான இறையிலி இட்டபடிக்கு உள்வரி கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் திருமணிகண்*
3. *டீச்₂வரமுடையார்கோயில் திருப்பள்ளி அறை நாச்சி யார்க்குத் திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு பதின்மூன்றாவதின் எதிராமாண்டு முதல் அந்தராயமும் வினியோகமும் உட்பட தேவதான இறையிலியா யிறுப்பதாகக் களவழி நாடாழ்வார் பக்கல் மிழலைக்கூற்றத்துப் பொன்பற்றியுடையான் பட்டாலன் திருப்பூவணமுடையானான செம்பியதரையன் கீரனூர் நாட்டு பன்னாடான்கோட்டைக் காடுவெட்டியில் விலை கொண்டுடைய வீரப*
4. *ஞ்சரவிளாகம் விலைகொண்டபடி நான்கெல்லைக்குட் பட்ட நிலம் இவனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் காணியாய் பதின்மூன்றாவதின் எதிராமாண்டு முதல் அந்தராயமும் வினியோகமும் உட்படத் தேவதான இறையிலியாய் இறுப்பதாக*

*இட்டமைக்கு இவை புரவுவரிதிணைக்கள நாயகம் ஆய்க்குடை யான் சோமதேவன் அழகியமணவாள வில்லவராயனெழுத்து இவை புரவுவரிதிணைக்களநாயகம் சுந்தர... கலிங்கத்தரைய னெழுத்து*

5. *இவை புரவுவரி திணைக்களநாயகம் இரும்பாழிவுடையான் ராஜராஜப் பல்லவரைய னெழுத்து இவை புரவுவரித் திணைகளநாயகம் பொன்பற்றியுடையான் திருவரங்கதேவனான விசையராய னெழுத்து இவை விராடராஜ னெழுத்து இவை காடுவெட்டி எழுத்து இவை சேதிராய னெழுத்து. இவை ஏனாதியரையன் எழுத்து இவை ... தவராய னெழுத்து இவை நுளம்பாதராய னெழுத்து... ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவ*
6. *னச்சக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் கீரனூர் நாட்டு இடைக்காட்டூர் அழகியபாண்டியநல்லூர் திருமணிகண்டீச்ஂவரமுடையார்கோயில் தேவகன்மிக்கும் ஸ்ரீமாஹேச்ஂவரக் கண்காணி செய்வானுக்கும் இக்கோயில் திருப்பள்ளியறை நாச்சி யார்க்குத் திருப்படிமாற்று உள்ளிட்ட வேண்டும் நிவந்தங்களுக்கு களவழிநாடாழ்வார் பக்கல் மிழலைக் கூற்றத்து பொன்பற்றியு டையான் பட்டாலகன் திருப்பூவணமுடையானான செம்பியதரைய*
7. *ன் பன்னாட்டான்கோட்டைக் காடுவெட்டியில் விலை கொண்டுடைய வீரபஞ்சர விளாகம் விலையோலைபடி நான் கெல்லைக்குட்பட்ட நிலம் இவனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் காணியாய் பதின்மூன்றாவதின் எதிராமாண்டு முதல் அந்தராயமும் வினியோகமும் உட்பட தேவதான இறையிலியாயிறுப்பதாக இடப்பெற வேணுமென்று காலிங்கராயர் நமக்குச் சொன்ன மையில் களவழிநாடாழ்வார் பக்கல் செம்பிய*
8. *தரையன் விலைகொண்டு உடைய வீரபஞ்சரவிளாகம் விலையோலைப்படி நான்கெல்லைக்குட்பட்ட நிலம் இவனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் காணியாய் மணிகண்டீச்ஂவரமுடையார் கோயில் திருப்பள்ளியறை நாச்சியாருக்கு பதின்மூன்றாவதின் எதிராமாண்டு முதல் அந்தராயமும் வினியோகமும் உட்பட தேவதான இறையிலியாயிறுப்பதாகவும் நம்கேழ்வியும் வரியிலார் எழுத்திட்ட உள்வரியும்*

9. *தரச்சொன்னோம் இப்படிக் கைக்கொண்டு சந்திராதித்தவற் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக் கொள்க இவை சாணாட்டு மணற்குடியான அபிமானநல்லூர் வேளான் அரியானான அரிந்தவன் பல்லவரைய னெழுத்து யாண்டு 13வதின் எதிராமாண்டு நாள் 11 வடதலைசெம்பிநாட்டு மேற் கொடுமளூரான உத்தம பாண்டியநல்லூர் அரையன் திருமுடி ... வரிபொத்தகம் பாண்டிய விழுப்பரைய னெழுத்து இவை பல்லவராய னெழுத்து.*

**13:3.** மகாமண்டபம், ஜகதிப்படை, வடபுறம் உள்ளது.

மன்னன்(?) ஏழாவது ஆட்சியாண்டு, கி.பி.13ஆம் நூற்றாண்டு.

இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூரில் இருந்த திருவாரூர் கீழைமடத்து தபசியர்களுக்கு உணவு அளிப்பதற்காக மடப்புறமாக நிலம் அளிக்கப்பட்டதைத் தெரிவிக்கும் அரச ஆணை. இது இடைக்காட்டூர் திருமணிகண்டீசுவரர்க்கும் வேம்பற்றூரான குலசேகர சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீகயிலாச முடையார்க்கும் திருப்பள்ளித்தாமம் சாத்துவிப்பதற்காக திருநந்தவனம் செய்வித்ததையும் தெரிவிக்கிறது.

1. *... சக்ரவத்தி கோனேரின்மைகொண்டான் கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் மடத்தில் வத்திக்கும் திருவாரூர் கீழைமடத்து ஆசாரியர் ஸந்தானத்துத் தபஸிகளுக்கு தங்களுக்கு போ ஜனங்களுக்கு வேண்டுவனவுக்கு நடு... தேவன் இடைக்காட்டூரான அழகியபாண்டிய ஊரார் பக்கல் விலைகொண்டு இவ்வூர்ப் பெருங்குளத்துப் பெரியமடை மணலீடு வாய்க்காலால் நீர்பாயும் விசையபா... க்களுக்கு கீழெல்லை ஊர் பொது பாண்டிவயக்கலுக்கு மேற்கும் தென்னெல்லை... பக்களுக்கும் கொம்மடித்தடிகளுக்கும் ... க்கும் மேலெல்லை ஆலாலசுந்தரநல்லூர் இசைவாநெ*

2. *...க்கும் மடப்புறமான கொம்மடித் தடிக்கு கிழக்கும் வடவெல்லை வாய்க்காலுக்குத் தெற்கும் ஆக நான்கெல்லைக்குட் பட்ட நிலம் ஒருமா முக்காணியும் களவழிநாடாழ்வார்கள் மூவராயர்*

*பூவிடுவாற்கு இவ்வூரிற் சீவிதமாக இட்டு இவன்நனுபவித்த தோட்டமும் மணலீடு உட்பட்ட இவ்வூர் குளத்து பலி மடையாலும் சிறுகுடிக்காலாலும் நீர்பாயும் நிலம் ஆறுமாவரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காணி ... ஆக நிலம் எட்டு மாக்காணி அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலில் இக்கலய...வ்வூரில் கொண்டு செய்வித்த திருநந்தவனத்துக்கு திருநந்தவனப்புற இறையிலியாக நீக்கி நீக்கின நிலம் இரண்டுமா நீக்கி நிலம் ஆறுமாக்காணிஅரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் காராண்*

3. *...ந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய ஆராய்ச்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்துவிக்கிரப்பேறும் பொன்வரியும் மற்றும் எப்பேர்ப்பட்டனவும் உட்பட நாலாவதி னெதிர் மூவாமாண்டு முதல் மடப்புற இறையிலியாக இட்டபடி இத்திருநந்தவனமான நிலம் இரண்டுமாத் தாங்கள் கைக்கொண்டு திருநந்தவனஞ் செய்து இவ்வூர்த் திருமணிகண்டீச்ஂவரமுடை யார்க்கும் வேம்பற்றூரான குலசேகரச் சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீ கயிலாயமுடையார்க்குத் திருப்பள்ளித் தாமம் சாத்திவிக்கவும் பெறவேணுமென்று அய்யன் மழவராயர் நமக்குச் சொன் னமையில் தங்களுக்கு போஜனமுள்ளிட்டு வேண்டுவனவுக்கும் இவ்விடைக் காட்டூரான அழகிய பாண்டியநல்லூர்*

4. *... க்கல்லயதேவன் விலைகொண்ட விசையபாண்டி வயக்கல் பற்று நாங்கெல்லைக்குட்பட்ட நிலம் ஒருமா முக்காணியும் களவழிநாடாழ்வார்கள் பூவிடுவானுக்கு இவ்வூரில் ஜீவிதமாக இட்டு இவன் அனுபஂவித்த தோட்டமும் மணலீடும் உட்பட இவ்வூர்க்குளத்து பலிமடையாலும் சிறுகுடி வாய்க்காலும் நீர்பாயும் நிலம் ஆறுமாவரையே அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் ஆக இவூர் நிலமளக்குங் கோல் குடிதாங்கியால் நிலம் எட்டு மாக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலில் இத்திருநந்த வனபுறமான நிலம் இரண்டுமா நீக்கி நீக்கி நில ஆறுமாக்காணி யரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சுங் காரிய ஆராட்சியும் வெட்டிபாட்*

5. டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறும் பொன்வரி மற்றும் எப்பேர்ப் பட்டனவும் உட்பட இவ்வாண்டு முதல் மடப்புற இறையிலி யாக.... மு இத்திருநந்தவனப் புறமான நிலம் இரண்டு மாவுந் தாங்கள் கைக்கொண்டு இத்திருநந்தவனஞ்செய்து இந்நாய நார்க்குத் திருப்பள்ளித்தாமஞ் சாத்துவிப்பார்களாகவுஞ் சொன்னோம் கைக்கொண்டு இப்படி சந்திராதித்தவற் செய்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க இவை மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றத்து அமரடக்கிமங்கலத்து குளத் தாழ்வான் ஆண்டாபரண அழகனான அழகிய பாண்டிய விழுப் பரையன் எழுத்து ... ...இவை மிழலைக் கூற்றத்துக் கீழ்கூற்று பொதுவக்குடையான் அ

6. யகையன் அழகன்... ன் எழுத்து இவை செவ்விருக்கை நாட்டுச் சக்கரபாணிநல்லூர் அரையன் அழகனான வயிராதராயனே எழுத்து ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் தென்களவழிநாட்டு வேம்பற்றூரான குலசேகர சதுர்வேதி மங்கலத்து சீகையிலாயமுடையார் கோயில் தானத் தார்க்கும் கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டிய நல்லூர் திருமணிகண்டீசுவரமுடையார் கோயில் தானத்தாற்கும் இந்நாயநார்க்கு நடுவில்நாட்டு மாரிங்கூர்த் தாயன் கல்லய தேவன்... ராசநாராயணதேவர் பக்கல் இவ்விடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூரில் விலைகொண்டு செய்விச்ச கல்லயன் திருநந்தவனத்துக்கு கீழெல்லை கோழிகொத்தி தடிக்கும் பட்டா... லிவயக்கலுக்கும் மேற்கும் தென்னெல்லை சிறுகுடிக்கு

7. ...டி ...நீர்பாய... த்திரப்பிள்ளையார் கோயிலுக்... வயக்கலுக்கும் மேலெல்லை இவ்வூரில் நின்றும் வைகையான சீவல்லவ பேராற்றுக்கு போகிற வழிக்கு கிழக்கும் வடவெல்லை பன்னாடார் குடியிருப்புக்கு தெற்கும் இந்நான்கெல்லைக்குட்பட்ட இவ்வூர் நிலம்அளக்கும் கோல்குடிதாங்கியால் நிலம் ஒருமாவரைக் காணி முந்திரிகைக்கீழ் மூன்றுமாமுக்காணியில் இத.... க்ஷேத்திர பாலப்பிள்ளையாற்கு திருநந்தவனமாக நீக்கின நிலம் முந்திரிகைக் கீழரை நீக்கி நீக்கி திருநந்தவனம் நிலம் ஒரு மா முந்திரிகை கீழ் மூன்றுமா முக்காணியும் இத்திருநந்தவனத்துக்குத் திருநந்தவனப் புறமாக இடைக்காட்டூரான அழகியபாண்டிய நல்லூர் ஊரார்

பக்கல்... விலைகொண்ட இவ்வூர் குளத்துப்பெரிய மடை வாய்க்காலால் நீர்பாயும் விசையபா

8. ண்டிய வயக்கற் பற்றுக்கு கீழெல்லை ஊற்பொது பாண்டி யக்காரி வயக்கலுக்கும் தென்னெல்லை வாய்க்கா... க்கும் கொட்டடித் தடிக்கும் வடக்கும் மேலெல்லை ஆலால சுந்தரநல்லூர் சைவநெறி காட்டினான் மடத்துக்கு மடப் புறமான கொம்மடித்தடிக்கு கிழக்கும் வடவெல்லை வாய்க் காலுக்கு தெற்கும் ஆக நான்கெல்லைக்குட்பட்ட நிலம் ஒருமா முக்காணியும் களவழி நாடாழ் வார்கள் பூவிடுவார்க்கு சீவிதமாக இட்டு இவன் அனுபவித்த தோட்டமும் மணலீடு உட்பட இவ்வூர்குளத்து... நிலம் ஆறுமாவ ரையே அரைக் காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் ஆக நிலம் எட்டுமாக்காணி அரைக்காணி முந்திரிகைக்கீழ் காலில் இவ்வூர் மடத்தில் வத்திக்கும் திருவாரூர் கீழைமடத்து ஆசார்யஞ் சந்தானத்...

9. ன்கெல்லைக்கு உட்பட நிலம் ஒருமா முக்காணியும் களவழி நாடாழ்வார்கள் பூவிடுவானுக்கு ஜீவிதமாய் அனுபவித்த தோட்டமும் மணலீடும் உட்பட இவ்வூர்குளத்து பலிமடை யாலும் சிறுகுடிக்காலும் நீர்பாயும் நிலம் ஆறுமா வரையே அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் ஆக நிலம் எட்டுமாக்காணி அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும்... போ$_4$ சனமுள்ளிட்டு வேண்டுவனவுக்கு ஆறுமாக்காணி அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்கா.... ம் காரிய ஆராட்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்துவிக்கிரகப்பேறும் பொன்வரியும் மற்றும் எப்பேர்பட்டனவும் உட்....

10. இவ்வாண்டு முதல் திருநந்தவனப்புற இறையிலியாக இந்நிலம் இம்மடத்து வத்திக்கும் தபஸிகள் கைக்கொண்டு திருநந்தவனம் செய்து இந்நாயன்மாற்கு திருப்பள்ளித்தாமம் சாத்திவிப்பாராகவும் சொன்னோம் கைக்கொண்டு இப்படி சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டி வித்துக் கொள்க இவை மிழலைக்கூற்றத்து நடுவிற்கூற்று அமரடக்கி மங்கலத்து குளத்தாழ்வான் னாண்டபிரான் அழகனான அழகிய பாண்டிய விழுப்பரைய னெழுத்து.... னி நல்லூர் அரையன் அழகனான வயிராதராயன் எழுத்து உ.

**13:4** மகாமண்டபம் ஜகதிப்படை, உபானம்.

மாறவர்மன் சுந்தரபாண்டியன், யா.12 (கி.பி.1250 - 51).

திருக்கானப்பேருடைய நாயனார்கோயில் (காளையார் கோயில்) திருக்குளத்தின் மேல்கரையில் சைவசிகாமணிமடம் என்றழைக்கப் பட்ட திருவாரூர் தக்கிண கோளகிமடம் ஒன்று இருந்தது. இம்மடத்தில் இருந்த கொன்றைமுடியார்க்கும் தபசியர்களுக்கும் உணவிற்காக இடைக்காட்டூரில் மடப்புறமாக நிலம் அளிக்கப் பட்டதைத் தெரிவிக்கும் அரச ஆணை இதுவாகும். நிலத்தின் எல்லைகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மன்னனின் மெய்க்கீர்த்தி இறுதியில் காணப்படுகிறது.

1. *ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் கானப்பேற் கூற்றத்து உடையார் திருக்கானப் பேருடையநாயனார் கோயில் திருக்குளத்து மேல்கரையில் சைவ சிகாமணிமடத்து வத்திக்கும் திருவாரூர் தக்ஷிண கோளகிமடத்து ஆசாரியர் சிஷ்யரில் கொன்றை முடியார்க்கும் சந்தானத்து வத்திக்கும் தபஸியற்கும் போசன முள்ளிட்டு வேண்டுவனவுக்கு கீரனூர்நாட்டு இடைக் காட்டூரான அழகியபாண்டியநல்லூர் குளத்து வடக்கில் மலைப்போக்கில் பலர் பக்கலும் விலைகொண்டனு*

2. *பவித்து வருகிற கண்டதேவி வயக்கல்தடி நிலம் இருமாவரையே வரைக்காணி கீழேழு மாவரையும் இதன் காலிடை கிழக்கு பெற்றாள்வயக்கல் தடி ஒன்று நிலங்காணி அரைக் காணியும் இதன் தெற்கு கங்கை வயக்கல்தடி ஒன்று நிலம் முந்திரிகைக்கீழ் முக்காலும் இதன் இடைவிட்டு நங்கை வயக்கல் தடி இரண்டு நிலங்காணி முந்திரிகை கீழரையும் நெடுங்கண் தடி ஒன்று நிலமரைமா முந்திரிகைக்கீழ் முக்காலும் சொக்கன்பற்று தடி பல நிலம் ஒருமா முக்காணி அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் எல்லைவாச்செய் தடி ஒன்று நிலம் காணி அ*

3. *ரைக்காணி கீழ் முக்காலும் காடனாதிச்சன் தடி ஒன்று நிலம் காணி முந்திரிகைக்கீழிரு மாவரையும் மஞ்சள்பற்று தடி இரண்டு நிலங்காணி அரைக்காணி கீழிரு மாவரையுங் பக்தி சாறன் தடி ஒன்று நிலங்காணி அரைக்காணி கீழரையும் எல்லைவாய்ச்செய்*

தடி ஒன்று நிலங்கா கீழிருமாவரையும் பள்ளவயல் தடிமூன்று நிலன் ஒருமாவும் ஆக இவ்வூர் கடமை இறுக்கும் கோலால் நிலம் அரையே காணிக் கீழாறு மாக்காணியும் க

4. டமையும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சுங் காரிய ஆராய்ச்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரமப்பேறும் வாசப்பேறும் இலாஞ்சினைப்பேறும் பொன் வரியும் மற்றும் எப்பேர்ப்பட்டனவு முட்பட பதினொன்றாவதி னெதிராமாண்டு முதல் மடபுற இறையிலியாகவும் இம்மடைப் போக்கில் இவர் ஒற்றி கொண்ட மஞ்சள் பற்று தடி ஒன்று நிலம் அரைக்காணி முந்திரிகை கீழரையே மூன்றுமா முக்காணியும் நங்கை வயக்கல் தடி ஒன்று நிலம் அரைமாவும் ஆக நிலம் அரைமா அரைக்கணி முந்திரிகை

5. கீழரையே மூன்றுமா முக்காணியும் கடமையும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சுங் காரியாவராட்சியும் வெட்டி பாட்டம் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறும் வாசற்பேறும் இலாஞ்சினைப்பேறும் பொன்வரி மற்றும் எப்பேர்பட்டனவு முட்பட இவ்வாண்டு முதல் மடப்புற இறையிலியாக இறுப்ப தாகவும் இடப்பெறவேணுமென்று அய்யன் மழவராயன் நமக்குச் சொன்... மக்கும் சந்தானத்தில் வற்த்திக்கும் தபஸியர்க்கும் போசன முள்ளிட்டு வேண்டுவனவுக்கு இவ்விடைக்காட்டூரான அழகிய பாண்டி

6. யநல்லூர்குளத்து வடக்கில் மடைப்போக்கில் தான் பலர் பக்கலும் விலை கொண்டனுபவித்து வருகிற கண்டதேவி வயக்கல் தடி நாலு நிலம் இருமாவரையே யரைக்காணி கீழேழு மாவரையும் இதன்காலிடை கிழக்கு பெற்றான் வயக்கல் தடி ஒன்று நிலங்காணி அரைக்காணியும் இதன் தெற்கு நங்கை வயக்கல் தடி ஒன்று நிலம் முந்திரிகைக் கீழ் முக்காலும் இதன் இடைவிட்டு நங்கை வயக்கல் தடி ஒன்று இந்நில்ம்காணி முந்திரிகைக் கீழரையும் நெடுங்கண் தடி ஒன்று நிலம் அரைமா முந்திரிகைகீழ் முக்காலும் சொக்கன் பற்று தடி பல நிலம் ஒரு மா

7. முக்காணி அரைக்காணி முந்திரிகைக்கீழ் முக்காலும் எல்லைவாய்ச் செய் தடி ஒன்று நிலம் காணி அரைக்காணி கீழ் முக்காலும் காடனாதிச்சன் தடி ஒன்று நிலம் காணி முந்திரிகைக்கீழ்

மாவரையும்... இரண்டு நிலம் காணியும் அரைக்காணி கீழிருமாவரையும் பத்தி... தடி ஒன்று நிலங்காணி அரைக்காணி கீழரையும் எல்லைவாய்ச் செய் தடி ஒன்று நிலம் காணி அரைக்காணி கீழரையே மாகாணியும் இடைவிட்டு தடி இரண்டு நி...காணி கீழருமாவரையும் பள்ளவயல் தடி ஒன்று நிலம் ஒருமாவும் ஆக இவ்வூர் கடமை இறுக்கும் கோலால்

8. நிலமரையே காணிக் கீழாறு மாக்காணியும் கடமையும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சுங் காரிய வாராட்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறும் வாசற் பேறும் இலாஞ்சினைப் பேறும் பொன்வரியும் மற்றும் எப்பேர் பட்டனவு முள்பட பதினொன்றாவதின் எதிராமாண்டு முதல் மடப்புற இறையிலியாகவும் இம்மடைப்போக்கில் இவர் ஒற்றி கொண்ட பஞ்சன்பற்று தடி ஒன்று நிலம் அரைக்காணி முந்திரிகைக் கீழரையே முக்காணியும் இ

9. ப்படிச் சந்திராதித்யவற் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்து கொள்க இவை அரும்பொறகூற்றத்து.... குளத்தாழ் வான் ஆண்டபிள்ளை அழகனான அழகிய பாண்டிய மூவரையன் எழுத்து யாண்டு பதினொன்றாவதின் எதிராமாண்டு நாள் அஞ்நூ ற்று எழுபத்தொன்பது இவை செவ்விருக்கைநாட்டு சக்கரநாலி நல்லூர் அரையன் சேனைப் பெருமாளான குருகுலத் தரையன் எழுத்து இவை செவ்விருக்கைநாட்டு சக்கரபாணிநல்லூர் அரையன் விரதமுடித்தானான பல்லவரையன் எழுத்து

10. அருளிச்செயல் திருக்கானப்பேர் [மேல்குளங்கரை] சைவசி, காமணி மடத்து வற்திக்கும் திருவாரூர் கீழைமடத்து சந்தானத்து தபஸியற்கு தங்களுக்கு போசன முள்ளிட்டு வேண்டுவனவுக்கு கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் குளத்து வடக்கில் மடைப் போக்கில் இவ்வூர்பக்கல் கடமை யிறுக்கும் கோலால் இம்மடத்துக்கு விலைகொண்டுடைய நிலம் அரையே ஒருமாவும் கடமையும் அந்தராயமும் வினியோகமும்

11. தருவதான அச்சுங் காரியவாராட்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறும் பொன்வரியும் எப்பேர் பட்டனவும் முள்பட பதினொன்றாவதின் னெதிராமாண்டு முதல் மடப்புற

*யிறையிலியாகத் தந்தோம் இப்படி சந்திராதித்தியவர் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க இவை இரணிய முட்டத்து... திருவால வாயுடையான் அழகனான சுந்தர பாண்டியன் மூவரையன் எழுத்து அண்டநாட்டு பெருமணலூர் மந்திரி ஆதிச்சதேவனான உத்திரமந்திரி எழு*

12. *த்து மிழலைக்கூற்றத்து கீழ்கூற்று பொதுவக்குடி அரையன் அழகான சிவந்தராயன் எழுத்து பூமலர் திருவும் போர்செய மடந்தையும் தாமரைக் குவி முலை செயப்புயத்திருப்ப வேதநாவில் வெள்ளி தடதாமரை காதல்மாது கவின்பெறக் களிப்ப வெண்டிரை யுடுத்த மண்திணி தடக்கை திருநில மடந்தை யுரிமையிற் களிப்ப சமயமும் நீதியுந் தருமமுந் தழைப்ப யிமைய வீரவிழாக் கொடியிடந்தோறு மெடுப்ப கருங்கலி கனல்கெடக் கடவுளர் வேதியர் அருந்தொழில் வேள்விச் செங்கனல் வளர்ப்பச் சுருதியுந்*

13. *தமிழுந் தொல்வளங் குலவப் பொருதிறலாழி பூதலஞ் சூழ் ஒருகை யிருசெவி மும்முத நாற்கோட்டயிராவத முதல் செய்திரு கொற்ற தெண்டிறை யானை எருத்தமேறிக் கண்டநாடெம தென கழிகூர கோசல வேந்தரும்...குச்சரம் போசல பொப்பளம் புண்டரிங்க மீழங் கடாரந் தெலிங்கஞ் சோனகஞ் சீன முதலா விதிமுறை திகழ வெவ்வேறு வருத்த முதுநிலைக் கிழமையில் முடிபுனை வேந்தற்கொரு தனிநாயகனெனத் திருமுடி சூடி செங்கோலோச்சி கொற்றத்தாள் குளிர்குடை நிழற்ற கீழ்க*

14. *ற்றைகவரி காவலர்வீச டைகதிர் நவமணி வீரஸிம்ஹாஸ னத்துடன் முடிசூடி உயர்குலத் திருவென் மதுமலர்... குவித்து... மங்கையர் நின்று வணங்கும் சென்னியிற் தடரொளி... சிவந்த மலர்... கமலம் விளங்க உலகமுழுது டையாரோடு வீற்றிருந் தருளிய கோமுதற் கோமாற வம்மரான திரிபு$_3$வனச்சக்கரவத்திகள் ஸ்ரீசுந்தரபாண்டிய தேவற்கு 11வது 579 னால் இது திருவாய்க் கேழ்விச் ஸோபானத்துக்கு கிழக்கு வெட்டித்து.*

**13.5** மகாமண்டபம் வடபக்கம் வேதிகைப்பட்டியில் உள்ளது.
சடையவர்மன் வீரபாண்டியன், யா. 5 (கி.பி. 1258-59).

செழுவத்தூர் அரையன் சீவனீந்தகாலனான காலிங்கராயர் பெயரால் துறுமூர் அரையன் கூத்தாடுந் தேவனான குவலையத்

தரையன் இடைக்காட்டூர் திருமணிகண்டிசுவரமுடையார் கோயிலுக்கு வரும் தேசாந்திரிகளுக்கு (யாத்திரிகர் களுக்கு) உணவு வழங்க இடைக்காட்டூரில் நிலம் வாங்கி அளிக்க இறையிலியாகச் செய்த அரச ஆணையைத் தெரிவிக்கிறது. இவ்வரச ஆணையை ஊரார் (ஊரவை) நிறைவேற்றியுள்ளதையும் இது தெரிவிக்கிறது.

1. *கோச்சடையபன்மரான திரிபு$_4$வனச்சக்கரவத்திகள் ஸ்ரீவீரபாண்டிய தேவற்கு யாண்டு 5வது கீரனூர்நாட்டு இடைக் காட்டூரான அழகியபாண்டியநல்லூர் ஊராய் இசைந்த ஊரோம் உடையார் திருவாலவாயுடையார் தேவதானம் அண்டநாட்டு துறுமூர் அரையன் கூத்தாடுந்தேவனான குவலையத்தரையற்கு ப்ரமாணம் பண்ணிக்குடுத்த பரிசாவது தங்களூர் உடையார் திருமணிகண்டி சுரமுடையநாயனார் திருமுன் தே$_3$சாந்தரிகளுக்குத் திருகானப்பேற் கூற்றத்து பெருங்காடாவூரான தென்னவன் செழுவத்தூர் அரையன் சீவனீந்நதகால*

2. *னான காலிங்கராயர் பேரால் ஒடுக்குக்கு உடையார் திருவாலாவாயுடைய நாயனார் தேவதானம் அண்டநாட்டுத் துறுமூர் அரையன் கூத்தாடுந்தேவனான குவலையத்தரையர் உடையார் திருக்கொடுங்குன்றநாயனார்க்கு எங்களூரில் தேவதானக் கடமை இறுப்பு நிலத்திலுந் திருஞானசம்பந்தநல்லூர் உடையார் சுந்தரபாண்டிய ஈசுவரமுடையநாயனார்க்குத் தேவதானக்கடமை இறுப்பு நிலத்திலும் இவர் விலைகொண்ட நிலம் கோல்குடிதாங்கியால் நிலம் ½லி இந்நிலம் அரைவேலியும் இறுத்துவரும் பொன்வரி வினியோகம் ஐஞ்சாவது முதல் திருமுன்னொடுக்கு வேண்டுவனவுக்கு சந்திராதித்தவற் செல்வ*

3. *தாகக் குடுத்தோம்... பிறித்து கல்லிலும் செம்பிலும் வெட்டுவித்துக் கொள்கவென்று நாயனார் ப்ரசாதஞ் செய்தருள திருமுகம் வந்தமையில் திருமுகப்படியிலே இன்னிலமரை வேலிக்கும் திருமுகப்படியிலே செய்து குடுத்தமைக்கும் ஊரார் வினியோகந் தவிர்த்து குடுத்தமைக்கும் இவ்வாண்டு முதல் சந்திராதித்தவற் செல்வதாக ப்ரமாணம் பண்ணிக்குடுத்தோம். ஊராய் இசைந்த ஊரோம் குவலையத்தரையற்கு இப்படிக்கு இவை திருவிரமீச்$_2$வரன் திருமாலான பாண்டியரையர் எழுத்து இப்படிக்கு*

*இவை காவாநிலைத் தேவப்பெருமாள் எழுத்து இப்படிக்கு இவை மானாபரணன் திருமாலான கீரனூர்நாட்டு மூவேந்தவேளான் எழுத்து இப்படிக்கு இவை*

4. *அரையன் இடர்கெட ஆடுவான் எழுத்து இப்படிக்கு இவை திருவிரமீச்ᵘவரன் நம்பி.....வான் எழுத்து இப்படிக்கு இவை திருவிராமீச்ᵘவரன் கருமாணிக்காழ்வான் எழுத்து இப்படிக்கு இவை அரையன் திருநாவுக்கரசன் எழுத்து. இப்படிக்கு இவை திருவிராமீச்ᵘவரன் காவாநிலை எழுத்து இப்படிக்கு இவை திருவிராமீச்ᵘவரன் திரைமீட்டான் எழுத்து இப்படிக்கு இவை அரையன் வரகுணப்பெருமாள் எழுத்து இப்படிக்கு இவை அரையன் பிள்ளையார் எழுத்து இவை வேளான் பேராயிர முடையானெழுத்து இப்படிக்கு இவை வேளான் அரசன் எழுத்து இப்படிக்கு இப்ரமாணம் எழுதினேனும் இவ்வூர் ஊர்க்கணக்கு ஏறுசேவகன் சுந்தரத்தோளுடையனான தென்னவனெழுத்து.*

***13:6*** மகாமண்டபம் வடபுறம் ஜகதிப்படை.

சடையவர்மன் வீரபாண்டியன் யா.5 (கி.பி.1258-59).

முன்சென்ற கல்வெட்டோடு தொடர்புடையது. இடைக் காட்டூர் ஊரார்க்கு அனுப்பப்பட்ட அரசாணை.

1. *ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனசக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் ஊராற்கு தங்களூர் மணிகண்டீச்ᵘவரமுடைநாயனார் திருமுன்பு தே₃சாந்தரிகளுக்கு திருக்கானபேர்கூற்றத்து பெருங்காடாவூரான தென்னவன் செழுவத்தூரர் அரையன் சீவனீந்தகாலனான காலிங்கராயன் பேரால் ஒடுக்குக்கு வேண்டுவனவுக்கு அண்ட நாட்டுத் துறுமூர் அரையன் கூத்தாடுந்தேவனான குவலையத் தரையன் உடையார் திருக்கொடுங்குன்றமுடையார்க்குத் தங்களூரில் தேவதான கடமையிறுப்பு நிலத்தில் விலைகொண்ட நிலம் இரண்டு மாவும் திருஞானசம்பந்தநல்லூர்ச் சுந்தரபாண்டிஈச்ᵘவரமு*

2. *யார்க்குத் தேவதான கடமை இறுப்பு நிலத்தில் விலை கொண்ட நிலம் எட்டு மாவும் ஆகக் கோல் குடிதாங்கியால் நிலம் அரையும் இறுத்துவரும் பொன்வரியும் வினியோகமும் ஐஞ்சாவதுமுதல்*

*திருமன் ஒடுக்குக்கு வேண்டுவனவுக்குக் குடுத்தோம் இப்படி சந்திராதித்தவற் செல்வதாகக் குடுத்த நிலங்கள் ஊர்புரவில் நின்றும் பிறித்துக் குடுத்துக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிவித்துக் குடுக்க இப்படிச் சொல்லுவதாக குருகுலராயன் அடைப்பில் ...காட்டச் சொன்னோம் இவை பழந்தீபராயன் எழுத்து யாண்டு 5வது நாள் 65 னால் மாதவராயன் எழுத்து இவை பல்லவராயன் எழுத்து : உ.*

**13:7** மகாமண்டபம், வடபுறம், குமுதப்படை.

சடையவர்மன் வீரபாண்டியன் யா.5 (கி.பி. 1258-59).

மேற் சென்ற இரண்டு கல்வெட்டுகளோடு தொடர்புடையது. இடைக்காட்டூர் சிவன்கோயில் நிர்வாகத்தினர்க்கு அனுப்பப்பட்ட அரசாணை.

1. *ஸ்வஸ்திஸ்ரீ திரிபு₄வனச்சக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் கீரனூர் நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டிய நல்லூர் மணிகண்டீச்₂வரமுடையார் பேரால் சிவபி₃ராமணற்கும் தேவகன்மிகளுக்கும் இத்தேவர் திருமன்பு தேசாந்திரிகளுக்கு திருக்கானப்பேர்கூற்றத்து பெருங்காடாவூரான தென்னவன் செழுவத்தூர் அரையன் சீவனீந்தகாலனான காலிங்கராயன் பேரால் ஒடுக்குக்கு வேண்டுவனவுக்கும் அண்டநாட்டுத் துறுமூர் அரையன் கூத்தாடுந்தேவனான குவலையத்தரையன் இவ்வழகியபாண்டிய நல்லூரில் உடையார் திருக்கொடுங்குன்றம் உடையார்க்கு தேவதானக்கடமை இறுப்பு நிலத்தில் விலைகொண்ட நிலம் இரண்டு மாவும் திருஞானசம்பந்தநல்லூர் சுந்தரபாண்டீச்₂வர முடையாற்கு தேவதானக்கடமை*
2. *இறுப்பு நிலத்தில் விலை கொண்ட நிலம் எட்டு மாவும் ஆகக் குடிதாங்கியால் நிலம் அரையும் இறுத்துவரும் பொன்வரியும் வினியோகமும் ஐஞ்சாவது முதல் திருமன்னொடுக்குக்கு வேண்டுவனவுக்கு இடப்பெறவேணு மென்றும் இறுக்கும் இடத்து பொன்வரியும் வினியோகமும் மாத்தால் அச்சு ஆறும் இறுப்பதாகவும் இடப்பெறுவேணுமென்றும் காலிங்கராயன் நமக்குச் சொன்னமையால் இவ்வழகியபாண்டியநல்லூர்*

*மணிகண்டீசுவரமுடையார் திருமுன்பு தேசாந்திரிகளுக்கு திருக்கானப்பேர்கூற்றத்து பெருங்காடாவூரான தென்னவன் செழுவத்தூர் அரையன் சீவனீந்தகாலான காலிங்கராயன் பெயரால் ஒடுக்குக்கு வேண்டுவனவுக்கு அண்டநாட்டுத் துறுமூர் அரையன் கூத்தாடுந்தேவனான குவலையத் தரையன் இவ்விடைக் காட்டூரான அழகியபாண்*

3. *டியநல்லூர் உடையார் திருக்கொடுங்குன்றம் உடையாற்கு தேவதானக்கடமை இறுப்பு நிலத்தில் விலைகொண்ட நிலம் இரண்டு மாவும் திருஞானசம்பந்தநல்லூர் சுந்தரபாண்டீசுவர முடையார் தேவதானக் கடமை இறுப்பு நிலத்தில் விலைகொண்ட நிலம் எட்டுமாவும் ஆகக்குடிதாங்கியால் நிலம் அரையும் இறுத்து வரும் பொன்வரியும் வினியோகமும் இவ்வாண்டு முதல் திருமுன் னொடுக்கு வேண்டுவனவுக்கு இறுப்பதாகவும் இறுக்கும் இடத்து பொன்வரியும் வினியோகமும் மாத்தால் அச்சு...இப்படி சந்ராதித்தவர் செல்வதாக கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக்கொள்க இவை பழந்தீபராயன் எழுத்து யாண்டு 5 நாள் 15 னால் இவை மழவராயன் எழுத்து இவை பல்லவராஜன் எழுத்து.*

***13:8*** அர்த்தமண்டபம் தென்புறம் ஜகதிப்படை.

சடையவர்மன் வீரபாண்டியன், ஆட்சியாண்டு 10 *(கி.பி.1263-64).*

நெற்சுரநாட்டு நென்மலியான குலசேகரநல்லூரைச் சார்ந்த மயிலேறுவான் அடியார்க்குநல்லானான அரும்புகலழித்த பாண்டிய தேவர் இடைக்காட்டூர் சிவன்கோயிலில் ஊரார் பெயரால் அழகியபாண்டிய தட்சிணாமூர்த்தி என்ற பெயரில் தட்சிணா மூர்த்திக்கு சிற்பம் ஒன்றைச் செய்வித்தார். அதற்காகும் அமுதுபடி உள்ளிட்ட வழிபாட்டுச் செலவினங்களுக்காக இடைக்காட்டூர் ஊராரிடமிருந்து சில நிலங்களை விலைக்கு வாங்கி தேவதான இறையிலியாக அளித்ததைத் தெரிவிக்கிறது. இவ்வாவணத்தினை ஊரவையினர் பலர் கையொப்பம் இட்டு நிறைவேற்றியுள்ளனர். ஊரார் அரும்புகலழித்த பாண்டியதேவர் நிவந்தம் தொடர்பான கோயிலுக்கு பிடிபாடு செய்து கொடுத்ததை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ மெற்கீத்திக்குமேல் ஸ்ரீகோச்சடையபன்மரான திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீவீரபாண்டியதேவற்கு 5 வதின் எதிரஞ்சாவது துலா நாயற்று நாலாந்தியதியும் பூர்வபக்ஷத்து சதுர்த₃சியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற ரேவதிநாள் கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் ஊராய் இசைந்த ஊரோம் இவ்வூருடையார் திருமணிகண்டீச்வரமுடைய நாயனார் கோயில் ஆதிசண்டேசுவரதேவற்கு பிடிபாடு பண்ணிக்குடுத்த பரிசாவது நெற்சுரநாட்டு நென்மலியான குலசேகர

2. நல்லூர் மயிலேறுவான் அடியார்க்கு நல்லானான அரும்புகலழித்த பாண்டியதேவர் இந்நாயனார் கோயிலில் இற்றை எங்கள் பேரால் எழுந்தருளிவித்த நாயனார் அழகியபாண்டிய த₃க்ஷிணாமூர்த்தி தே₃வற்கு அமுதுபடி உள்ளிட்ட நித்தநிமந்தங்களுக்கு தேவதானமாக இறைகழித்துக் குடுத்த நிலமாவது முன்னாள் இவ்வரும்புகலழித்த பாண்டியதேவர் எங்கள் பக்கல் விலைகொண்டனுபவித்து வருகிற நிலமாவது இவ்விடைக் காட்டூர் பெருங்குளத்து அறுவமடையால் நீர்பாயும் வேப்பஞ் செய்யும் தட்டான் த

3. டியும் நீரைமீட்டான் திருவிராமீச்வரமுடையான் உள்ளிட்டார் பக்கல் விலைகொண்டனுபவித்து வருகிற நங்கை வயக்கல் தடியும் ஆக இந்நிலங்களுக்கு சூழெல்லைக்குக் கீழெல்லை வாய்க்காலுக்கும் விசையராயர் புங்கஞ்செய்க்கும் மேற்கும் தென்னெல்லை பாண்டியதரையர் உள்ளிட்டார் நங்கை வயக்கல் தடிக்கும் திருவிராமீச்வரநம்பியாண்டார் நங்கைவயக்கல் தடிக்கும் வாய்க்காலுக்கும் வடக்கும் மேலெல்லை திருவிடை யாட்டம் அளைஞ்ச கோளரித் தடிக்கும் கூத்தாடுந்தேவர் வேலஞ் செய்க்கும் கிழக்கு

4. ம்வடவெல்லை இந்நாயனார் தேவதானந் திருநந்த வனத்துக்கும் வாய்க்காலுக்கும் தெற்கும் ஆக இவ்விசைந்த பெருநான் கெல்லைக்குட்பட்டக் கோல்குடிதாங்கியால்...னால் ஊர்மடக்குப் படி இந்நிலம் அரைமா வரைக்காணிக் கீழரையே மூன்றுமாவரைக்

காணியும் இந்நாள் முதல் இறையிலியாகப் புரவில் கழித்து இந்நாயனார்க்கு அமுதுபடி உள்ளிட்ட நித்த நிமந்த்தங்களுக்கு கடமையும் இவ் வரும்புகலழித்த பாண்டியதேவர்க்கும் இவர் வம்சத்திலுள்ளார்க்கும் காராண்மையுமாக இறையிழித்துக் குடுத்தமைக்கும் இந்நாயனாற்கு அமுதுபடி உள்ளிட்ட நித்த நிமத்தங்களுக்குக் கடமை

5. ஆண்டொன்றுக்கு வாடாக்கடமையாக கோல்குடி தாங்கியால் மாத்தால் நெல் 18 கலம் ஆக நெல் 24 கலம் இந் நெல்லிருபத்து நாற்கலமும் கோயிற்காலாலே அளப்பதாகவும் இவ்வூர் நத்தத்தில் எங்கள் பக்கல் இவர் முன்னாள் விலைகொண்டனுபவித்து வருகிற ஏற்றச் சுருக்க முட்படக் குழி... இக்குழி நாற்றுநாற்பத்தெட்டுமே இந்நாயனார் தேவதானமாக குடுத்தமைக்கும் இம்மனைக்கு கடமை திருவிளக்குக்கு ஆண்டொன்றுக்கு மூன்று பணம் இறுப்பதாகவும் இந்நிலம் மனையும் இவ்வரும்புகலழித்த பாண்டியதேவர்க்கும் இவர் வம்சத்தி

6. லுள்ளாற்கும் காராண்மையும் இந்நாயனார் அழகிய பாண்டிய தக்ஷிணாமூர்த்தி தேவற்கும் இப்படி கடமையும்மாக இறைகழித்துக் குடுத்தமைக்கும் இந்நாள் முதல் இவ்வரும் புகலழித்த பாண்டியதேவற்கும் இவர் வம்சத்திலுள்ளார்க்கும் காராண்மையும் இந்நாயனாற்கு இப்படி கடமையுமாக சந்தி ராதித்தவத் செல்வதாக புரவிற் கழித்துக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக்கொள்வதாக இறையிலி பிடிபாடு பண்ணிக் குடுத்தோம் ஆதிசண்டேசுவரதேவற்கு ஊராய் இசைந்த ஊரோம் இராம அரையன் தேவன் பிள்ளை எழுத்து இவை ஆளுடையான் ஆண்டபிரானெழுத்து இவை பாண்டியதரையன் எழுத்து இவை

7. சாவாநிலை தெய்வச்சிலைப்பெருமாள் எழுத்து இவை நிரைமீட்டான் திருவிராமீசுவரமுடையான்னெழுத்து இவை வேளான் பிள்ளையா ரெழுத்து இவை அரையன் திருமாலெழுத்து காவாநிலை...எழுத்து இவை நிரைமீட்டான் பூமதேவன் எழுத்து இவை நிரைமீட்டான் எழுத்து இவை தாயாண்டான் உதையமழகியா னெழுத்து திருக்காருடையா கோபனெழுத்து திருமால் நம்பிபிள்ளை எழுத்து இவை... பலராயனெழுத்து இவை

*அரையன் நிரைமீட்டான் எழுத்து நிரைமீட்டான் எழுத்து இவை காவாநிலை திருவிராமீசுவரமுடையான் எழுத்து காரி...எழுத்து*

8. *இவ நிரை மீட்டான் எழுத்து இவை எடுத்தகையழகியான் திருவாள் னெழுத்து இவைவரகுண....பாயிரமுடையான் எடுத்தகை கோதை நிரைமீட்டான் எழுத்து கோல்மலை பொன்னம்பலகூத்தன் னெழுத்து.*

9. *இவை பூவாண்டானெழுத்து இவ அரையன் செயங்கோள மாண்டான் எழுத்து இவ ஆனையன் அழகப்பெருமாள் எழுத்து.*

## 14. அம்பா சமுத்திரத்தில் இரு நடுகற்கள்

செல்வி ஜெ. கிறிஸ்டிவேதா, சென்னை.

அண்மையில் அம்பாசமுத்திரத்தைச் சார்ந்த டாக்டர் டி. சங்கரநாராயணன் கொடுத்த தகவலின் பேரில் பிரம்ம தேசத்திலிருந்து அம்பாசமுத்திரம் செல்லும் சாலையின் இடது பக்கத்தில் சுமார் 50 அடி தூரத்தில் இரண்டு நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டன. பெரும்பாலும் இரண்டும் ஒரே செய்தியைக் கொண்டவை போலத் தெரிகிறது. இறுதி மூன்று வரிகள் தெளிவாக இல்லை. காலம் சுமார் 12ஆம் நூற்றாண்டு.

*1. ஸ்வஸ்திஸ்ரீ*
*2. ஸ்ரீகோமாற*
*3. பன்மரான த்ரிபு$_4$*
*4. வநச்சக்கரவர்*
*5. திகள் ஸ்ரீ வல்லப$_4$*
*6. தேவற்குயாண்டு*
*7. [ஏழா] வது நம்பிரா*
*8. ன் உத்தமசோழ*
*9. ன் ஏறியருளா*
*10. நிற்கப் [பாஞ்ச*
*11. நர்மற்கு]*



* *கல்வெட்டு முற்றுப் பெறவில்லை*

# 15. கம்பண்ண உடையாரின் வரகூர் பட்டணம் கல்வெட்டு

ப. வெங்கடேசன், பாணாவரம்.

வட ஆற்காடு அம்பேத்கர் மாவட்டம், ஆற்காடு வட்டம், வரகூர் பட்டணம் என்னும் ஊரில், முருகேச கவுண்டர் நிலத்திலுள்ள கற்பலகையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

கி.பி. 14-ஆம் நூற்றாண்டு

கம்பண்ண உடையார் காலத்தில், இவ்வூரில் குடியேறும் குடிகளுக்கு விதிக்கப்பட்ட வரியைப் பற்றி குறிப்பிடப் பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ மஹாராஜ பரமே ஸ்வரர்
2. தப்புவராய கண்டன் மஹாராய கண்டன்
3. பொக்கண உடையார் குமாரர் கம்பண்ண உடையார்
4. ... பட்டணத்தில் ...
5. குடிகள் பல ஏரும் நிருபம் சௌமிய
6. வருஷம் தாங்கள் குடியேறின நா
7. ள் முதல் ... ஒன்றிற்கு வா
8. சல் பணம் ஆயம் னூலாயம்
9. பேற் கடமை உட்பட பேர் ஒன்றிக்கு
10. னாலு பணங் கொள்ளக்கடவதாகவும்
11. தறி இடு நெய்யும் பேற்கு தறி இ
12. டும் வாசல் ஆயம் உட்பட தறி ஒன்றி
13. க்கு னாலு பணங் கொள்ளக்கடவதாகவும்
14. செக்கு வாணியர்க்கு வாசல்பணம் பே
15. ற்கடமை உட்பட செக்கு ஒன்றுக்கு *

# 16. சதாசிவ தேவமகாராயரின் தேவிகாபுரம் கல்வெட்டு

ம. காந்தி, வேலூர்;
ப. வெங்கடேசன், பாணாவரம்.

திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், ஆரணி வட்டம், தேவிகாபுரம் என்னும் ஊரில் பெரிய நாயகி அம்மன் கோயில் எதிரில் அமைந்துள்ள தேரடி நிலையின் அடியில், ஒரு கற்பலகையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

சதாசிவ தேவ மகாராயர், (கி.பி.1564)

வீரப்ப நாயக்கரின் மகன் பாப்பு நாயன் என்பவன் பெரியநாயகி அம்மன் கோயிலைச் சுற்றி அமைந்துள்ள புதுமதிலின் தெற்குப் பக்கத்தில் அமைந்துள்ள திட்டி வாசலுக்கு எதிரில் இருந்த பெரிய மனைப் பகுதியை விற்று, திருமலா உடைய நாயனார்க்கு திருக்கண் சாத்தவும், இரண்டாம் நாள் திருவிழா கொண்டாடவும், மோப்பூர் விநாயகரை எழுந்தருளச் செய்யவும் செய்த ஏற்பாடுகள் குறிக்கப்பட்டுள்ளன.

*1. ஸ்ரீமந் மஹா மண்ட*
*2. லேஸ்வர ராஜாதிராஜ*
*3. ராஜ பரமேஸ்வரன் சதாசிவ*
*4. தேவ மகாராயர் ப்ரிதிவி*
*5. ராஜியம் பண்ணி அருளா*
*6. நின்ற சாகப்தம்*
*7. 1486 மேல் செல்லா*
*8. நின்ற ப்ரபவ சம்சவச்சர*
*9. த்து விருச்சிக நாயற்று பூர்வ*
*10. பக்ஷத்து பவுர்ணமியும் ரோ*
*11. ஹிணி நட்சத்திரமும் பெற்ற ஆ*

12. தித்த வாரத்து நாள் திருமலா
13. உடைய தம்பிராநாற்கு திரு
14. க்கண் சாத்தவும் இரண்டாந்
15. திருநாள் உபையத்துக்கு தெ
16. ன் புதுமதில் திட்டி வாசலுக்கு
17. எதிர் மனை விலையாகக் கொ
18. ண்டு மடமும் மண்டபமுமரி
19. க்ககட்டி மோப்பூர் விநாயகனை
20. யும் எழுந்தருளப் பண்ணி இந்த
21. தலத்திலுள்ள பேற்கெல்லாம்
22. புண்ணியமாக மோப்பூர் வீரப்
23. ப நாயக்கர் புத்திரன் பாப்பு நாயன்
24. கட்டளை பண்ணிந தற்மம் ஆதி
25. ந்தராதமாக நடக்க கடவதா
26. கவும் இந்த தற்மத்துக்கு அகிதம் ப
27. பண்ணின பேர் கங்கை கரை
28. யிலே காராம் பசுவை கொன்ற
29. தோஷத்திலே போகக் கடவாராக
30. வும் இப்படி...ன்மைக்கு
31. கோயில் கணக்கு வீரப்பந் எழுத்து

# 17. மங்கலம் பெருமாள்கோயில் கல்வெட்டு

ம. காந்தி, வேலூர்;
ப. வெங்கடேசன், பாணாவரம்.

திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், திருவண்ணா மலை வட்டம், மங்கலம் என்னும் ஊரில், பெருமாள் கோயில் முன்பாக உள்ள கற்பலகை கல்வெட்டு.

கி.பி.16ம் நூற்றாண்டு.

அகரம் மங்கலமான சோமநாத சதுர்வேதி மங்கலம் சர்வமான்யமாக விடப்பட்டுள்ளது.

1. *ஸ்வஸ்திஸ்ரீ அ*
2. *கரம் மங்*
3. *கலமான*
4. *ஸ்ரீ சோ*
5. *மநாத$_2$ச*
6. *துர்வெதி$_3$மங்*
7. *க$_3$லம் ச*
8. *ர்வ மானியம்*

# 18. வேங்கடாத்திரி நாயக்கரின் வேதராஜிபுரம் கல்வெட்டு

ப. வெங்கடேசன், பாணாவரம்.

வட ஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டம், ஆர்க்காடு வட்டம், வேதராஜிபுரம் என்னும் ஊரிலுள்ள நாகப்ப சௌத்ரி நிலத்தில் அமைந்துள்ள பாறையில் வெட்டப்பட்ட கல்வெட்டு. ஒரு கோட்டுருவம் கல்வெட்டுக்கு மேல் வரையப்பட்டுள்ளது.

16 ஆம் நூற்றாண்டு.

வேங்கடாத்திரி நாயக்கர் முதலியோர் சேப்பலிங்க நாயக்கருக்கு புண்ணியமாக ஆனைமல்லூர் அம்மனுக்கு திருநாள் படி செய்ய தீர்த்தலைத் தாங்கல் என்ற ஊரை தானமாக விட்டனர்.

1. *சுக்கில வருஷம் ஆவணி மாதம் 3ஆம் தேதி ஆனமல்லூர்*
2. *அம்மனுக்கு உச்சநி வேங்கடாத்திரி னாயக்கநும் ராந்தமதி சிலை நாயக்கநும் வாலசிதம நாயக்கநும்*
3. *செப்ப லிங்க னாயக்கர் புண்ணியமாக திருனாள் படியிக்கு விட்டார்.*
4. *தீற்த மலை தாங்கல் இதுக்கு யாதாம் ஒருவர் கடமுடைய் பண்ணியவர்கள் கெங்கை கரையி காரம்*
5. *பசுவை தாயி தகப்பனை கொன்ற தோஷத்*
6. *தில் கடவான்.*

# 19. கொடைக்கானல் மேல்மலைக் கல்வெட்டுகள்

**சொ. சாந்தலிங்கம், மதுரை.**

கொடைக்கானல் மலையின் மேல்கோடியில் அமைந்துள்ள மேல் மலை ஊர்களில் ஆய்வு செய்த போது பல கல்வெட்டுகள் கண்டறியப்பட்டன. மேல்மலை அடிவாரத்தில் அடர்ந்த காட்டுப் பகுதியின் நடுவே அமைந்த மஞ்சம்பட்டியிலும் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. இக்கல்வெட்டுகள் மேல்மலை மக்களின் இடைக்காலத்து வரலாற்றை அறியத் துணை நிற்கின்றன. மேல்மலை மக்களின் தொன்மையையும், சமூக அமைப்பையும் குடியேற்றங்களையும் பற்றி தெரிவிக்கின்றன. மேலும் உயர்ந்த மலைமுகடுகளிலும், காட்டுப் பகுதிகளிலும் வாழ்ந்த மக்களோடு மன்னனுக்கு இருந்த உறவையும் காட்டுகின்றன.

***19.1*** கொடைக்கானல் வட்டம், போரூர் கிராமம், விநாயகர் கோயில் அருகிலுள்ள எழுத்துப்பாறைக் கல்வெட்டு. இக்கல்வெட்டுக்குக் கீழே யானை, காளை, நாகம் ஆகியவற்றின் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன.

கி.பி.14-ஆம் நூற்றாண்டு. (எழுத்தமைதியில் )

பேராலூரில் அரசரால் இரண்டு பிரிவாகக் (இரண்டு மன்று பரியாயமாக) குடியேற்றப்பட்ட மன்றாடி இனத்தவர்கள் (மன்னாடிமார்) தங்களுக்குரிய காணியை அனுபவித்து வந்தனர். இவர்களில் வெயிலன் உள்ளிட்ட ஒரு பிரிவினர் மற்றொரு குடியின ரோடு முரண்பட அது பகையாய் மாறியது. பகையாய் மாறிய குடியினர் பேராலூரிலிருந்து அகற்றப்பட்டு இடைக்கரை பூண்டி என்ற ஊர்ப்பகுதியில் அரசனால் குடியமர்த்தப்பட்டனர். பேராலூரி லேயே மற்றொரு பிரிவினர் இருக்கும்படி செய்யப்பட்டது. பேராலூரில் இருந்த ஊரவர்கள் அரசனுக்கு விசுவாசமாய் நடப் போம் என்றும் தங்கள் குடியினரில் யாராவது அரசனுக்கு எதிராகச் செயல்பட்டால் அவர்களைப் பிடித்து அரசனிடம் ஒப்படைப் போம் என்றும் உறுதி தந்து எழுதிக்கொடுத்த ஆவணமாக இக்கல் வெட்டு உள்ளது.

கல்வெட்டில் குறிப்பிடும் பேராலூர் இன்றுள்ள போரூர் ஆகலாம். பூண்டி என்ற ஊர் போரூருக்கு அருகிலேயே உள்ளது. கல்வெட்டில் குறிப்பிடப்படும் அரசன் யாரென்று தெரியவில்லை. ‘தம்பிரானார் சீபாதம்’ என்று கல்வெட்டில் குறிக்கப்படுவதால் இவன் பிற்காலச் சேர மன்னனாக இருக்க வாய்ப்புள்ளது.

*1. தம்பிரானார் சீபாதத்துக்கு பேராலூர் ஊரோம் எங்களில் இசைந்து கல்*

*2. வெட்டிக்குடுத்த பரிசாவது எங்களை முன்னாளிலே பேராலூரின் நின்றும் இ*

*3. ரண்டு மன்று பரியாயமாக வெட்டிக் கடத்தி ஊருங்காணியும் அனுபவித்து எங்*

*4. களுக்குப் புறவாய்ப் போந்த பகைய்குடியான வெயிலன் உட்பட்டாரையு*

*5. ம் இவ்வூரில் நின்றும் வெட்டிக் கடத்திவிட்டு இவர்களுக்கு இடைக்கரை*

*6. பூண்டியாகக் குடுத்தருளி எங்களுக்குப் பேராலூருந் தந்தருளுகையில் தம்பிரானார் திருவங்*

*7. கிழசமுள்ள அளவும் எங்கள் வங்கிழசமுள்ள அளவும் சீபாதம் தப்பாமல் பணிவிடை செய்வோம்*

*8. சீபாதம் தப்பினோமாகில் எங்களைக் கருவறுதியாக வெட்டுவித்துப் போகிட்டருளுவர்*

*9. எங்களிலே சிலர் சீபாதம் தப்பில் நாங்களே பிடித்துக் கொண்டு நாயனார் சீபாதத்திலே*

*10. வெட்டிக் குடுப்போமாகவும் எங்களில் இந்த அறுதியிடு கையில் இவ்வறுதி தப்பினவன்*

*11. ...க்குப் பிறந்தோமாகவும் கல்வெட்டிக் குடுத்தோம்*

*12. ளும் மனை வென்றி கொண்ட பெருமாள் மன்றாட்டியும்*

*13. ...புல்ல...க...மாள்...கொக்கியும் எழுத்து.*

***19:2*** கொடைக்கானல் வட்டம், கிழாவரை ஊரிலுள்ள பாறைக் கல்வெட்டு.

கி.பி. 14-ஆம் நூற்றாண்டு. (எழுத்தமைதிப்படி)

இவ்வூருக்கு அருகிலுள்ள போரூர் கல்வெட்டினைப் போன்றே இவ்வூரில் மக்கள் அரசனால் குடியமர்த்தியதைப் பற்றி இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. ஆனால் கல்வெட்டு மிகவும் சிதைந்து போய்விட்டது. இதனால் முழுமையான செய்தியை அறியமுடியவில்லை. குடியேற்றப்பட்டவர்கள் அரசனுக்கு விசுவாசமாக நடந்து கொள்வதாக கல்வெட்டின் இறுதிப் பகுதியில் தெரிவித்துள்ளனர்.

***19:3*** மஞ்சம்பட்டி நாவலாற்றின் கிழக்குக் கரையில் உள்ள எழுத்துப்பாறை. ஊருக்குக் கிழக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் காட்டுப் பகுதியில் உள்ளது.

கி.பி. 15-ஆம் நூற்றாண்டு (எழுத்தமைதிப்படி)

இக்கல்வெட்டு சிதைந்து தேய்ந்து மழுங்கிய நிலையில் உள்ளது. இதனடுவில் புடைப்புச் சிற்பமாக பாம்பு, காளை, யானை ஆகியவற்றின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. முழு வாசகத்தினையும் கல்வெட்டு சிதைவுற்றமையால் அறியமுடிய வில்லை. மாடவார், இராசபுரம், தேவரையூர் ஊரவையினர் சேர்ந்து இதனை வெட்டுவித்துள்ளனர். முப்பத்து மூன்றாவது ஆட்சி யாண்டும் வேங்கை வென்ற செயலும் பலரது கையொப்பமும் இதில் உள்ளதை உய்த்தறிய முடிகிறது.

# 20. கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள்

**தே. கோபாலன், நாகர் கோவில் .**

**20:1** கன்னியாகுமரி மாவட்டம், கல்குளம் வட்டம், திருநயினார் குறிச்சிக்கு வடமேற்கே சுமார் 1 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள பள்ளிக்கரை எனும் ஊரில் வள்ளியாற்றின் கிழக்குக் கரையில் ஒரு பாறையின் மீது இக்கல்வெட்டு தமிழ் எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இதில் 12 வரிகள் படிக்க இயலாதவாறு பொரிந்து போயுள்ளது. எனினும் ஓரளவு விவரம் அறிய முடிகிறது.

கொல்லம் 757 (கி.பி.1581).

கி.பி.1581 இல் நக்கன் செல்வன் பொன்னன் என்பவர் ஸ்ரீபள்ளி என்ற சமணப் பள்ளிக்கு நிலம் தானமாகக் கொடுத்ததினையும் அந்நிலத்திற்குரிய எல்லைகளையும் இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

*1. கொல்லம் 757 வருஷம்*
*2. வைகாசி 10 ஸ்ரீ பள்ளிக்கு*
*3. கலிங்கு மடத்துக்கு*
*4. நாராயணன் க...*
*5. கரையிலெக்குய...ய்ய*
*6. கரையுட்பட்ட...குளம்*
*7. கன்னகுள மடத்தின்...*
*8. மும்...அ...மை*
*9. குன்னகுளம்...*
*10 - 18 ...*
*19. கொன்ற பாவம் கைப்...*
*20. போலும் கொள்ளவும்*
*21. நக்கன் பொன்னன்*
*22. செல்வன் தம்மம்*

**20:2** கன்னியாகுமரி மாவட்டம், கல்குளம் வட்டத்தில், கண்டன் விளை என்ற ஊரில் உள்ள கல்லறை.

கி.பி.1877 செப்டம்பர்3, கொல்லம் (தமிழ்) 1053 ஆவணி.

திங்கள்சந்தை - நாகர்கோயில் சாலையில் குழந்தை திரேசாள் தேவாலயத்திற்கு அருகிலுள்ள அலங்கார் பேங்கர்சுக்கு எதிரில் இக்கல்லறை தனியாகக் காணப்படுகிறது. இக்கல்லறை கருங்கல், செங்கல் மற்றும் சுதை கொண்டு எழுப்பப்பட்டுள்ளது. இக்கல்லறையின் மேல் பகுதியில் இருந்த சிலுவை இப்போது காணவில்லை. இக்கல்லறையில் விளக்கு வைப்பதற்கு விளக்கு மாடம் ஒன்றும் காணப்படுகிறது. குறிப்பிடப்படும். அச்சன் பாடு என்ற ஊர் வ.உ. சிதம்பரனார் மாவட்டத்தில், நாங்குனேரி வட்டத்தில், வள்ளியூருக்குக் கிழக்கே உள்ள விஜய அச்சன்பாடு என்ற பெயரில் வழங்கப்படும் ஊராகலாம்.

1. *1877 ஆம் வருஷம்*
2. *சவுட்டம்பர் மாதம் 3 தேதிக்கு 1053 ம் வருஷம்*
3. *ஆவணி மாதம் 10ந் தேதி ஞாயிற்றுக்கிழமை*
4. *காலை 10 மணிக்கு நான்கூ*
5. *னேரித்தாலுகா அச்சன்பா*
6. *டு மிராசு சவேரிமுத்து நா*
7. *டான் மகன் அருளப்பன் மர*
8. *ணம் இவனாற்றுமத்துக்காக*
9. *வேண்டிக் கொள்ளவும் ✝*

# 21. எழுமலை மாதாந்தம் சுப்பிரமணியசுவாமிகோயில் செப்பேடு

ஜி. சேதுராமன், மதுரை

மதுரைக்கு மேற்கே நாற்பது கிலோ மீட்டர் தொலைவில் எழுமலைக் கிராமத்துக்குத் தெற்கே டி. இராமநாதபுரம் செல்லும் வழியில் மாதாந்தம் சுப்பிரமணியசுவாமி கோயில் இருக்கிறது. இக்கோயில் தொடர்பான செப்பேடு ஒன்று இக்கோயில் அமைந்துள்ள கவுண்டியநதிக் கரையில் இருக்கும் ஆத்தங்கரைப் பட்டி ஞானியார் ப.நா. சண்முகம்பிள்ளை அவர்களிடம் உள்ளது.

இச்செப்பேடு செவ்வகவடியில் அமைந்துள்ளது. மயிலும் வேலும் தொடக்கத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழில் குறில், நெடில் வேறுபாடின்றி முப்பது வரிகளில் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது. எழுத்துப்பிழைகள் மலிந்து, பேச்சுநடையில் காணப்படுகிறது. இது எழுதப்பட்ட காலமாக கலியுக சகாப்தம் 4816-ஆம் ஆண்டு (கி.பி.1715) இதில் குறிப்பிடப்படுகிறது. எழுமலை ஜமின்தாரின் முன்னோரான கம்பளத்தார் சமூகத்தினைச் சார்ந்த எரசின்னப்பநாயக்கர் அவர்கள் கவுண்டியநதிக்கரையில் எழுந்தருளியிருக்கும் வாலசுப்பிரமணியசுவாமிக்கு வீரேசன் குளத்தை மானியமாக அளித்துள்ளதையே இச்செப்பேடு தெரிவிக் கிறது. இதனைக்கொண்டு கோயிலில் பூசை நைவேத்தியம் படித்தரம் போன்ற காரியங்களை எவ்வித தாழ்வும் இல்லாமல் நடத்தி வர வேண்டும் என்று இக்கோயிலில் தானிகராக விளங்கிய மாதாநத்தத்திலிருக்கும் சுப்பிரமணிய ஞானியாருக்கு இப்பட்டயம் அளிக்கப்பட்டிருக்கிறது. இக்கோயிலில் சிறப்பு வழிபாடு, திருவிழா முதலியன நடைபெறும்போது சின்னப்ப நாயக்கருக்கு தீர்த்தம், பிரசாதம் முதலியன அளித்து மரியாதை செய்ய வேண்டும் என்றும் உள்ளது.

இச்செப்பேட்டில் குறிப்பிடப்படும் வீரேசன்குளத்தினைத் தற்போது விரிசங்கக்குளம் என்று அழைத்து வருகின்றனர். மாதாநத்தம் தற்போது மாதாந்தம் என அழைக்கப்படுகிறது.

1. சுபகற்ம கலியுக சகாற்த்தம் 4116 மேல்ச்
2. செல்லா நின்ற...சித்திரை மீ 13ந் தேதி வாலசுப்பிர
3. மணியசுவாமி கவண்டிய நதிக்கரையில் யெழுந்தருளி வந்த
4. படியினாலே நித்தியபூசைக் கட்டளைக்காக யெளுமலை யென்று
5. யெடம் விளங்கிய அளகியநல்லூரில் செங்கோல் [செலுத்தும்] கம்
6. பளத்தாரில் காமவாற்...லாரிப்பன் நடைகோட்டை யாரிப்பன்
7. பற்றுகாவலன் னயங்கி நாறாயன சந்தற்கா விருதுடைய யெற
8. சின்னபநாயக்கரவர்கள் மாதாநத்ததிலிருக்கும் சுப்பிறமணிய
9. ஞானியாருக்கும் யெளுதி குடுத்த தாம்பிற சாதனபட்டயம் யென்ன
10. வென்றால் காமக்கோசலபசி சன்னியதானத்துக்கு மாதாந்தம்
11. நடத்தி வந்ததில் மேற்படி வாலசுப்பிறமணியசுவாமி நம்முடைய கவுண்
12. டியநதிக்கரையில் வந்தெளுந்தருளிய படியினாலே மேற்படி வாலசுப்பிற
13. மணியசுவாமி கோவிலுக்கு நித்தியம் தானிக நிருபாகியான படியி
14. னாலே நம்முடைய வீரேசன்குளத்தை தம்முடைய மாநிப
15. மாயிவிட்டு குடுத்திருத்திருக்கிற படியினாலே மேற்படி கோவில்
16. பூசை நெய்வேத்தியம் படித்தரம் சிலவு கையில் தாள்வு யில்லாமல் ந
17. டப்பிவியத்துக் கொண்டு வறவேண்டியது மேற்படி கோவிலுக்கு வருமானம் காணி
18. க்கை முதலான யாசக பலவகை வருமானங்களையும் மேலே எளுதிய வீரே
19. சன்குளமும் தம்முட மாரிபம் சருபமானிபமாக விட்டுக் குடுத்திரு

20. க்கிற படிய்னாலே மேற்படி கோவில் காரியங்களில் தாள்வில்லாமல் ந

21. டத்திவிச்சுக்கொண்டு வறவேண்டியது மேற்படி கோவிலில் விசேஷ

22. முதலாகிய தீபவிளாவுக்கு நமக்கு தீர்த்த பிரசாதம் கண்டு கொ

23. ள்ள வேண்டியது மேலே எளுதிய கோவில்பூசை நெய்வேத்திய

24. சிரப்புவகைக்கு விட்டுக் குடுத்திருக்குற சாசுவதமானிபத்தை ந

25. மக்கு பிற்க்காலங்களில் நம்முடவம்முசத்தில் யாதாமொ

26. ருவராகிலும் மேலே எளுதிய தாம்பிரசாதன பட்டயத்தில் க

27. ண்டிருக்கிறதில் தடையிடை கூறு நினைப்பாரை தாளாமாகில் கெ

28. ங்கை கரையில் காறாம்பசுவைக் கொன்ற தோசத்திலும் சே

29. துக்கரையில் கோடி பிராமணாளை வதை செய்த தோசத்தி

30. லும் போவாறாகவும் யெறசின்னுநாயக்கரே.

## 22. இராமேசுவரம் பண்டகசாலை விலைச்சாதனம்

**எஸ். எம். கமால், இராமநாதபுரம்.**

1. *ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாந்தம் 1741 யிதன் மேல் 1818 டிசம்பர் மாதம்... தேதி வெகுதான்ய வருஷம் மார்களி மாதம் 3 தேதி செம்பி நாடு அனுத்துகைமங்கலம் நினைத்தது முடித்தான் பட்டினமாகிய கீழெக்கரை யிலிருக்கும்*

2. *ராமீசுரம் லெவ்வை மரைக்காயரவர்களுக்கு பாம்பனி லிருக்கும் முத்தய்ய பிள்ளை மகன் முத்துச்சாமியா பிள்ளை ராமீசுரம் கூலப்பண்டகசாலை அறுதிவிலைச் சாதனம் பண்ணிக் குடுத்த பரிசாவது யித்தனாள் தங்களுக்கு விக்கின்ற ராமேசுரம் கூலப்பண்டக சாலைக்கு*

3. *எல்கையாவது கிழக்கு எல்கை சரவணைப்பணிக்கன் வீட்டிற்கு மேற்கு, தென்னெல்கை பொன்னப்ப பிள்ளைவீட்டுக்கு வடக்கு, மேல் எல்கை மீனாட்சி செட்டி வீட்டுக்கு கிழக்கு, வடயெல்கை கடைத்தெருப் பாதைக்கு தெற்கு ஆகிய யின்னாங்கெல்கைக்*

4. *குள்ளிட்ட கூலபண்டகசாலையும் அதில் சேர்ந்த நிலமும் ராமீசுரத்தில் கொள்வாருளிரோ, கொள்வாருளிரோ வென்று நான்முற்கூற, தாங்கள் பிற்கூறி கொள்வோமென்று வந்து இசைந்து எம்மிலிசைந்து தம்மில் பொருந்தி னால்வர்*

5. *கூடி மூவர் உசாவி யிருவர் கொய்து பிடித்து ஒருவர் விலை நிள்ச்செயித்து அன்றாடகம் விளங்கும் பூவிராகன் 100....யிந்த நூறு பூவிராகனும் சுளி ஒரு பணமும் ரொக்கம் பத்திக் கொண்டதினாலே இதுவே அறுதிவிலையாகவும் இதுவல்*

6. *லது வேறு விலைமாசி அல்லது பொருள் மாசி அல்லது பொருள் சிலவாவது யிதுவன்றியே ஒருக்காலாவது யிருக்காலாவது முக்காலாவது ஓலைக்குத்தம் யெளுத்துக்குத்தம் சொல்குத்தம் பொருள் குத்தம் வரிய்பிளை*

7. வரிமாறாட்டம் வரி முடைந்தெளுதல் நெரிதல் வெட்டுச் செதுக்கு மற்று மேல் குத்தமும் குத்தமனாதியெளுதி சந்திராதித்த சந்ததிப் பிரவேச புத்திர பவுத்திர பரம்பரையாக கீள் நோக்கிய கிணறும் மேல் நோக்கிய மரமும் திட்டுத்திடல்

8. யெப்பேர்ப்பட்ட சொல் பதார்த்தமு மீட்சியின்றியே ஆட்சியாக கல்லுங்காவேரியும் புல்லும் பூமியும் உள்ள நாள் வரைக்கும் அனுபவித்துக் கொள்ளக்கடவீர்களாகவும் இப்படிக்கு ஆளுமிடத்தில் தடையிடை

9. வந்தால் நானே தடைதீர்த்துத் தருவேனாகவும் இப்படிக்கு சம்மதித்து ராமீசுரம் கூலப்பண்டகசாலை அறுதிச் சாதனம் பணிக்குடுத்தேன் லெவ்வை மரக்காயரவர்களுக்கு முத்துச்சாமியாபிள்ளை ஒப்பம் இது காரியம் சாட்சி.

10. ஸ்ரீதர்ம மகாஜன நெயினாக்களில் சபாபதிநெயினார் மகன் சாமி நெயினார் முத்தணன் நெயினர் மகன் அய்யாக்குட்டி நெயினா கொத்துக்கணக்கு நல்லசிவம் பிள்ளை மேற்படி அனந்தப்பிள்ளை மீரா லெவ்வை அம்பலம் மேற்படி அம்பலம் ராக்கப்பர் செட்டி

11. மேற்படி அம்பலம் கோமுட்டி நாகந்செட்டி மகன் ராமலிங்கம் மேற்படியார் வாவாராவுத்தர் மகன் சங்கிலி வாவா இவர்களறிய இந்தக்கூலபண்டகசாலை அறுதிச் சாதனம் எழுதினேன் முத்தணன் கைநெட்டெழுத்து.

12. இந்தப்படிக்கு முத்துச்சாமி இந்தப்படிக்கி அறிவேன் ரெகுநாத குருக்கள் அறிவேன் கொத்துக்கணக்கு அனந்தப்பிள்ளை அறிவேன் மீராலெவ்வை அம்பலம்

13. இந்தப்படிக்கு அறிவேன் கொத்துக்கணக்கு சண்பகம் பிள்ளை

14. இந்தப்படிக்கு சபாபதிநயினார் மகன் சாமிநெயினார் அறிவேன் ராக்கப்பஞ்செட்டி அறிவேன் ராமலிங்கஞ் செட்டி.

15. இந்த ஓலை வித்தேன் இராமநாதபுரம் முத்திரைக் காகிதம் விற்பனை ஹெட்தாசில்தார் (கையொப்பம்)

16. 1818 டிசம்பர் மீ 17 தீ

## 23. கொடுமளூர் செப்புப்பட்டயம்

நாக. கணேசன், இராமநாதபுரம்;

இராமநாதபுரம், திருமலை சடகோபாலன் என்பவரிடம் உள்ளது

ரகுநாத சேதுபதி என்கிற கிழவன் சேதுபதி. 22.01.1680

26 செ.மீ. யீ 16.5 செ.மீ. அளவும் 800 கிராம் எடையுமுள்ள இச்செப்பேடு கி.பி. 1674 முதல் கி.பி. 1710 வரை சுமார் 36 ஆண்டுகள் மறவர் நாட்டையாண்ட ரகுநாத சேதுபதி என்கிற கிழவன் சேதுபதி தனது ஆட்சிக் காலத்தில் வழங்கிய கொடை பற்றியது. கிழவன் சேதுபதி கோயில்களுக்கும், மடங்களுக்கும் நிலதானம் வழங்கியது பற்றி சுமார் 11 செப்பேடுகள் கிடைத்துள்ளன. இச் செப்பேடு அந்தணர் ஒருவருக்கு தனுஷ்கோடியிலிருந்தபோது நிலதானம் வழங்கியதைப் பற்றிக் கூறுகிறது. நிலம் வழங்கப் பெற்ற கொடுமளூர் இராமநாதபுரத்திற்கு தென்மேற்கே சுமார் 40 கி.மீ. தொலைவில் அதே பெயரில் இன்றும் உள்ளது.

1. *ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹந சகாப்தம் 1601 இதன்மேற் செல்லாநின்ற சித்தார்த்தி*
2. *நாம சம்வத்சரத்து உத்தராயணத்து ஹேமந்த ரிதுவில் மகர மாஸத்து பூர்வ பக்ஷ*
3. *த்து த்விதியையும் குருவாசரமும் சத்பூஷா நக்ஷத்திரத்து வரியான் னாமயோகமும் பால*
4. *வாகரணமும் பெத்த மஹோதய புண்ய காலத்தில் தேவைநகராதிபன் ஸேது மூலரக்ஷா*
5. *துரந்தரன் ராமனாதஸ்வாமி காரியா துரந்தரன் சிவபூசா துரந்தரன் பரராஜ சேகரன் ப*
6. *ரராஜ கெஜஸிம்ஹம் ரவிகுல சேகரன் ரவிவர்மன் சொரிமுத்து வன்னியன் ஸ்வஸ்திஸ்ரீ.*
7. *மன்மகாமண்டலேசுரன் அரியரா யிரதள விபாடன் பாஷைக்குத் தப்புவராயிரக*

8. ண்டன் மூவராயிரகண்டன் கண்ட நாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்

9. பட்ட மானங்காத்தான் துட்டராயிர கண்டன் புவனேகவீரன் வீரகஞ்சுகன் வீர

10. வளநாடன் வேதியர் காவலன் அரசராவணராமன் அடியார் வேளைக்காறன்

11. பரதளவிபாடன் உரிகோல்சுரதானன் அந்தம்பிற கண்டன் சாடிக்காரர் கண்

12. டன் ஸ்வாமித்துரோகியள் மிண்டன் பஞ்சவற்னராய் ராவுத்தன் பனுக்குவார் க

13. ண்டன் வைகை வளநாடன் கொட்டமடக்கி வைய்யாளி நாராயணன் இவுளி

14. பாவடி மிதித்தேறுவார் கண்டல் வீர வெண்பாமாலை இளஞ்சிங்கந் தளஞ்சி

15. ங்கம் பகைமன்னர் சிங்க மதுரை ராயன் ஆற்றில்ப் பாச்சி கடலில் பாச்சி மதப்புலி

16. அடைக்கலங்காத்தான் தா

17. லிக்கு வேலி சத்துருவாதியள்

18. மிண்டன் வன்னியராட்டம் தவி

19. ள்த்தான் மேலவர்கள் கோளரி மேவலர்கள் வணங்குமிரு தாளினான் வீரம

20. கா கெம்பீரன் கீற்த்திப் பிறதாபன் ஆரிய மானங்காத்தான் தொண்டிய

21. ந்துறை காவலன் துரகரேவந்தன் அனுமகேதனன் குடைக்குக் கர்ணன்

22. பரத நாடகப் பிறவீணன் கருணா கடாக்ஷன் குன்றினுயர் மேருவைக்

23. குன்றாய் வளைகுணில்ப் பொறித்தவன் திலதநுதல் மடமாதர் மடலெழு

24. த வரு சுமுகன் விசைய லக்ஷ்மி காந்தன் கலைதெரியும் விற்பனன் காம

25. னி கந்தப்பன் சத்திய பாஷா அரிச்சந்திரன் சங்கீத சாயித்திய வித்தியாவி

26. னோதன் வீரதண்டை சேமத்தலை விளங்குமிரு தாளினான் சகல சாம்பிறாச்சி

27. ய லக்ஷ்மி நிவாசன் ஸெய துங்கராயன் வம்சாதிபனான துகவூர்க்கூற்ற

28. த்துக் காத்தூரான குலோத்துங்க சோள நல்லூர் கீள்பால் விரையா

29. த கண்டனிலிருக்கும் ஸ்ரீஹிரண்ய கெற்பயாஜி ஸேதுபதி ரகுநாத தேவ

30. ர்புத்ரன் ஸேதுபதி ரகுநாத தேவர் ராமீஸ்வரத்திலிருக்கும் பாரத்வாஜ கோ

31. த்ரத்து போதாயந ஸூத்ரத்து யஜீச்சாகாத்யாபகரான திருப்பேர் ராமய்ய

32. ன் புத்ரன் லக்ஷ்மி நாராயண அப்பை அய்யனுக்கு பூதாந தம்ம ஸாசநங் கொடுத்தப

33. டி பூதாந கிறாமமாவது குருவை வள நாட்டில் கொடுமனூர்க் கூற்றத்தில் கொடும

34. னூர்க் கண்மாய்க் குளக்கீள்கரை பாதைக்கு மேற்கு மேற்படி கண்மாய் தெற்குத் தண்

35. ணீர்ப் பிடிக்கு வடக்கு மேற்படி கண்மாய் மேற்குக் கரைக்கு கிளக்கு செய்யாமங்

36. கலத்துக்குத் தெற்கு இன்னாங் கெல்லைக்குள்ளிட்ட ஒச்சிஏந்தல் தாதநேந்தல்

37. இதினுடனே சேந்த நஞ்சை புஞ்சை நத்தம் செய்த்தலை திடர் மாவடை மரவடை

38. பள்ளம் படுகை திட்டுத் திடல் தோப்புத் துரவு நீரும் பாசியும் குடிபடை பள்ப்

39. பறை சகல சமுதாயப் பிறாத்தியும் நிதி நிக்ஷேப ஜலதருபாஷாண ஆக்ஷின்ய

40. காம்ய ஸித்த ஸாத்யமென்று சொல்லப்பட்ட அஷ்டபோக தேஜஸ்வாம்யங்

41. களும் மஹோதய புண்ய காலத்தில் ஸஹிரண்யோதக தாரா பூர்வமாக ராம சே

42. துவில் தநுக்கோடி தீர்த்தத்தில் தாரா பூர்வமாகக் கட்டளையிட்ட படியினாலே தா

43. நாதி விநிவிக்கிறயங்களுக்கும் யோக்கியமாக சந்திராதித்யவரை ஸந்ததி ப்ரவே

44. சம் ஸர்வ மான்யமாக ஆண்டநுபவித்துக் கொள்ளக் கடவாராகவும் இந்தத் தர்ம

45. ம் யாதாமொருவர் பரிபாலனம் பண்ணி நடப்பிச்சுக் கொண்டவர்கள் கோடி சி

46. வலிங்கப் பிறதிஷ்டையும் கோடி பிரம்ம பிரதிஷ்டையும் பண்ணின ஸுகு

47. ற்தத்தையடைவாராகவும் இந்தத் தற்மத்துக்கு அகிதம் பண்ணினவர்க

48. ள் கெங்கைக் கரையிலேயும் சேதுவிலேயும் மாதா பிதாவையும் குருவையு

49. ம் காராம் பசுவையும் பிராம்மணரையும் வதை பண்ணின தோஷத்தி

50. லே போகக் கடவாராகவும் இப்படிச் சம்மதித்து ஸ்ரீரகுநாத தேவர் திரு

51. ப்பேர் ராமய்யன் புத்ரன் லக்ஷ்மி நாராயண அப்பை அய்யனுக்கு பூதாந

52. தம்ம ஸாஸநங் குடுத்தோம். தாந பாலந யோம் மத்யே தாநாஸ்ரேயோ

53. று பாலநம் தாநாஸ்வர்க மலாப் நோதி பாலநாதச்சுதம் பத்ம்ஸ்வதத்தாத்வி

54. குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹாரேணா ஸ்வதத்தம் நிஷ்ப

55. லம் பவேத் ஏகேவபகிநிலோகே ஸர்வேஷா மேவ மிர்த்ஜாம் நபோஸ்யாந

56. கர க்ராங் ஹ்யாபி ப்ரதத்தாவஸுந்தரா: இந்தச் சாதனம் யெளுதினேன் கீளை

57. க் கொடுமனூரிலிருக்கும் இறங்கல் மீட்டா பிள்ளை புத்ரந் ராயசம் தாண்டவரா

58. ய பிள்ளை சவாதுப்படிக்கு சென்ன வீரப்ப பண்டாரம் புத்திரன் சடை

59. வீரப்பன் லிகீதம் சுபமஸ்து.



# 24. கொத்தமங்கலம் செப்புப் பட்டயம்

**அ. சந்திரபோஸ், திருச்சிராப்பள்ளி.**

புதுக்கோட்டை மாவட்டம், ஆலங்குடி வட்டம், கொத்த மங்கலம், பளுவான் நகர், திரு. முத்தையன் அவர்களிடமிருந்து பெறப்பட்ட இப்பட்டயம் தற்போது கட்டுரையாளர் வசம் உள்ளது.

எட்டுக்கரைப்பிரிவுகளைக் கொண்ட கொத்தமங்கலம் கிராம மக்கள் தாங்களே கிராமத்தை நிருவாகம் செய்துகொள்ள நிலத்தரசு காருகாத்த வெள்ளாள வாணாதரராயர் எழுதிக் கொடுத்த அரசாங்க உத்தரவு. எட்டுக்கரைப் பிரிவுகளும் கிராம எல்லைகளும் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளன.

**முதல் பக்கம்**

*1. ஸ்ரீ மகாமண்டலத்தி சுபரன் அரி*
*2. ய தளவிபாடன் கண்டநாடு கொண்டு*
*3. கொண்டநாடு குடாதான் பாண்டிமண்ட*
*4. லத்தார் பஞ்சாளன்னாச்சிரியார் சொழம*
*5. ண்டலப்பிற தெச்சன்னாச்சிரியார் தொ*
*6. ண்டைமண்டலப் பிரதாபன் காடாரி சா*
*7. ளுவன் செட்டாரியுடையொன் ராசாதி*
*8. ராசன் ராசமார்த்தாண்டன் ராசவீ*
*9. ர வசந்தராயர் மல்லிகச்சிராயர் அசு*
*10. பதி கிஷபதி நரபதி தெச்சுனாதிபதி பி*
*11. றதீவுராச்சிய பரிபாரம் பண்ணியரு*
*12. ளாய் நின்ற சாலிவாகன சகாத்தம்*
*13. 1405 க்கு மேல் செல்லாயிநின்ற வி*
*14. சைய அற்ப்பசி மீ 10ல் விருதராச பயங்*
*15. கர வளநாடாகிய கானாடான ஷெய*

*16. சிங்ககுல காறானூர் நாடான ரா*

*17. ச லெச்சணிகவளா நாடு ஆன தன*

*18. ம வளநாடு தென்ந்தானம்பு நாடு கொ*

*19. த்தமங்கலம் பங்காளிக்கு நிலத்தரசு*

*20. காருகாத்த வெள்ளாள வாணாதராயர்க*

*21. ள் ஒன்று குடுத்த அருகுடிக்காடு*

*22. 37810 குலி சமுதாயம் 92 தேவதா*

*23. ன..நாடு 2104 இத்தலையூராகிய*

*24. பானலூரு பாண்டியர்புரம் ஆதனூர்*

*25. கூத்தம் காருகாத்த வெள்ளாள வாணா*

*26. தராயர் உள்ளிட்டாருங் கூடிக்கொடுத்த காணி*

*27. யாச்சி கொத்தமங்கலம் கரைபிரியலு*

*28. க்கு வந்தவன் முன்னடிமை சாதினமான தந்தி*

*29. ரிமாரில் மண்ணுக்கு முண்டன் மணவாளன்*

*30. முத்திரியன் உள்ளிட்டார் கொமப்புலி கருவாண்*

*31. டன் முத்திரியன் நன்னபெரியான் முத்திரி*

*32. யன்.*

**இரண்டாம் பக்கம்**

*33. மாலாண்டி வெள்ளியன் முத்திரியன் ஆனவகை*

*34. க்கு மேலத்தெருவில் நிற்பது கீழத்தெரு கி*

*35. ழக்கு சுண்டாங்கி முத்திரியன் குளுநரி முத்திரியன் கொ*

*36. ங்குராயன் முத்திரியன் சங்கரவிசயாலையன் முத்தி*

*37. ரியன் ஆனவகை 4க்கு கீழத்தெரு நிற்பது ஆனவகை ரெ*

*38. ண்டுக்கு கரை 8க்கு குடுத்த காணியாச்சி கரைப்*

*39. பிரியல் கொத்தமங்கலத்துக்கு எல்லையாவது*

*40. ராராயமானியராய துரையவர்கள் சவுந்திரபா*

41. ண்டியராசா அவர்கள் பரி ஏறி எல்லைகட்டி எல்
42. லைக்கல் நாட்டினபடிக்கி கீழ்பாற்க்கெல்லை சேந்
43. தமங்கலம் எல்லை புள்ளடிக்கல்லு இதற்கு கொமாயா
44. ன் பொட்டக் கல்லு இதற்கு தெற்கு செவல் புஞ்சை
45. க்கல்லு இதற்கு தெற்கு சீதனபுஞ்சைக் கல்லு இதற்கு
46. கீழற்சடைக்கல்லு முக்குட்டு நின்று மேற்புளி
47. யம்புஞ்சைக்கல்லு இதற்கு மேற்பாலைப்புஞ்சைக்
48. கல்லு இதற்கு மேற் வயல் மாம் புஞ்சைக்கல்லு இதற்கு மே
49. ற்மேற்கு செம்பிரக்கல்லு இதற்கு மேற் ஓடையில்
50. க்கல்லு இதற்கு மேற்மரமடக்கி முக்குட்டுக்கல்லு நின்
51. று வடற்சறளைக்கல்லு இதற்கு வடற்செவ்வலக்
52. கல்லு இதற்கு வடற்மொச்சியில் கல்லு இதற்கு வடற்நா
53. கன் புஞ்சைக்கல்லு இதற்கு வடற் பிலாப்புஞ்சைக்க
54. ல்லு இதற்கு வடற் காடன்புஞ்சைக்கல்லு இதற்கு வடக்
55. குப்புஞ்சைக்கல்லு இதற்கு வடக்கு பிராண்டி புஞ்சைக்கல்
56. லு இதற்கு வடற்முக்குட்டுகல்லு நின்று கிளற்காலசி
57. கல்லு இதற்கு கிழற்கு பொய்கைக்குடி கல்லு
58. படி கிழற்ப்புள்ளிக்கல்லு இதற்கு கீழ்சுண்டைய
59. யக்கல்லு இதற்கு கீழ்பாசிப்பெலக்கல்
60. லு இதற்கு கிழக்கு கிழற்முக்குட்டு
61. க்கல்லு நின்று தெற்குத்தாவ க்கல்
62. லு இதற்கு தென் சேந்தமங்கலமானவ
63. டக்கல்லுப் பொருதல் இந்த நான்க்கெல்
64. லைக்குள்ளாகியது மண்னுமனை பூகாறு வாரு
65. ளம் அம்பலமிவம்பளம் யிடுகாடு படுதுறை பள்
66. ளுப்பறை பலதொளுலாளியள்க்க வ உளாரது

67. புரவில்ச் செய்யாக் காணியாச்சியிருந்த எட்டு

68. க்கரை தந்திரிமார் ஆண்டு கொள்வது கல்வெட்டு

69. காட்டா அடையார் கானா கொன்றியிருபார் நரசி

70. ங்கபெருமாள் கோவில் வரிக்கொப்பம் தாம்பு குடத்

71. தி மூவேந்திர வேள் திருப்ப மெய்யநாத சிவாமி துணை அ

72. ய்ய உ அந்திவளதுணை உ.

# 25. புதுவை ஆவணக்காப்பகத்தில் ஓர் அடிமைச் சாதனம்

எஸ். ஜெயசீலா ஸ்டீஃபன், புதுச்சேரி.

புதுச்சேரி இந்திய தேசிய ஆவணக் காப்பகத்தில் உள்ளது. (*சுவடிகள்: 18ஆம் நூ. ஆவணங்கள். கோப்பு 91:1*).

1781இல் புதுவை மாநகரத்தில் ஊர் சவுத்திரி முன்பாக அரிக்கமேட்டைச் சேர்ந்த தயிலம்மை என்ற தாய் தன் 5 வயது மகளை மரியம்மாள் என்ற பெண்ணுக்கு விற்றாள். பாண்டிச் சேரியின் பழைய பேரான 'புதுவை' இதில் குறிப்பிடப்படுவதைக் காணலாம்.

*1781ம் ஆண்டு நொவம்பர் மீ 25உ செல்லும் பிரபவ வருஷம் கார்த்திகை மீ 3 புதுவை மாநகரம் ஊர் சவுத்ரி அவர்கள் முன்பாக மரியம்மாளுக் கரிக்கமேடு பள்ளி பொன்னன் பெண் ஜாதி தயிலம்மை கிறைய சாசன முறிக்கொடுத்த படி என் பெண் பேர் கவுதித்தாள் [வ]யது 5 ஜாதி பள்ளிச்சி சேந்தவள் இவள் கொள்வாருளரோ கொள்வாருளரோ வென்று கூறுகையில் மரியம்மாள் நானே கொள்வேனென்று பின் கூறுகையில் [யின்] றான் சந்துகம்பில் பொருந்தி...மொழிந்தனாலும் பொமத்தினுதர் முன்பாக நிச்சயித்த றாசி புதுச்சேரி ரூ. 2 இந்த ரூ. இரண்டுக்கு விலையறவித்துப் பொருள்படி கொண்டேன். இதுவே விலையாகவும் இதுவே விலை கிறையமாகவும் புத்திர பௌத்திர பாரம்பரியம்மாய் இந்த சிறை தாமேயனுபவித்துக் கொள்கிறது. இந்தப்படி சம்மதித்து மரியம்மாளுக்கே பொன்னன் மேற்படி பெண்ஜாதி தயிலம்மை ஓம்கிறைய சாதன முறி கொடுத்தேன். சாக்ஷி சேர்வைக்கார முத்து நாயக்கர், சீட்டு எழுதின நன்மைக்கு சாவடி ஊர் கணக்கு நயினியப்ப பிள்ளை கணக்கு நடராயன் கையெழுத்து.*

# 26. பிரதாபசிம்மஜி ராஜே சாகேபின் இறப்பைப் பற்றிய மோடி ஆவணம்

மு. துரைராசு, கந்தர்வகோட்டை.

தஞ்சாவூரில் மராட்டிய அரசை நிறுவியவர் ஏக்கோஜி எனும் வெங்காஜி ஆவார். இவரது ஆட்சி அமையவும், நிலைக்கவும் இவரது மூத்த சகோதரர் சத்ரபதி சிவாஜி உறுதுணையாக இருந்து வந்தார். இவர்கள் மராட்டியத்தில் போன்ஸ்லே வம்சத்தில் தோன்றியவர்கள் ஆவார்கள். இவர்களது ஆட்சிக்காலத்தில் இரண்டாம் சரபோஜி மன்னராக இருந்தபொழுது 1799ல் ஆங்கிலேயர் ஆட்சியைக் கைப்பற்றி ஓய்வூதியம் (மன்னர் மான்யம்) வழங்கிவிட்டனர். அதற்குப்பின் அவர்களது பரம்பரையினர் கலை வளர்க்கும் பணியில் அதிகமாக ஈடுபாடு கொண்டு விளங்கினர்.

தஞ்சாவூர் மராட்டிய அரசர்களில் ஒன்பதாவது அரசராக பிரதாப சிம்மஜி ராஜா சாகேப் பட்டத்திற்கு வந்தார். வயதில் சிறியவரான இவர் மராட்டிய சேனாதிபதி மானோஜியின் துணையுடன் ஆட்சியில் அமர்ந்தார். இவரது ஆட்சிக்காலம் அமைதியற்றதாக இருந்தது. ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர்கள், நவாபுகள், சுல்தான்கள் என பலரும் பல பகுதிகளை சூறையாடினர். மனம் நொந்த நிலையில் பல ஆண்டுகள் வாழ்ந்து கவலையோடு 1763ல் காலமானார்.

மன்னர் காலமானவுடன் அவரது துணைவியார் யமுனாம் பாயி சாகேப் மற்றும் சக்வார்பாயி சாகேப் ஆகிய இருவரும் தீயில் பாய்ந்து உயிர்விட்டனர். அதிலிருந்து 11-வது நாள் இரங்கல் நிகழ்ச்சிக்காக இவரது மகனும் அரசருமாகிய துளஜாஜி ராஜா சாகேப் போன்ஸ்லே அவர்கள் அந்தணர்களுக்கு குடியிருப்புக்காகவும், பசுக்களுக்காகவும் நிலம் தானம் வழங்கினார் என்ற செய்தி இம் மோடி ஆவணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

இதில் அப்போது நன்செய் நிலத்திற்கு சமமாக புன்செய் நிலத்தின் மதிப்பும், நிலத்தினை அளக்கும் கோலின் நீளமும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் சமஸ்கிருதத்தில் தானம்

செய்பவர், தானம் பெறுபவர், தானம் பெறும் நிலத்தை பரிபாலனம் செய்பவர் ஆகியோர் அடையும் பலனையும், அதனை அபகரிப்போர் அடையும் துன்பத்தையும் கூறுகிறது.

## மோடி ஆவணம் (மொழிபெயர்ப்பு)

*மகால் திருவையாறு தாலுக்காவை சேர்ந்த எழுத்தர் அவர்களுக்கு இன்றும் என்றும் நிலைபெற்றுள்ள மகாராசா இராஜ ஸ்ரீ துளஜா ராஜா 1763-ஆம் ஆண்டு எழுதுவது என்னவென்னில். சிந்தாமணி பட்டின் பேரனும் திவாகர் பட்டின் மகனுமாகிய கோவிந்தபட் தனஞ்சய கோத்திரம், ஆஷ்வலாய சூத்திர ருக் பிரிவை ஓதுபவருக்கு சுபானு சம்வத்சரம் மார்கஷிஸ் மாதம் சுக்ல பட்சம் ஏகாதசி வியாழக்கிழமை மகாராஜா ராஜஸ்ரீ பிரதாப் சிம்மஜி ராஜே சாஹேப் அவர்கள் கைலாசவாசம் அடைந்தார். அவரது செளபாக்கியவதி மாது ஸ்ரீ யமுனாம்பா பாயி சாஹேப் மற்றும் செளபாக்கியவதி மாது ஸ்ரீ சக்வார்பாயி சாஹேப் ஆகியோர் அவருக்கு பின்னே தீ பாய்ந்தனர். அதிலிருந்து 11-வது நாள் மேற்படி பர்கனா தாலுக்கா, மாஹான், கஸ்பா. இதில் பூமிதானம் செய்யப்பட்டது. இத்தானம் 14 அடி கோலால் அளந்து கொடுக்கப்பட்ட நிலத்தின் விவரம்.*

*நஞ்சை நிலம் ½ வேலி : புஞ்சை நிலம் நஞ்சை நிலத்தின் ஒவ்வொரு வேலிக்கும் கால்வேலி வீதம் 2½ மா பிராமணர் குடியிருப்புக்கும், பசுக்களுக்கும் நிலம். நஞ்சை ஒவ்வொரு வேலிக்கும் 3 மா வீதம் 1½ மா. மொத்தம் 4.*

*மொத்தம் நஞ்சை, புஞ்சை நிலம் அரைவேலி, நான்கு மா கால்வாய், பாசனம், நிதி முறைப்படுத்தப்பட்டு எல்லா வகையான வரிகளும் செலுத்தப்பட்டு சகல சமுதாயத்துடன் அனுபவிப்பதற்காக தாரைவார்த்து கொடுக்கப்பட்ட சர்வமானியமாகும் என்பது வரையறுக்கப்படுகிறது. இதனை புத்தர, பௌத்திர பாரம்பரியமாக அனுபவத்துடன் ஒவ்வொரு ஆண்டும் புதிய பிரதி எடுத்துக் கொண்டு அசல் பத்திரத்தை கணக்கு எழுதும் பிராமணரிடம் கொடுத்து வரவேண்டியது. தானம், பரிபாலனம் ஆகிய இரண்டில்*

---

இம் மோடி ஆவணத்தைத் தமிழாக்கம் செய்தளித்த தஞ்சாவூர் மங்களதேவி அவர்களுக்கு நன்றி.

*தானம் கொடுப்பவர் சொர்க்கம் செல்வர். பரிபாலனம் செய்பவர் அச்சுதனுடைய பதமடைவர். தன்னுடைய பொருளைப் பரிபாலிப்பவர் புண்ணியமடைவரென்றும் பிறருடைய பொருளைப் பரிபாலிப்பவர் இரட்டை புண்ணியமடைவர். பிறருடைய பொருளை அபகரிப்பவரோ பொருளை இழப்பர். இது சத்தியம்.*

*இசை வாணை  இராஜஸ்ரீ மகாராஜா ஹஜரத் ராஜஸ்ரீ நரசிங்கராவ் அனந்தராவ் பேஷ்வே (நல்நிலை முத்திரை).*

*ஹீஜீர் நவிஸ் ஒப்புதல்*

*தேதி 28, மாதம் ஜமாதிலாகர்.*

*பலங்நவிஸ் முத்திரை,*

*சூர்நவிஸ் முத்திரை,*

*சுருசுத் சாட்சி*

*கலெக்டர் சாஹேபின் கச்சேரியில் சர்வமானிய நிலத்தின் பதிவேட்டில் எண் 144, நாள் 6, மாதம் ஜுன், 1809 ஆண்டு இதில் பதியப்பட்டுள்ளது.*

## 27. ஒழுகூர் சத்திரக் கல்வெட்டு

ப. வெங்கடேசன், பாணாவரம்.

வட ஆற்காடு அம்பேத்கர் மாவட்டம், வாலாசா வட்டம், ஒழுகூர் என்னும் ஊரிலுள்ள சத்திரத்தில் உட்கூரையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

கி.பி. 1804

ஆற்காடு செவ்வி மகாரிஷி கோத்திரத்தைச் சேர்ந்த வாழவந்தா செட்டி பேரன் பச்சையப்ப செட்டி கட்டிய சத்திரம்.

1. *சாலிவாகன சகார்தம் 1726 கலியாப்தம் 4905*
2. *பிறபவாதி முதல் 56 மேல் செல்லாநின்ற றத்திறாக்ஷி*
3. *வருஷம் ஆடி மீ 16 தேதி ஆற்க்காடு செவ்வி மகாரிஷி*
4. *கோத்திரம் வாழவந்தா செட்டி குமாரன் பெரமாண்*
5. *டை செட்டி குமாரன் பச்சையப்ப செட்டி.*

# 28. துறையூர் தர்மராஜா கோயில் செப்பேடு

**கு. தாமோதரன், சென்னை.**

சென்னையில் உள்ள ஐக்கிய நாடுகளின் அகதிகளுக்கான உயர் ஆணையர் அலுவலகத்தைச் (UNHCR) சேர்ந்த திருமதி. கீதா கல்யாண் அவர்கள் பெரம்பலூர் திருவள்ளுவர் மாவட்டம் துறையூரிலிருந்து செப்பேடு ஒன்றினைத் தமிழ் நாடு அரசு தொல்லியல் துறையின் பார்வைக்குக் கொண்டு வந்தார். ஒரு பக்கம் மட்டும் வாசகம் பொறிக்கப்பட்ட இச்செப்பேடு 18 செ.மீ x 35 செ.மீ அளவுடையது. 37 வரிகளையுடையது. தொடக்கத்தில் சங்கு, சக்கரம் அவற்றினிடையே நாமம் ஆகியவை கோட்டுருவமாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

துறையூரில் உள்ள தர்மராஜர் கோயிலுக்கு தினப்படி பூசை, நைவேத்தியம், அகண்டதீபம், பிற பூசைகள், திருவிழா, திருப்பணி ஆகிய செலவுகளுக்காக செட்டிகுளத்தைச் சேர்ந்த சதுர்கோத்திரம் பல்லக்கோல் வெங்கடாசல ரெட்டியாரின் பேரனும், குமார வெங்கடாசல ரெட்டியாரின் மகனுமான பிரசன்ன வெங்கடாசலம் ரெட்டியார் நஞ்சை நிலம் 2 காணியும், புஞ்சை நிலம் 10 காணியும், புளியமரங்கள் 10ம் கொடையாகக் கொடுத்த செய்தியை இச் செப்பேடு குறிக்கிறது. மேலும் தனது கிராமங்களிலிருந்து (யிஷ்திரி மீரா) கிராமத்திற்கு ரூபாய் ஒன்று வீதம் வருமானமும் ஏற்படுத்தித் தந்துள்ளார்.

பஞ்சாங்கக்காரர் நிலம், காவல்காரர் நிலம், கொடை கொடுத்த ரெட்டியாரின் நிலம், ஏரிக்கலிங்கிலிருந்து வெளியேறும் வாய்க்கால், மலையடிவாரத்தில் செல்லும் பாதை ஆகியவை நிலங்களின் எல்லைகளாகச் சொல்லப்பட்டுள்ளன. இறுதியில் ரெட்டியாரின் கையொப்பம் தெலுங்கில் பொறிக்கப்பட்டுள்ளது. செப்பேடு கி.பி. 1833 ஆம் ஆண்டில் தரப்பட்டதாகும்.

*1. சுவஷ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1755 கலி*

*2. யபுதம் 4934 யிதின் மேல் செல்லாநின்ற விஜய வருஷம்*

3. மாசி மீ 24 துவா தெசி சுக்குறவாரம் திருவோண

4. ம் நட்செந்திரம் கூடின யிந்த சுபதினத்தில் சதுற்

5. கோத்திரம் பல்லகோல் செட்டிகுளம் வெங்கடாசல

6. ரெட்டியாரவர்கள் பவுத்திரர் குமாரர் வெங்கடாசல ரெட்டியார்

7. ரவர்கள் புத்திரர் பிரசன்ன வெங்கடாசல ரெட்டியார் துறை

8. யவர்கள் கசுபா துறையூரிலிருக்கும் தர்மராஜா கோவிலு

9. க்கு நித்தியபடி பூசை நிவேத்தியம் அகண்ட தீபம் அதி

10. யப்படி பூசை உச்சவம் திருப்பணி முதலாகிய தர்ம

11. ங்களுக்காக எளுதிகுடுத்த பூதான தற்மசாசன கிராமம்

12. யெப்படியென்றால் மேல்படி துறையூரில் குப்புடையன்

13. வயலுக்கு கிளக்கு பஞ்சாங்கம் குட்டியய்யன் வயலுக்

14. கு தெருக்கு கலிங்கி வாக்காலுக்கு மேருக்கு கண்டோசிரா

15. வு வயலுக்கு வடக்கு யிந்த நாங்கு யெல்கைக்குள்ளாக நஞ்சை

16. காணி 2 க்கு மேல்படியூரில் மேப்படி தற்மராஜர்

17. கோவில் ஒட்டுக்கு கிளக்கு அடிவாரம் பாதைக்கி தெருக்கு சிங்

18. கமய்யங்கார் குப்பாசாஷ்திரியற் வேங்கிடபடி அய்யர் நல்

19. லப்பரெட்டியார் யிவர்களுடைய சர்வ மானியத்துக்கு

20. மேருக்கு மேல்ப்படியார்களுடைய மானியத்துக்கு வடக்கு யி

21. ந்த நாங்கு யெல்கைக்குள்ளாக புஞ்சையுல் காணி 10 பின்

22. னும் மேல்ப்படி தர்மராஜர் கோவில் ஒட்டுக்கு மேருக்கு

23. அரிதிவேலிக்கு தெருக்கு காவல்காரன் வீட்டுகளுக்கு கிள

24. க்கு பெரிய பாதைக்கி வடக்கு யிந்த நாங்கு யெல்கைக்குள்

25. ளாகா புளியமறம் 10 ஆக மேலெளுதிய நஞ்சை காணி

26. ரெண்டு புஞ்சைகாணி பத்து புளியமறம் பத்து யிதுகளை

27. சர்வ மானியம் செய்து குடுத்தது மன்னியில் நம்முடை

---

* தெலுங்கு எழுத்தில் உள்ளது.

நன்றி: தமிழ் நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை.

28. ய யிஷ்திமீராவைச் சேற்ந்த கிராமங்களில் வருஷம்

29. ஒண்ணுக்கு கிராமம் ஒண்ணுக்கு ஒரு ரூபாயி வீதம் வருஷ

30. வருஷம் குடுத்து வரும் படியாயி நிச்சயம் செய்திருப்பதா

31. ல் மேலளுதிய வருமானங்களைக் கொண்டு மேப்படி

32. கோவில் நித்தயப்படி அதிகப்படி பூசை நெவேத்தியம்

33. அகண்டதீபம் உஷ்சவம் திருப்பணி முதலாகிய தர்மங்கள்

34. ஆசந்திராற்கஷ்தாயியாய் நடந்துவரும் படியாயி

35. யெளுதிக்குடுத்த பூதானம் முதலாகிய தர்மசாசனம்.

36-37*. ஸ்ரீ வெங்கடாசலபதிஹி ப்ரஸந்ந வெங்க்கடாசல ரெட்டிகாரு.



## 29. புதுக்கோட்டை பேட்டை ஆஞ்சனேயர் கோயில் செப்பேடு

**மு. துரைராசு, கந்தர்வகோட்டை.**

புதுக்கோட்டை மாவட்டம், புதுக்கோட்டை நகரம் தெற்கு 4-ஆம் வீதி பர்ஜியா பள்ளிவாசல் சந்தில் உள்ள ஸ்ரீ ஆஞ்சனேய ஸ்வாமி கோயிலில் உள்ள செப்பேடு.

கி.பி.1924.

பழுதடைந்திருந்த ஆஞ்சனேய சுவாமி கோயில் செப்பனிடப் பட்டு குடமுழுக்கு செய்யப்பட்டது. இதில் ஈடுபட்ட பலர் குறிப்பிடப் படுகிறார்கள். புதுக்கோட்டை அரசரும் உதவியுள்ளார்.

*ஸ்ரீ ராம ஜெயம்*

*மகா ரா.ரா.ஸ்ரீ மேன்மைதங்கிய ரீஜண்டு ஸாஹேப் அவர்கள் திவ்விய க்ஷேமத்துக்கு*

*புதுக்கோட்டை டவுன் பேட்டையார்களில் அடியில் கையொப்பமிட்டவர்கள் மிகவும் வணக்கமாய் யெழுதிக்கொண்ட மனு.*

*இந்த ராஜாங்கத்தில் பூர்விகமாய் பர்ஜிமியா பள்ளிவாசல் சந்தில் புராதீனமாய் அனாதியாய் ஆஞ்சனே*

*யஸ்வாமி கோவில் ஏற்பட்டு ஜீரணமாகி வெகுகாலமாய் இருந்து கொண்டு வந்துருக்கிறது.*

*பின்பு சுமார் 10 வருஷத்துக்கு முன் சுப்பா நாயக்கர் என்பவரால் மேற்படி கோவிலை ஜீரண உத்தாரணம்*

*செய்யவேண்டி சமூகத்தில் திவானாபீஸில் மனுக் கொடுத்து மேற்படி கோவில் வகையறாவை சீர்திருத்தவே*

*ண்டியதன் பொருட்டு அன்னசத்திரம் இடிந்திருந்த கருங்கல் வகையறாக்களை கொடுத்து மேற்படி ஆஞ்சனேயர்கோ*

*விலை ஜீரண உத்தாரணம் பூர்த்தியடையாமல் அரைகுறையாக நின்று போய்விட்டது.*

*மேற்படி டவுன் தெற்கு 4ம் வீதியிலிருக்கும் வெ.றா.ம.நாராயண சாமி ராஜா என்பவர் பலர்களிடத்தில்*

*யாஜகம் முதலானது வாங்கி மேற்படி ஆஞ்சனேயஸ்வாமி கோவிலை கட்டி பூர்த்தி செய்துவிட்டார்.*

*மேற்படி கோவிலுக்கு நாளது வருஷம் தை மீ 18 உ (31.1.24) வியாழக்கிழமையன்று ஸ்ரீ ஆஞ்சனேய*

*ஸ்வாமிக்கு மஹா கும்பாபிஷேகம் செய்ய நிச்சயித்து சென்று 45 நாளாக யந்திர ஜெபம் முதலானதுகளும் நடைபெற்று வருகின்றன.*

*மேற்படி மஹாகும்பாபிஷேகத்துக்கு சன்னிதானத்தில் கிருபை கூர்ந்து ராஜாங்கத்தைச் சேர்ந்த கோவிலாக இருப்பதா*

*லும் மேற்படி மஹாகும்பாபிஷேகத்து ஆக வேண்டிய பொருளுதவியும் செய்து மேற்படி கும்பாபிஷேகத்தை பூர்த்தி*

*செய்ய ஓர் தகுந்த அதிகாரியைக்கொண்டு நடத்தும்படிக்கும் அரண்மனையில் இருந்து யானை குதிரை பட்*

*டாளம் மேளவாத்தியங்களும் தேவஸ்தானத்திலிருந்த ஸ்ரீ சாந்தனாத ஸ்வாமி கோவிலைச் சேர்ந்த குடை,*

*சாமரம், கை, தீவட்டி, வெள்ளி திருவாட்சி முதலிய சீர்வரிசைகளும் கொடுத்து சிறப்பிவிக்கும்படிக்கும் ஸ்ரீ*

*மஹாகும்பாபிஷேகத்தன்றைய தினம் மேற்படி மஹாகும்பாபிஷே கத்தை முன்னிட்டு சத்திரம் தகரக்கொட்*

*டகையில் சத்திரம் அதிகாரி மானேஜ்மெண்டில் பிராமண போஜனமும் நடத்தும்படிக்கும் அனுமதித்து*

*தர்ம சன்னிதானத்தில் கிருபை கூர்ந்து மேற்படி மஹா கும்பாபிஷேக சமயம் விஜயம் செய்து கும்பாபிஷே*

*கத்தையும் பூர்த்தி செய்விக்க மிகுந்த வணக்கமாய் பிறார்த்தித்து கேட்டுக்கொள்ளுகிறோம்.*

நா.பெ. நாராயணசாமி நாயுடு
வுண்டியல் கடை
மு. சிங்கமுத்துபிள்ளை
ஷாப்பு கடை
ஆஜி.கல.கா. சைய்யது முகம்மது
றாவுத்தர்
பே.வெ.மு. ராமசாமி செட்டி
சீட்டிக்கடை
நா. பெ. கோ. கோவிந்தசாமிநாயுடு
வுண்டியல் கடை
ரெ. முருகய்ய பிள்ளை
மளிகை
ரெ.சி. மாணிக்கம்பிள்ளை
மளிகை
மா. அரியமுத்து செட்டியார்
காசுக்கடை
வ.ச.வ. ரெங்சாமி செட்டியார்
ஜவுளிக்கடை
பழ. உலகனாதபிள்ளை
ஜவுளிக்கடை
க.அ. நாராயணசாமி பிள்ளை
பழக்கடை
ரெ.அ. அடைக்கலம் பிள்ளை
பழக்கடை
சா.சா. நாராயணசாமி செட்டி
ஜவுளி கடை
வ.ச.வ. ராம. ராமசாமிசெட்டி
வுண்டியல் கடை
வ.ச.சு. சேதுபதி செட்டி, ஜவுளிக்கடை

மா. கந்தசாமி பிள்ளை
மளிகை
ச.வெ. குப்புசாமி செட்டி
மளிகை
ச.வெ.ராம. மாரியப்பிள்ளை
மளிகை
மு. சுப்பிரமணிய பிள்ளை
மளிகை
வெ. புருசோத்தம
செட்டியார், மளிகை
ஆ. சுப்பய்யாபிள்ளை
மளிகை
ரெ.மு. பழனியாண்டி
பிள்ளை, மளிகை
வ. மலையப்பிள்ளை
வெத்திலைக்கடை
ச. ராமசாமி பிள்ளை
வெத்திலை கடை
ராம. கஸ்தூரி செட்டி
மளிகை
வெ. சு. வெங்கட்ராமன்
செட்டி மளிகை
வெ.ராம. நாராயணசாமி ராஜ்
பேக்கர்
அ. குழந்தையாபிள்ளை
புஸ்ப்பக் கடை
க. பொன்னுச்சாமி பிள்ளை
புஸ்ப்பக்கடை

28.1.1924 வருஷம் மேற்படி மனுவுக்கு மகா.ரா.ரா.ஸ்ரீ ரீஜண்ட் சாஹேப் அவர்கள் திவ்விய சமூகம் ரூ.50ம் மேற்படி விருதுகளும் கொடுக்கும்படிக்கு உத்திரவு செய்து இருக்கிறார்கள். இந்த தர்மம் வெகுஜன உபயம் நடக்கவேணும்.

# 30. ஓலைச்சுவடிகளில் எழுத்து முறை

சு. இராசகோபால், சென்னை.

பழங்கால முதல் எழுதப்படும் பொருள்களாக கல், களிமண் பலகை, உலோகம், மரப்பட்டை, தோல், மரம், தந்தம், சங்கு, சிப்பி, துணி, ஓலை, போன்ற பொருள்கள் பயன்படுத்தப்பட்டிருக் கின்றன. தமிழகத்தைப் பொறுத்தமட்டில் இவற்றில் அதிகம் பயன்பட்டது ஓலையாகும். ஓலையிலும் பனை ஓலை மிகுதியும் பயன்படுத்தப்பட்டது. சில வேளைகளில் தாழை இலைகள் பயன்படுத்தப்பட்டன. பனை ஓலைகளை விட தாழை இலைகள் அகலமாக இருக்கும். ஆதலால் அவற்றில் நிறைய வரிகள் எழுத முடியும். இலக்கியம், கல்வெட்டு மற்றும் வழக்கு நடையில் எழுதப்பட்ட ஓலைகள் ஓலை, ஏடு, சுவடி, முறி, பத்திரம், நுகும்பு, பொத்தகம், தீட்டு, தோடு, நூல் என்று பலவாறாக அழைக்கப் பட்டிருக்கின்றன.[1]

பனை மரங்கள் எழுதும் ஓலைகளுக்காக மட்டும் பயன்பட்ட போது அம்மரங்கள் 'ஓலை வெட்டுப்பனை [2] என்றே அழைக்கப் பட்டன. குருத்தாக வெட்டப்பட்ட பனை ஓலைகள் நடுவில் உள்ள ஈக்குக்குச்சி எடுக்கப்படாமல் அப்படியே இரட்டையாகவும், நடுக்குச்சி நீக்கப்பட்டுத் தனித்தனியாகவும் பயன்படுத்தப்பட்டன. இப்படித் தனித்தனியாகப் பிரிக்கப் பட்டவை ஓலைச்சிறகு [3] எனப்பட்டன. ஓலைச்சிறகுகளே அதிகம் பயன்பாட்டில் இருந்தன. இச்சிறகுகள் ஏறத்தாள 40செ.மீ. நீளம் வரை இருந்தன. இன்னும் நீளமான சிறகுகளில் எழுதும்போது அவை தனித்தனிச் சிறகு களாகச் சுருட்டி வைக்கப்பட்டன. இவை ஓலைச்சுருள், செந்திரிக்கம் [4] எனப்பட்டன. நில வருவாய் கணக்குகள் எழுதப் பட்ட ஓலைகள் 75 செ.மீ. நீளம் கூட இருந்தன. ஒரே கட்டில் 200, 300 என்று சிறகுகள் சேரும் போது அக்கட்டு அடி பருத்தும் நுனி சிறுத்தும் பராமரிக்க எளிதாக இல்லாமல் இருந்தது.

ஓலைகளைச் சுத்தம் செய்து வெட்டுவதற்குப் பயன்பட்ட கத்தி ஓலைவாரி[5] எனப்பட்டது. எழுதும் ஆணி ஊசி, ஆணி, எழுத்தாணி என்று வழங்கப்பட்டது[6]. ஓலைகளின் ஒரு பக்கமோ

அல்லது இருபக்கமுமோ துளைகள் இடப்பட்டு கயிறு கோர்க்கப்பட்டது. இத்துளைகள் ஓலைக் கண்[7] என்றழைக் கப்பட்டன. இத்துளைகள் இடுவதற்காக எழுத்தாணியுடனோ அல்லது தனியாகவோ வட்டமாகத் திருப்பித் துளையிடும் ஆணிகள் இருந்தன. இவை ஒரு நுனியில் ஏற்ற இறக்கமாக இரு நுனிகளைக் கொண்டிருந்தன. ஓலைகள் எழுதப்படுவதற்கு முன்பே சீராக வெட்டப்பட்டு ஓலைக்கண் இடப்பட்டு கட்டு கட்டுகளாக வைத்துக் கொண்டனர். ஓலையில் எழுதுபவர்கள் சொந்தமாக இவற்றைத் தயார் செய்து கொண்டனர். ஒருவேளை இவை கடைகளில் விற்கப்பட்டிருக்கவும் கூடும். சங்கப் புலவர்களில் மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார், ஓலைக் கடையத்தார் மகன் வெண்ணாகன் ஆகியோர் ஓலைகளை விற்பனை செய்தவர்களாக இருக்கலாம். ஓலைக் கடை என்பதை நகைக் கடை என்று சொல்வாரும் உண்டு. எனினும் இக்காலக் கட்டத்தில் கடை என்பதற்கு அங்காடி என்ற பொருள் வழக்கு இருந்ததா? என்பது தெரியவில்லை. 'வாயில், இறுதி, கடைசி' போன்ற பொருள்களே இருந்துள்ளன.

எழுத்தாளன், ஓலைக்கணக்கர், திணைகள், நூலியலார் முதலியோர் இலக்கியங்களில் ஓலைகள் எழுதியவர்களாகவும், [8] பயன்படுத்தியவர்களாகவும் காணப்படுகின்றனர். கல்வெட்டு களில் மத்யஸ்தன், கரணத்தான், ஊர்-கோயில்-நகரக் கணக்கர்கள், திருமந்திர ஓலை, திருமந்திர ஓலை நாயகம், திணை முதலியோர் ஓலை ஆவணங்கள் எழுதுவோராகச் சொல்லப் பட்டுள்ளனர்[9].

ஓலைகள் பட்டோலை, பொன்னோலை, மந்திர ஓலை, வெள்ளோலை, வாயோலை என்று இலக்கியங்களிலும் [10] அறையோலை, கையோலை, சபையோலை, இறையோலை, கீழ் ஓலை, தூது ஓலை, ஓலை பிடிபாடு என்று கல்வெட்டுகளிலும் பல வகைகளாகச் சொல்லப்பட்டுள்ளன[11].

ஓலைகள் பாதுகாத்தல் பொருட்டு அவற்றின் மீது மஞ்சள் பூசப்பட்டது. அவை உடைந்து விடாமல் இருக்க ஓலைப் பெட்டிகளிலும் மரப்பெட்டிகளிலும் சிவப்பு அல்லது காவித் துணிகளில் சுற்றியும் வைக்கப்பட்டன. மரப்பெட்டிகளும் ஓலைப்பெட்டிகளும் கரையான் அரித்து விடாமல் இருக்கத்

தொங்கவிடப்பட்டன. அப்படி தொங்குவது 'அசை' எனப்பட்டது, ஓலைகளில் எழுதப்பட்ட எழுத்துக்கள் மை பூசப்பட்டுத் தெளிவாகத் தெரியச் செய்யப்பட்டன. மேற் சொன்னவற்றைத் தமிழ் விடுதூதுவின் பாடல் வரிகள் கீழ்வருமாறு சொல்கின்றன.

''கண்மணிபோற்
பள்ளிக்கூடத்தசையாம் பற்பல தொட்டிற் கிடத்தித்
தள்ளிச் சிறார் கூடித்தாலாட்டி உள்ளிலகு
மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்
மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்'' [12]

எழுதப்பட்ட ஓலைகள் கோயில் மற்றும் மடங்களில் அமைந்த பண்டாரங்களில் பாதுகாக்கப்பட்டன. இப்பண்டாரங்கள் கோயில் பண்டாரம், சரஸ்வதி பண்டாரம்[13] என்ற பெயர்களில் இருந்தன. பெரியபுராணம், சுந்தரர் கதையில் தந்தையின் கையெழுத்தைச் சரி பார்ப்பதற்காக பழைய ஓலைகள் 'அரண்தரு காப்பு'[14] என்ற இடத்திலிருந்து எடுத்து வரப்பட்டதாகச் சொல்லும்.

தமிழகத்தில் கல்லில் எழுதப்பட்ட எழுத்துக்கள் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு முதல் கிடைக்கின்றன. அவற்றில் கி.பி.3 ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் அறச்சலூர் கல்வெட்டில் தான் முதல் முதலாக 'எழுத்து' என்ற சொல் காணப்படுகிறது. [15] கி.பி. 5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் தான் முதன் முதலாக 'ஓலை' என்ற சொல் காணப்படுகின்றது. [16] ஆனால் இவற்றிற்கு முன் சங்க இலக்கியம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் ஓலை, எழுத்து பற்றி செய்திகள் அறியக் கிடைக்கின்றன. [17]

தமிழகத்தில் கிடைக்கும் ஓலைச்சுவடிகள், இலக்கியம், மருத்துவம், மாந்திரியம், சோதிடம், சமயம், வணிகம், ஆவணங்கள், பள்ளி மாணவர்களுக்கான அரிச்சுவடி, எண்சுவடி என்ற வகைகளில் அடங்கிவிடக் கூடியவை. பொதுவாக எல்லாச் சுவடிகளும் ஒரே மாதிரியாக இருந்தாலும் ஒவ்வொரு வகை ஓலைச்சுவடியிலும் ஒவ்வொரு வகையில் எழுதும் முறை தனித்துவம் பெற்றிருக்கும். இலக்கியச் சுவடிகளில் பாடல்களின் முடிவில் எண்களைக் காணலாம். இடதுபுற ஓரங்களில்

அத்தியாயத் தலைப்புப் பெயர்களைக் காணலாம். மாந்திரிகச் சுவடிகளில் பலவகைச் சக்கரங்களின் (இயந்திரம்) படங்களைக் காணலாம். சோதிடச் சுவடிகளில் ராசி சக்கரங்களைக் காணலாம்; வணிகச் சுவடிகளில் பல்வேறு எண்களையும், குறியீடுகளையும் காணலாம். பள்ளிச்சுவடிகளில் பக்கவாட்டில் மூன்று நான்கு பத்திகள் பிரித்து எழுதப்பட்டுள்ளதைப் பார்க்கலாம். [18]

ஓலைகளில் எழுதப்பட்டுள்ள செய்திகளை அறிந்து கொள்ள அவை எழுதப்பட்ட முறையைத் தெரிந்து கொள்ள வேண்டும். பொதுவாக ஒரு கட்டில் உள்ள சுவடிகள் ஒருவரால் எழுதப்பட்டிருந்தால் முதலிரு ஏடுகளைச் சிரமப்பட்டு படித்தால் அவர் எழுதுகின்ற முறை நமக்குப் புரிந்து போகும். அதனை மனதில் கொண்டால் அடுத்த ஏடுகள் அவரது கையெழுத்து பழக்கப் பட்டதால் படிக்க எளிதாகிவிடும்.

ஓலைகளின் நார்த்தன்மை குறுக்கு வாட்டாக இருப்பதனால் ஆணியால் கிழித்து எழுதும்போதும், புள்ளியிடும்போதும், ஆணியை அடிக்கடி எடுத்து வைத்து எழுதும்போதும் இடர் பாடுகள் அதிகம் இருக்கும். எனவே ஓலை எழுத்துக்கள் புள்ளிகள் இல்லாமலும் மயங்கி மாறுபட்டும், கூட்டெழுத்துக்களாகவும், சுருக்கெழுத்துக்களாகவும் அமைந்தன. கணிதம், ஆவணம் மற்றும் வணிகச் சுவடிகளில் ஆண்டு, மாதம், தேதி, நிலம், பணம், ரூபாய், சாதிப்பெயர்கள் போன்றவை திரும்பத் திரும்ப வரும்போது அவை சுருக்கி எழுதப்பட்டு, பழக்கமான குறியீடுகளாக மாறின. அது மட்டும் அல்லாமல் தமிழுக்கென்றே தனி எண்கள் இருந்தமையும், பின்ன எண்கள் (கீழ் இலக்கம், கீழ்வாய் இலக்கம்) இருந்தமையும் அவை இன்று வழக்கில் இல்லாமல் போனமையும் சுவடிகளில் அவற்றைத் தெரிந்து பழகிக் கொள்ள வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தியுள்ளன.

அழியும் நிலையில் உள்ள ஏடுகள் புதிதாகப் படியெடுக்கப் பட்டன. ஒருவரிடம் உள்ள நூல் மற்றவருக்கு தேவைப்படும் போதும் படியெடுக்கப்பட்டது. அப்படி படியெடுப்பது ஏடு திருப்புதல், பிரிநகல், சபாது என்று அழைக்கப்பட்டது.

ஏடு எழுதும் போது ஏற்படும் தவறுகள் ஏட்டுக்குத்தம், எழுத்துக் குற்றம், சொற்குற்றம், வாசகப் பிழை, வரிமாறாட்டம் எனப்பட்டன. எலிகடி, வெட்டுச் செதுக்கு, செல் அரிப்பு முதலியவையும் குற்றங்களே.

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள பட்டியல்களில் எழுத்து மயக்கம, கூட்டெழுத்து, சுருக்கெழுத்து, குறியீடுகள், எண்கள் ஆகியவை சில ஓலைச்சுவடிகள் காணுமாறே வரைந்தெழுதி விளக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஊரிலும் பலர் ஓலைகள் எழுதியதாலும் இவ்வோலைகள் பல்வேறு காலம் மற்றும் எண்ணற்ற இடங்களைச் சேர்ந்தவை ஆதலாலும் எண்ணற்ற கையெழுத்து முறைகள் இருப்பது இயற்கை. எனவே இங்கு பட்டியலில் வரைந்து தரப்பட்டதை விட பல்மடங்கு வேறுபாடுகளுடன் எழுத்துக்கள் அமையும். ஏற்கனவே சொல்லியது போல ஒரு சுவடிக்கட்டில் முதல் ஒன்றிரண்டு ஏடுகளைச் சிரமப்பட்டுப் படித்த பிறகு எழுதுவோரின் எழுத்து முறை நமக்குப் பழக்கம் ஏற்பட்டு அடுத்து வரும் ஏடுகள் படிப்பது நமக்கு எளிதாகவிடும்.

---

**அடிக்குறிப்புகள்.**

1. கயிறு குழிசி ஓலை (*அகம்: 77*);
ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர் (*நாலடி : 397*)
எழுதாத புத்தகத் தேட்டின் (*திருமந்திரம்: 2885*)
ஏடு கோளாளரெனையரென் றெண்ணி (*பெருங்கதை, உஞ்சை: 57, 153*)
பாட்டுப்புறமெழுதிய கட்டமை சுவடி (*பெருங்.மகத: 1, 12*)
பத்திரங் கொடுத்தொதுங்கிப் பத்திரன் பணிந்து நின்றான்
(*திருவாலவாய் புராணம்: 55, 19*)
எதிர்போயேறும் பத்திரம் வென்றதாக (*மேலது 38, 24*)
பனைநுகும்பன்ன (*புறம்: 249*)
உண்ணுகுப்போலையுட் கண்விரித்தியற்றிய
(*பெருங். இலாவ: 2, 130*)
நுகும்பினுளிடைப்பட வெழுதுக (*பெருங்.நரவான: 2, 130*)
இறை இழிச்சி இழித்தினபடி நிலமுதல் பொத்தகத்தும்
கைத்தடியிலும் இறை இழிச்சி' (*தென்னிந்தியக் கல்வெட்டு கள், தொகுதி 13, எண். 106*)
'வியவஸ்தைத் தீட்டு' - *மேலது தொகுதி 7, எண் 109*
'விலைப் பிரமாணத் தீட்டு' - *மேலது தொகுதி 8; எண். 767, 708, 709*

'இசைவுத்தீட்டு' - புதுக்கோட்டை கல்வெட்டுகள்: எண். 112
வண்டோட்டுக் தொங்கின் (பெரும்பாண். 353)
கண் நூல் போனவன் (சீவக. 113 உரை)
நூலறி புலவரை நோக்க (சிலம் 25, 116)

2. தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், 1962.

3-5. மேலது

6. பொன்னோலை செம் பொனுசியாலெழுதி (சீவக: 369) ஊசிவாசி, ஊசிக்காசு, ஊசிகிரந்தம் முதலியவை கல்வெட்டுகளிலும், சுவடிகளிலும் எழுதுபவர் கொடுக்கும் அல்லது எழுதுபவருக்குக் கொடுக்கும் கட்டணமாகக் காட்டப்பட்டுள்ளன.

7. தமிழ்ப்பேரகராதி

8. ஓலைக்கணக்கர், நாலடியார் 397
மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார், அகம்:207, குறுந்: 90, 226; மதுரை எழுத்தாளன், அகம்:84.
இவை பணியால் எழுதினேன் பெருந்திணை மாணி செல்லன்
எழுத்து; தெ.இ.க. தொகுதி 19, கல்வெட்டு எண். 254; மேலும் பார்க்க்.
தெ.இ.க. தொகுதி 14, எண். 453; தெ.இ.க.தொகுதி எண்.8, எண்கள்.278, 611, 618, 623

9. மத்யஸ்தன் தெ.இ.க.தொகுதி 4 க.எண்:295, 297, 342
கரணத்தான், தெ.இ.க.தொகுதி 4. க.எண்; 516 தொகுதி 5, எண்.592;
நாட்டுக் கணக்கு
தெ.இ.க. தொகுதி 7 க.எண்.22, 401; கோயில் கணக்கு, புதுக்கோட்டை கல்வெட்டுகள், 285, 304
ஊர் சபை கணக்கு, தெ.இ.க. தொகுதி 14,74, 19 131, 141; நகரக் கணக்கு மேலது தொகுதி 5, எண்.439;
திருமந்திரவோலை, திருமந்திர ஓலைநாயகம் - தெ.இ.க. தொகுதி 8:க.எண்.222, 223; திணை - தெ.இ.க.தொகுதி 8, க.எண்.278, 611, 618

10. எண்ணிய பாவமெங்கள் பட்டோலைக் குட்படுமோ மேற்கோள், தமிழ்ப்பேரகராதி
பொன்னோலை, - சீவக: 369;
மந்திரவோலை போக்கிய வண்ணமும்; திருமுகம் (பெருங்கதை மகத.25, 39)
வெள்ளோலை கண் பார்க்க கையாலெழுதானை
முத்திரையிடப்படாத ஓலை; மேற்கோள், தமிழ்ப் பேரகராதி;
வாயோலை உத்திரமேரூர் கல்வெட்டு.

11. சபையோலை -தெ.இ.க.தொகுதி 23, 114; கையோலை - மேலது 8, 206;
இறையோலை- மேலது 10, 378;
அறையோலை,அறவோலை பள்ளன்கோயில், கரந்தை செப்பேடுகள்,
கிழ்ஓலை = இரகசிய ஓலை, தெ.இ.க. தொகுதி 7, 118;
தூது ஒலை மேலது 4, 456; ஒலை பிடிபாடு மேலது 4, 361, 373

12. தமிழ் விடுதூது 23, 24, 25 கன்னிகள், கழக வெளியீடு, 1964.

13. பண்டாரம் தெ.இ.க. தொகுதி எண் 8, 44, 53, 55; சரஸ்வதி பண்டாரம்

*இ.க. 139 1938.39; 695 1916.*

*14.* அரண்தரு காப்பில் வேறொன்றமைத்துடன் ஒப்புநோக்கி, பெரியபுராணம் 1.5 : 62

*15.* எழுத்துப்புணருத்தான் மணிய வண்ணக்கன் தேவன் சாத்தன், கல்வெட்டியல் பக். 66, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

*16.* ஓலை எழுதுவான்றாமன் காரி, கடைப்பி ஓலை காற்கண்டு, பூலாங்குறிச்சிக் கல்வெட்டு, வரிகள் 12-13

*17.* கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்து அகம்:343;
'எழுத்துடைக்கல் நிரக்கவாயில்' ஐந்திணை எழுபது:29
'தூது ஒய் பார்ப்பான் மடிவெள் ஓலை' - அகம்:337
'எழுதினான் ஓலை பழுது' - பழமொழி: 29;
'அவயத்தூர் ஓலை பகடுகாப்பு யாத்துவிட்டாங்கு, கலி. 94

*18.* எண்சுவடியில் ஐந்தாம் வாய்ப்பாடு குறியீடுகளால் பின்வருமாறு இருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| 1 x 5 = 5 | 2 x 5 = 10 | 3x5=15 | 4x5=20 |
| 10 x 5 = 50 | 20 x 5 = 100 | 30 x 5 = 150 | 40 x 5 = 200 |
| 100 x 5 = 500 | 200 x 5 = 1000 | 300 x 5 = 1500 | 400 x 5 = 2000 |

# இணைப்பு - 1

## எழுத்து மயக்கம்

| | | | |
|---|---|---|---|
| அணிந்தார் | அணிநதார | கருணை | கருணை |
| அய்யன் | அயயன | குலை | குலை |
| அர்ச்சுனன் | அரசசுனை | கேட்டான் | கெடடான |
| அன்னேரம் | அனனெரம | சீரங்கள் | சிரஙகள |
| அன்று | அனறு | சிவகாமி | சிவகாமி |
| ஆடகமண்டப் | [illegible] | சிறுபூளைமாலை | [illegible] |
| ஆணை | ஆணை | சிறுவயிறு | சிறுவயறு |
| ஆதித்தன் | ஆதிதன | சுப்பராயகவுண்டன் | சுபபராயகவுண |
| ஆதிதாளம் | ஆதிதாளம | சேர்ந்தார் | செரநதார |
| ஆர்வடமுத்து | ஆரவடமுது | சேனை | செனை |

| | |
|---|---|
| ஆனால் | சேர்ராமலே |
| இச்சித்தேன் | சேனை |
| இவர் | சோபகிருது |
| இனி | சொல்லுகுறார் |
| ஈட்டி | சொர்ன்னகோபுரம் |
| ஈழம் | தம்பிறானை |
| உம்பர் | தலையை |
| உமிந்ததுவும் | தீர்த்தம் |
| ஒரு | நறகம் |
| ஓம் | நற்றுணையாவது |
| கல்லன் | நாடுறுப்பிர் |
| நின்றாள் | நாவடியாக |
| நெல்லை | மோஷ்ச்சம் |
| படி | யோசினை |
| பஞ்சவற்ன்னசேலை | வண்னனை |
| தில்லை | வீரதண்டை |
| பூசை | விளையாடு |
| பெருங்கடலை | வெண்பா |
| பேரிகை | வேடனால் |
| மதிசூதனை | வெத்திலையில் |
| மலையரசன் | வெளி |
| | மாகாளி |

## இணைப்பு - 2

### கூட்டெழுத்து

| | | | |
|---|---|---|---|
| ஆண்டிகுளம் | ஆணடிகுளம | பட்டவிருத்தி | யய விருத்றி |
| க்கருப்பன் | கூருபபண | பத்திரம் | பறிரம |
| கல்வாசனாட்டில் | கலவாசனாயடில | பாத்தியம் | பாறியும |
| கைவளைந்து | கைவளாநது | பிரட்டாசி | பிரயாசி |
| கோட்டையூர் | கொயையூா | பேறுக்கு | பெறுகூ |
| கொண்டபடி | கொணடபடி | பொண்டாட்டி | பொணடாயடி |
| சக்கரைவட்டு | சகூரைவயடு | மிட்டா | மியா |
| சத்திரம் | சறிரம | முத்து | முது |
| சித்தார்த்தி | சிறாரறி | முத்தயசெட்டி | முதயசெயடி |
| செல்லப்பன் | செலயயண | யிரெட்டி | யிரெயடி |
| திண்ணைக்குடுக்கவும் | திணணைகூடுகூவும | வந்து | வநது |
| தேவரெல்லாம் | தெவரெலாம | வறப்பட்ட | வரயய |
| நாலுதிக்குங் | நாலுதிகூங | வேண்டியது | வெணடியது |
| பட்டி | யடி | | |

## இணைப்பு - 3

### சுருக்கெழுத்து

| | | | |
|---|---|---|---|
| அத்தியாயம் | அறியாயு | புள்ளி | புளி |
| கிறயம் | கிறயு | மகன் | மகூ |
| மாலையும் | மாலயு | பிள்ளை | பிளை |

ராமய்யன்

அம்பலம்

ஆக

கவுண்டன்

நிலவிலைக்கிறயபத்திரம்

## இணைப்பு - 4

### குறியீடுகள்

வருடம்

வருடம்

வருடம்

வருடம்

மாதம்

மாதம்

மாதம்

மாதம்

தேதி

தேதி

தேதி

தேதி

நிம்பர்

நம்பர்

க்கு பணம்

க்கு பணம்

யிந்தகிரல்

வசம்

சிலவு

ராம

மாதம் ஒன்றுக்கு

வரவு

மாதம் ஒன்றுக்கு

வரவு

பற்று

மூணுக்கு

இதுவும்பற்று

நாளதுதேதியில்

முதல்

மேற்படி

நாளது

புஞ்சை

குழி

நிலம்

# இணைப்பு - 5

## எண்கள் - இலக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1 | ௧ | 6 | ௬ |
| 2 | ௨ | 7 | ௭ |
| 3 | ௩ | 8 | ௮ |
| 4 | ௪ | 9 | ௯ |
| 5 | ௫ | 10 | ௰ |
| 122 | ௱௨௰௨ | 100 | ௱ |
| 1996 | ௲௯௱௯௰௬ | 1000 | ௲ |
| 4050 | ௪௲௫௰ | 100,00,000 | ௱௱௲ |
| 1,00,000 | ௱௲ | 100,00,000 | நூறு நூறாயிரம் |

## கீழிலக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1 ஒன்று | க | 1/320 முந்திரி | ஃத |
| 1/4 கால் | வ | 1/160அரைக்காணி | ட |
| 1/2 அரை | இ | 1/80 காணி | ஃ |
| 3/4முக்கால் | ஞு | 1/40 அரைமா | சு |
| 1/8 அரைக்கால் | எநு | 1/20 ஒருமா | ப |
| 1/16 வீசம் - மாகாணி | டீ | 2/20 இருமா | உப |
| 1/32அரைவீசம் | சுபு | 3/20 மும்மா | ஙப |
| 1/64கால்வீசம் | ஃஉ | 4/20 நாலுமா | சப |
| | | 5/20 ஐந்துமா - கால் | வ |
| | | 10/20 ப்த்துமா-அரை | இ |
| | | 15/20 பதினைந்துமா முக்கால் | ஞு |
| | | 20/20 இருபதுமா - வேலி-நிலம் | க |

# 31. இராசேந்திர சோழன் மெய்க்கீர்த்தி - ஓர் ஆய்வு

**கே.ஜி.கிருஷ்ணன், மைசூர்.**

பலரும் அறிந்த இராசேந்திரசோழனின் மெய்க்கீர்த்தியில் ஆண்டு ஆண்டாக அவ்வப்பொழுது நடைபெறும் நிகழ்ச்சிகளை இணைத்து வழங்கி வந்த முறையைத் தமிழ் மெய்க்கீர்த்திகளை ஆராய்பவர் நன்கு அறிவார்கள். அவ்வாறு இணைத்துக் கூறப்படும் நிகழ்ச்சிகளோடு தொடர்புடைய இடங்களை முன் ஆராய்ந்தவர் முடிந்தவரையில் கண்டெழுதி வந்திருக்கிறார்கள். ஆயினும்

விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்படவல்லை மதுரை மண்டலமும்
காமிடை வளைஇய நாமணைக்கோணமும்
வெஞ்சின வீரர் பஞ்சப்பள்ளியும்
பாசடைப்பழன மாசுணி தேசமும்

என்ற பகுதியில் குறிப்பிடப்பட்ட இடங்களைப் பற்றித் தெளிவான குறிப்புக்கள் கொடுக்கப்படவில்லை. இவ்விடங் களைப் பற்றித் தொடர்புடைய கருத்துக்களைத் தொகுத்து பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் சோழர்களைப் பற்றிய தம் நூலில் வழங்கியிருக்கிறார். சக்கரக்கோட்டம் என்பது, மத்தியப் பிரதேசத்தில் உள்ள பஸ்தாரில் கிடைத்த நாகவம்ச அரசர் செப்பேட்டில் சொல்லப்படும் சக்ரகோட்யா என்பதே ஆகும். அது பஸ்தார் பகுதியும் அதை அடுத்து அவ்வரசர் பெருமக்கள் பரவி வாழ்ந்த பகுதியும் கொண்டதாகும் என்று கூறப்படுகின்றது. நாகவம்சத்து அரசர்கள் வாழ்ந்த அப்பகுதி மாசுண தேசம் அதாவது நாக நாடு என்று இந்த மெய்க்கீர்த்தியில் குறிப்பிடப்படுவதே ஆகும். எனவே மற்றைய மதுரை மண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப்பள்ளி என்ற இடங்கள் இப்பகுதியில் இருக்கலாம் என்று சாஸ்திரியார் கூறியிருக்கிறார். இதை அடியொற்றியே பண்டாரத்தார் அவர்களும் எழுதியிருக்கிறார். ஆனால் அவை இன்றளவும் கண்டறியப்படவில்லை. இக்கட்டுரை அந்த முயற்சியில் ஆய்ந்து எழுதப்பட்டதாகும்.

மணவினைத் தொடர்புடைய கீழைச்சளுக்கியரின் வேங்கி நாட்டின் வடவெல்லை அதாவது கோதாவரிக்கரை வரையில் இராசேந்திரனின் படைக்கு எதிர்ப்பு யாதும் இருக்க இடமில்லை. அதற்கு வடக்கே உள்ள பகுதியில் கங்கைக் கரையை நோக்கிச் செல்ல முனைந்த படைக்கு எதிர்ப்பு தோன்றியது. அந்த இடைப்பகுதியில் ஒட்ட விஷயத்தை அடையும் வரை உள்ள இடங்கள் அறியப்படவில்லை. அந்தப் பகுதியில்தான் மதுரை மண்டலம், நாமணைக் கோணம், பஞ்சப்பள்ளி, மாசுணிதேசம் என்ற நான்கு இடங்கள் பட்டியலிட்டுக் குறிக்கப்படுகின்றன. இவை அடங்கிய நாட்டுப் பகுதிக்கு முழுமையான பெயர் ஒன்றும் கொடுக்கப்படவில்லை. ஆயினும் இம்மெய்க்கீர்த்திப்பகுதி இராசேந்திரனின் 11ஆம் ஆண்டில் அதாவது ஏறக்குறைய 1022-23இல் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை 13ஆம் ஆண்டில் முழு உருவம் அடைந்த நிலையில் தான் குறிக்கின்றது. இடையில் கர்நாடகத்தில் குருபூரு என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள இராசேந்திரனின் 11ஆம் ஆண்டுக் கல்வெட்டில் ‘பூர்வதேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட’ என்ற அடைமொழி காணப்படுகின்றது. இராசேந்திரனின் 13ஆம் ஆட்சி ஆண்டில் முழு உருவம் பெற்ற மெய்க்கீர்த்தியில் கண்ட நிகழ்ச்சிகளின் சுருக்கம்போல் காணப்படும் இந்த அடைமொழி சற்று குழப்பத்தை உண்டுபண்ணியிருக்கிறது. மஜூம்தார் அவர்கள் இந்நிகழ்ச்சிகள் எல்லாமே 11ஆம் ஆண்டின் இறுதிக்குள் நிகழ்ந்துவிட்டன என்று கூறுகின்றார். நீலகண்ட சாஸ்திரியார் இது பிற்காலத்தில் எழுதப்பட்ட 11ஆம் ஆண்டுக் கல்வெட்டு; எனவே 13ஆம் ஆண்டு நிகழ்ச்சியை அதில் கலந்து கொடுத்துவிட்டார்கள் போலும் என்று ஐயப்பாடு கொண்டு கூறியிருக்கிறார். இத்தொடரை மீண்டும் ஆராயத்தலைப்பட்டோம்.

சுருக்கமான இத்தொடரில் முதற்கண் பூர்வதேசமும், பிறகு கங்கையும் கடைசியாகக் கடாரமும் பற்றிய குறிப்பு முறையாகத்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. வேங்கியைக்கடந்து தொடங்கிய படையெழுச்சி கங்கைக்கரைக்குச் செல்லும் வழியில் பூர்வதேசம் அமைந்திருப்பதால் பூர்வதேசமும் என்று முதலில் சுட்டப்படுகின்றது. எனவே பூர்வதேசம் என்பது சக்கரக்கோட்டம்,

மதுரைமண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப்பள்ளி, மாசுணிதேசம் என்ற இடங்கள் அடங்கிய பகுதியே ஆகும் என்பது பெறப்படும். இவற்றிற்குப் பூர்வதேசம் என்ற பெயர் வழக்கு உண்டு என்பதை அப்பகுதியில் காணப்பட்ட செப்பேட்டு வாசகங்களிலிருந்து அறியலாம். கி.பி.ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆண்ட சரபபுர மன்னர்களாகிய மஹா ஜயராசன் அவன் மகன் மகாசுதேவராசன் இருவரும் முறையே பூர்வராஷ்டிரத்தில் உள்ள பம்வா, ஸ்ரீ ஸாஹிகா என்ற இரண்டு கிராமங்களையும் பிராமணர்க்குத் தானம் செய்தார்கள் என்ற செய்தியை அச்செப்பேடுகள் அளிக்கின்றன. ஆக இதனின்றும் பூர்வராஷ்டிரம் என்ற வழக்கு உண்மை வெளிப்படுகின்றது. மேலும் இதற்கு முன் காலத்திலேயே பூர்வதேசம் என்ற பெயர் மணிமேகலையில் *(காதை 9: 10-13)* சொல்லப்படும் ஒரு பழங்கதை வரலாற்றில் ஆளப்படுகின்றது. நாக நாட்டில் நானூறு யோசனை அளவு பூமிப்பகுதியில் இடவயம் என்றும் நடுப்பகுதியில் கடுமையான நிலநடுக்கம் நிகழப் போகிறது; ஆதலால் அப்பகுதியை ஆளும் அரசன் குடிகளுடன் வேறிடம் பெயரவேண்டும் என்ற அறவுரையைக் கேட்டு அவ்வரசன் வடக்கே அவந்திக்குச் சென்றான் என்பதே கதை. அந்த அரசன் பூர்வதேசத்தை விட்டு வடக்கே சென்றான் என்று சொல்லப்படுவதால் அவந்திக்குத் தெற்கே அல்லது தென்கிழக்குப் பகுதியில் பூர்வதேசம் அமைந்திருக்கவேண்டும். அது மேற்சொன்ன பூர்வராஷ்டிரத்தோடு ஒத்துப்போதல் அறிக. பூர்வ என்ற பெயர் பல பொருள் ஒரு சொல்லாகும். முற்பட்டது, கிழக்கில் உள்ளது, முற்காலத்தது, பழமையானது என்ற பொருள்கள் கொள்ளலாம். இந்த இடத்தில் மத்திய இந்தியாவில் உள்ள கரடுமுரடான மலைப்பகுதிகளுக்குக் கிழக்கே உள்ள பகுதிகளை அந்த மக்கள் பூர்வ ராஷ்டிரம் அல்லது பூர்வதேசம் என்று அழைத்திருக்கலாம்.

இனி சொல்லப்பட்ட அந்த இடங்களைப் பற்றி நோக்குவோம். சக்கரகோட்டத்திற்கு அடுத்தபடியாகச் சொல்லப்படுவது மதுரை மண்டலம்; ஒரிஸா மாநிலத்தில் கியோன்சார் மாவட்டத்தில் கியோன்சார் வட்டத்தில்

மதுரமண்டலி (Mathura Mandali) என்ற ஊர்ப்பெயர் அம்மாவட்ட ஊர்ப்பட்டியலில் 19ம் எண்ணுள்ள ஊராகக் காணப்படுகின்றது. அடுத்தப்படியாக நாமணைக்கோணம் நாமன், நாமன, நாமனகர், நாமன்கான் என்ற பெயர் தாங்கிய ஆறு ஊர்களின் பெயர்களில் நாமனகர் என்ற ஊராக இருக்கலாம் என்று தோன்றுகிறது. இது 18° 50' என்ற அக்ஷரேகையிலும் 84° என்ற தீர்க்கரேகையிலும் குறிக்கப்படுகின்றது. அடுத்து பஞ்சப்பள்ளி என்பது அப்பெயரோடு ஒற்றுமை காட்டும் பஞ்சபல்லி, பஞ்சகான், பஞ்சலி, பஞ்சபல, பஞ்சபலி, பஞ்பல்லி என்ற பல பெயர்களில் பஞ்ச்பலி என்ற ஊராக இருக்கலாம். இதன் அக்ஷரேகை 11° 05' தீர்க்கரேகை 86° 05'. இறுதியில் மாசுணதேசம் என்பது தேசம் என்ற விகுதிப் பெயர் இல்லாமல் சொல்லப்படும் மாசௌண, மாசேன, மச்ன, மச்னர்பாடி, மச்னி என்பது முதலான பத்துக்குத் மேற்பட்ட ஊர்களிடையில் மச்ன (Masna) என்ற ஊராக இருக்கலாம். அது 21° 50' என்ற தீர்க்கரேகையிலும் 83° 50' என்ற அக்ஷரேகையிலும் இருப்பதாகும். எனவே மதுரைமண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப்பள்ளி, மாசுணிதேசம் என்ற நான்கும் கோதாவரிக்கரையிருந்து தென்மேற்கிலிருந்து வடகிழக்காகச் செல்லும் வழியில் இருப்பதை அறியலாம்.

மெய்க்கீர்த்தியில் அடுத்துச் சொல்லப்படும் ஆதிநகர் பழைய மயூர்பஞ்ச அரசின் தலைநகராகிய கிச்சிங் என்ற ஊருக்கு வடமேற்கே இன்று ஆதியூர் என்று வழங்கும் ஊராக இருக்கலாம் என்று அங்கே கிடைத்த பிற்காலச் செப்பேட்டின் அடிப்படையில் உய்த்துணரலாம். எனினும் மேற்சொல்லப்பட்டவையெல்லாம் வெறும் பெயரொற்றுமையால் கண்டவையென்பதை மறுத்தற்கில்லை. அந்த இடங்களுக்கு நேரில் சென்று ஆய்வு செய்தால் சோழர்கள் எங்காவது கல்வெட்டு பொறித்திருந்தால் அறிதற்கு இயலும். இப்பெயர்களை உறுதிசெய்யும் சான்று வேறு இல்லாமையால் அதுவரை இவற்றை ஏற்றுக் கொள்ளலாம்.

சோழர் சென்றவிடமெல்லாம் அத்தகைய சான்றுகள் கிடைக்குமா என்ற கேள்வி எழும். கிடைக்கலாம் என்பதே விடை ஆகும். எடுத்துக்காட்டாக அடுத்துச் சொல்லப்படும் ஒட்ட விஷயம்

சோழரால் கொள்ளப்பட்டது என்பதை மெய்ப்பிக்க கல்வெட்டுச் சான்று இருக்கிறது. கஞ்சம் மாவட்டத்தில் மஹேந்திர மலையின் உச்சியில் பாண்டவர் பெயரால் இன்று வழங்கி வரும் சிறு கோயில்களில் யுதிஷ்டிரர் கோயில் நுழைவாயிலில் உள்ள ஒரு தனிக்கல்லில் ராஜேந்திரன் காலத்துத் தெலுங்கு எழுத்துக்களில் எழுதப்பட்ட வடமொழிக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. செய்யுளில் உள்ள வடமொழிக் கல்வெட்டின் தமிழாக்கம் பின்வருமாறு:

*ராசேந்திரசோழன் மிகுந்த தோள்வலிமையுடையவன். பூமி முழுவதும் வென்றவன். கலிநிறைந்த உலகம் முழுவதையும் குற்றமற விளங்க வைக்கிறான். குலூதேசுவரனான விமலாத்தியனை தன் உண்மையான பலத்தால் முறித்து கலிங்க அரசனின் மலை போன்ற யானைகளைக் கைப்பற்றி அவர்கள் படைத்தலைவர் களையும் பிளந்தெறிந்து ராஜேந்திர சோழனின் படைத்தலைவன் மஹேந்திர மலையில் வெற்றித்தூணை நிறுவினான்.*

எனவே இக்கல்லே வெற்றித் தூணாக அமைந்தது என்று சொல்லலாம். குமரி மாவட்டத்தில் அகத்தீசுவரத்தில் பகவதி அம்மன் கோயிலில் மணிமண்டபத்தில் உள்ள வீரராசேந்திரனின் கல்வெட்டில் ராசேந்திரனின் படையெடுப்பில் குலூத அரசன் வெல்லப்பட்டது கூறப்படுதல் காண்க *(திருவிதாங்கூர் தொல்லியல் வரிசை, 3, எண்.41)*

ஆக இவ்வாய்விலிருந்து பூர்வதேசம் என்பது தற்கால ஒரியா மாநிலத்தின் மேற்குப் பகுதியில் தென் மேற்கிலிருந்து வடகிழக்காகச் செல்லும் மலை அல்லது மலையைச் சார்ந்த இடமாகும் என்பதும் மெய்க்கீர்த்தியில் சொல்லப்படும் மதுரைமண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப்பள்ளி, மாசுணிதேசம் என்பவை இப்பகுதியில் காணப்படுகின்றன என்பதும் தெளியப்படும். இதையே குருபூரு கல்வெட்டு பூர்வதேசம் என்று குறிப்பிடுகின்றது.

## 32. சதுரங்கப்பட்டினம் : ஓர் இடைக்காலத் துறைமுகம்

பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.

பல்லவர்களின் இரண்டாவது தலைநகராகவும் துறைமுக மாகவும் விளங்கிய மாமல்லபுரத்திலிருந்து தெற்கே 11 கி.மீ. தொலைவில் செங்கல்பட்டு அண்ணா மாவட்டத்தில் சதுரங்கப் பட்டினம் அமைந்துள்ளது. (நிலப்படம்). இக்கடற்கரைப் பகுதி கிறித்துவ ஆண்டு தொடங்குவதற்கு முன்பிருந்தே ஒரு சிறந்த வரலாற்றுச் சிறப்பைக் கொண்டிருந்தது என்பதை சதுரங்கப் பட்டினத்திற்கு அருகாமையில் அமைந்திருக்கும் வசவசமுத் திரத்தில் மேற்கொண்ட அகழாய்வு மெய்ப்பித்துள்ளது. வசவசமுத்திரத்தில் கிடைத்த தொல்பொருட்கள் தமிழகத்திற்கும் மத்தியத்தரைக்கடல் நாடுகளுக்குமிடையில் கி.மு. முதல் நூற்றாண்டு மற்றும் கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில் காணப்பட்ட கடல்சார் தொடர்பை தெளிவாகக் காட்டுகின்றன. வசவசமுத்திரம் போல, இடைக்காலத் தமிழ்நாட்டில் சதுரங்கப்பட்டினம் ஒரு புகழ்பெற்ற, முதல்தரமான துறைமுகமாக விளங்கியது. இத்துறைமுகத்தின் இடைக்கால வரலாற்றுப் பின்னணி, பெயராய்வு, இங்கிருந்து கடல்சார் வணிகத்தில் ஈடுபட்ட வணிகக்குழுக்கள், ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட பொருட்கள் ஆகியவற்றை இக்கட்டுரை ஆய்கின்றது.

### வரலாற்றுப் பின்னணி

சோழ, பாண்டிய, சம்புவராய, விசயநகர அரசுகளின் கீழ் தொடர்ச்சியாக ஆட்சியில் இருந்த தொண்டைமண்டலத்தில் இச் சதுரங்கப்பட்டினம் அமைந்திருந்தது. கி.பி.12-15 ஆம் நூற்றாண்டுகளில் தமிழ்நாடு கடல்சார் வணிகத்தில் ஒரு குறிப்பிடத் தக்க வளர்ச்சியைக் கண்டது. இவ் வணிக வளர்ச்சியில் துறைமுகங் களின் பங்கு முக்கியமானதாகக் கருதப்பட்டது. தமிழகத்தில் காணப்பட்ட துறைமுகங்களில் ஒன்றான சதுரங்கப்பட்டினம் எப்பொழுது ஏற்படுத்தப்பட்டது என்பதைத் துல்லியமாக கூறுவது கடினமான ஒன்று. இருப்பினும், சதுரங்கப்பட்டினம்

இடைக்காலத்தில் மிகவும் சுறுசுறுப்புடன் காணப்பட்ட ஒரு துறைமுகம் என்பதை மெய்ப்பிக்க இக்காலத்தைச் சேர்ந்த வெவ்வேறு ஆட்சியாளர்கள் வெளியிட்ட கல்வெட்டுக்கள் மிகவும் துணைநிற்கின்றன. ஆறு கடலில் கலக்கும் இடத்தில் துறைமுகம் அமைந்திருப்பின் ஆறு அல்லது கால்வாய் வழி போக்குவரத்து மூலமாக சரக்குகளை எளிதாக உள்நாட்டிற்குள் எடுத்துச் செல்ல முடியும் என்ற கூற்றுக்கு உகந்ததாக சதுரங்கப்பட்டினமும் இயற்கையாகவே பாலாறு வங்கக்கடலில் கலக்குமிடத்தில் அமைந்துள்ளது.

## பெயராய்வு

இடைக்காலத்தில், குறிப்பாக சம்புவராயர்களின் ஆட்சியில், இத்துறைமுக நகரம் இராசநாரயணன்பட்டினம் என அழைக்கப் பெற்றதை முதல் இராசநாராயண சம்புவராயனின் கி.பி.1353 ஆம் ஆண்டுக்கல்வெட்டு தெளிவாகக் காட்டுகிறது (க.ஆ.1932-33, எண்:103). இராசநாராயணன்பட்டினம் எனும் பெயர் மேற்சுட்டிய மன்னர் பெயரால் வழங்கப்பட்டிருக்க வேண்டும். அல்லது சோழ ஆட்சியின் பொழுது இத்துறைமுகம் உருவாக்கப்பட்டிருந்தால் இராசநாராயணன்பட்டினம் என்ற பெயர் முதல் குலோத்துங்க சோழனின் (1070-1120) சிறப்புப் பெயரான இராசநாராயணன் (தெ.க.தொ. 1, பக்: 52 - 59) என்பதிலிருந்து வந்திருக்கவும் இடமுண்டு.

விசயநகரப் பேரரசு ஆட்சியின் கீழ் இத்துறைமுகப்பட்டினம் சதிரவாசகன்பட்டினம் என வழங்கப்பட்டது. திருக்கழுக் குன்றத்தில் கிடைக்கப்பெற்ற முதல் புக்கரின் கி.பி. 1374ஆம் ஆண்டுக் கல்வெட்டு மேற்குறிப்பிட்ட பெயரைக் காட்டுகிறது (க.ஆ. 1932-33, எண்:173). சதிரவாசகன்பட்டினம் என்ற இப்பெயரே பின்னர் மறுவி தற்பொழுது வழங்கப்பட்டுவரும் சதுரங்கப் பட்டினம் ஆயிருக்கவேண்டும். சதிரவாசகன் என்பதற்கு 'சாமார்த்தியமாகவும் அறிவு நுட்பத்துடனும் பேசக் கூடியவன்' என்று பொருள் உண்டு (Subramaniam 1957:p.1425). இப்பெயர் கடவுளுக்குச் சூட்டப்பெற்ற பெயராக இருக்க வேண்டும். இங்கு திருமாலுக்கு கோயில் உள்ளது குறிப்பிடத்தக்கது. இரண்டாம்

இராசாதிராச சோழனின் 5ஆவது ஆட்சியாண்டுக் (கி.பி.1171) கல்வெட்டு கடார அரசனின் பிரதிநிதியான சதிரன் இராஜன் என்ற கிடாரத்தரையன் புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் திருவேங்கவாசலில் அமைந்துள்ள விசயபுரீசுவரர் கோவிலுக்கு சதுரவிடங்கன் சிற்பம் அமைத்ததைக் காட்டுகிறது (புதுக் எண்:139). இக்கல்வெட்டு சுட்டும் 'சதுரவிடங்கன்' மற்றும்

## நூற்பட்டியல்


Karashima, N and Subbarayalu, Y (1994) "An Inscription on the Pedestal of the Bronze Buddha Image of the Mr. and Mrs. John D. Rockefeller 3rd Collection: International Character of Nagapattinam Merchants During the Chola Period", *Journal of East West Maritime Relations*, Vol.3.

Maclean, C.D. (ed) (1990), *Manual of the Administration of the Madras Presidency,* Vol.3, Asian Educational Services Reprint, New Delhi.

Meera Abraham (1988), *Two Medieval Merchant Guilds of South India,* Manohar, New Delhi.

Nilakanta Sastri, K.A. (1978), *South India and Southeast Asia,* Geetha Book House, Mysore.

Shanmugam, P (1989), "Pattadai and Industries in Tamil Country Under the Vijayanagar Rule", *Journal of Asian and African Studies,* No.37.

Subbarayalu, Y (1996), "Chinese Ceramics of Tamil Nadu and Kerala Coasts", *Tradition and Archaeology* (eds.H.P. Ray and J.S. Selles), Manohar, New Delhi.

*சுப்பராயலு, எ (1993),* ''நாகபட்டினம் சூடாமணி விஹாரத்தைச் சேர்ந்த ஒரு புதிய புத்தர் படிமம்'' ஆவணம், இதழ்:3, தமிழகத் தொல்லியல் கழகம்.

Subrahmaniam, T.N. (1957) *South Indian Temple Inscriptions,* Vol.3, Government Oriental Manuscripts Library, Madras.


## பிற்சேர்க்கை

***க.ஆ.1932-33, எண்:103***

*ஸ்ரீ சகலலோக சக்ரவத்தியான சம்புவராயற்கு யாண்டு 16வது ...இராசநாராயணன் பட்டினத்தில் திருவரகத்துறை உடைய நாயநார் எழுந்தருளவும் பூசை திருப்பணிக்கும்... ஊரவரும் பதினெண்விஷயத்தினரும் ஆகக் கட்டிக் குடுத்த தரகினால் நூற்றுக்கு ஒருமாப்பணமும் சரக்கு கற்பூரவிலையிலும் ... புடவைத்தரகிலே நூற்றுக்கு ஒருமாப்பணமும் துறையிலே நடந்தபடிக்குவிற்றப் பணத்திலே பணத்துக்கு ... பெறுவதாக சந்திராதித்தவரையும் நடத்...ஊரவரும் பதினெண்விஷயத் தாரு...தாது என்று ...டுத்துப் பார்வைக்கு...மாவும் புடவைப் பார்வைக்கும் புடவை ம...அரைக்காலும் பல மண்டலச்சரக்கு கற்பூர விலையில் அரைக்காலும் துறைமதிகு சரக்கு விலைக்கு நூறும் எண்ணெய் உள்ளிட்ட சரக்கு நூற்றுக்கு...புடவைக் கட்டுக்கு கட்டு ஒன்றுக்கு எட்டும் குடுத்தோம் ஊரவரும் பதின்எண்விஷய...*

***க.ஆ. 1932-33,எண்.170.***

*...திருக்கழுக்குன்றத்து நான்கு எல்லைக்குட்பட்ட கைக்கோளர்... இவ்வூர் கைக்கோளர் பட்டினத்துக் கொண்டுபோம் புடவைக்கும் இவர்கள் பட்டினத்தினின்றும் கொண்டு வரும் பலசரக்கும் பலவற்றில் கொண்ட நெல்லுக்கும்...*


தொண்டைமண்டலம்
பாலாறு
சொங்கல்பட்டு
திருக்கழுக்குன்றம்
மாமல்லபுரம்
வசவசமுத்திரம்
சதுரங்கப்பட்டினம்

மேற்குறிப்பிட்ட 'சதுரவாசகன்' ஆகியவற்றிடையே உள்ள ஒற்றுமையைக் கொண்டு இப்பெயர்கள் கடவுளர்களுடன் தொடர்புடையவை என்பதைக் காணமுடிகின்றது. சதுரங்கப் பட்டினம் பின்னர் 'சதுரை' எனவும் ஆங்கிலேயர்களின் வருகையால் 'சத்ராசு' எனவும் மாற்றம் பெற்று இன்றுவரை சிறப்பாக மக்களிடையே வழங்கிவருகிறது (Maclean 1990 :p.77).

### வணிகக் குழுக்கள்

இடைக்கால வணிகத்தில் ஏற்பட்ட வளர்ச்சி வணிகக் குழுக்களின் வளர்ச்சியின் வாயிலாக வெளிப்பட்டது. சமூகத்தில் வணிகக்குழுக்கள் ஓர் உயரிய அங்கமாக விளங்கியதுடன் குறிப்பாக வணிக மையங்களின் மீதான கட்டுப்பாட்டுடையும் கொண்டிருந்தன. சதுரங்கப்பட்டினமும் இடைக்காலத்தின் முக்கிய வணிகக் குழுக்களான பதினெண்விஷயத்தார், நானா தேசிகள், பரதேசிகள் ஆகியோரின் செல்வாக்கைப் பெற்றிருந்தது. இத்தகைய வணிகக்குழுக்களின் தோற்றம், செயற்பாடுகள் குறித்து இன்னும் ஆய்வாளர்களிடையே பல கருத்துக்கள் உள்ளன. பதினெண்விஷயத்தார் இத்துறைமுகப் பட்டினத்தில் முக்கித்துவம் பெற்று விளங்கியதை மேற்காட்டிய முதலாம் இராசநாராயண சம்புவராயரின் கல்வெட்டு குறிப்பிடுகிறது. தமிழ் அகராதி பதினெண்விஷயம் என்பதற்கு பதினெட்டு தேசத்தைச் சேர்ந்த என்ற பொருளில் சிங்களம், சோனகம், சாவகம், சீனம், தமிழ்நாடு மற்றும் சில நாடுகளை உள்ளடக்கிக் குறிப்பிடுகிறது. இவ்வணிகக்குழுவின் பெயர் பொறிக்கப்பட்ட சில தமிழ்க் கல்வெட்டுக்கள் இலங்கை, மலேசியா, சுமத்ரா நாடுகளில் கிடைக்கப்பெற்றிருப்பது (Nilakanta Sastri, 1978:) குறிப்பிடத்தக்கது. மேலும், இக்கால கட்டங்களில் இவ்வணிகக் குழு பாண்டிய நாட்டில் மிகவும் சுறுசுறுப்புடன் செயல்பட்டதைக் கல்வெட்டுக்கள் தெளிவுபடுத்துகின்றன. சோழநாட்டிலும் இவர்கள் செல்வாக்குப்பெற்று இருந்ததை இப்பகுதியில் உள்ள சில கடவுளர்களுக்கு இவ்வணிகக்குழுவினர் வழங்கிய கொடைகளைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் வாயிலாக அறியமுடிகின்றது (தெ.க. 6 எண்கள்.40,41,47). சோழநாட்டில் கிடைக்கப்பெறும் இவ்வணிகக் குழுவின் கல்வெட்டுக்களும்

பாண்டிய மன்னர்களின் பெயரைக் கொண்டிருப்பது குறிப்பிடத் தக்கது. பாண்டியர் கல்வெட்டுக்களில் இக்குழுவினர் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுவது இடைக்காலத் தமிழகத்தில் குறிப்பாக பாண்டிய நாட்டில் இக்குழுவினரின் செயற்பாடுகள் சிறந்து விளங்கியதைக் காட்டுகிறது. இக்குழுவினர் 13 ஆம் நூற்றாண்டுவரை வணிகத்தில் ஈடுபாடுடையவர்களாக இருந்தனர் என ஆய்வாளர்களிடையே பொதுவான கருத்து உண்டு. ஆனால், சதுரங்கப்பட்டினத்தில் படியெடுக்கப்பட்ட பதினெண் விஷயத்தைக் குறிக்கும் மேற்சுட்டிய முதல் இராசநாராயண சம்புவராயரின் கி.பி.1353 ஆம் ஆண்டுக் கல்வெட்டு இக்குழுவினர் 14ஆம் நூற்றாண்டிலும் இத்துறைமுகத்திலிருந்து சிறப்பாக செயல் பட்டதைக் காட்டுகிறது. சமூகத்திலும், ஆட்சியிலும், ஊர் சபையுடன் சேர்ந்து இவ்வணிகக்குழுவும் முக்கியப் பங்காற்றியது. சில கல்வெட்டுப் பொறிப்புகளிலிருந்து இவ்வணிகக்குழுவினர் புத்த மதத்தைச் சார்ந்தவர்கள் என ஒரு கருத்து உண்டு. (Karashima and Subbarayalu 1994: 13-15; சுப்பராயலு 1993: பக். 43-47). பதினெண்விஷயத்தார் சமயத் தொண்டாற்றியதைக் கல்வெட்டுக் கள் கூறுகின்றன. சைவ வைஷ்ணவ கோவில்களுக்கும், கடவுளர் களுக்கும் மட்டுமல்லாது இவர்களது பணி, கொடைகள் புத்த சமயத்திற்கும் கிடைத்துள்ளன. பிற வணிகக்குழுக்களைக் காட்டிலும் பதினெண் விஷயத்தார் குறிப்பிடத்தக்க வகையில் சமயப்பணி மேற்கொண்டுள்ளதையும் அறிய முடிகின்றது. இதன்மூலம் இக்குழுவினர் அனைத்து சமயத்துடனும் ஈடுபாடு கொண்டிருந்தனர் என்பது புலப்படுகிறது. பதினெண் விஷயத்திற்குப் பிறகு விசயநகர ஆட்சியின் பொழுது இத்துறை முகத்தில் நானாதேசி மற்றும் பரதேசி என்ற வணிகக் குழுவினர் நிலை பெற்றிருந்தனர் (*க.ஆ, 1932-33, எண்கள்:170,173*). நானாதேசி பெயர் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் மியான்மர், (பர்மா), இலங்கை முதலிய நாடுகளில் கிடைத்துள்ளமை இக்குழுவினர் உள்நாட்டு வணிகம் தவிர வெளிநாட்டு வணிகத்திலும் ஈடுபாடு கொண்டிருந்ததைக் காட்டுகிறது (Meera Abraham 1988 : 77). பொதுவாக பரதேசி என்பது பிற நாடுகளி லிருந்து வந்து தமிழகத்தில் கடல் வணிகத்தில் ஈடுபட்டவர்களைக் குறிக்கும். இவ்வகை வணிகர்கள் தென்னிந்திய துறைமுகங்களில் சிறப்பாக

நடத்தப்பட்டமைக்கு இக்காலகட்டத்தில் கிழக்குக் கடற் கரையில் சிறந்த துறைமுகமாக விளங்கிய மோட்டுப் பள்ளியில் கிடைத்த அன்னப்போத்து ரெட்டியின் கி.பி.1358ஆம் ஆண்டுக் கல் வெட்டு ஓர் எடுத்துக்காட்டாகும் (*தெ.க.26, எண்:635*). மேற்கூறிய வணிகக் குழுக்களைத் தவிர தமிழகத்தின் பிற இடங்களிலிருந்தும் உள்நாட்டு வணிகர்கள் இத்துறைமுகம் வந்து சென்றதையும் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன (*க.ஆ.1909, எண்:61;1932-33, எண்:108*). சதுரங்கபட்டினத்தில் கிடைத்த பீங்கான்துண்டுகள் இத்துறைமுகம் சீன நாட்டோடு கொண்ட தொடர்பைப் புலப்படுத்தும் (Subbarayulu 1996: 109 - 14).

**சரக்குகள்:**

சம்புவராயர், விசயநகர் ஆட்சியாளர்களின் கல்வெட்டுக்கள் இத்துறைமுகம் வழியாகச் சென்ற சரக்குகளை ஓரளவிற்கு தெரிந்துகொள்ள உதவுகின்றன (*க.ஆ.1932-33, எண்கள்: 103, 170, 173 பார்க்க: பிற்சேர்க்கை*). இவற்றில் பதினெண்விஷயத்தைக் குறிக்கும் சம்புவராயர் கல்வெட்டு மிகவும் சிதைந்துள்ளது. துணி(புடவை) இத்துறைமுகத்தின் முக்கிய ஏற்றுமதிச் சரக்காகும். இத்துறைமுகத்தைச் சுற்றியுள்ள இடங்களில் துணி உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலைகள் (பட்டடை) பல இருந்ததும் குறிப்பிடத்தக்கது (Shanmugam 1989: : 31-47). பிற இடங்களிலிருந்து நெல் கொண்டுவரப்பட்டு இத்துறைமுகத்தில் இறக்கப் பட்டுள்ளது. முத்து, எண்ணெய் இரண்டும் இத்துறைமுகம் வழியாகச் சென்ற பிற முக்கிய பொருள்களாகும். பழங்காலம் தொட்டு ஆங்கிலேய ஆதிக்கம் வரை முத்துக்குளித்தல் தமிழகக் கடற்கரை ஊர்களில் சிறப்பாக நடைபெற்றதோடு, இது ஒரு இலாபகரமான வணிகத் தொழிலாகவும் கருதப்பட்டது. எண்ணெய் தயாரிப்பதற்கும் பட்டடைகள் இத்துறைமுகத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் அமைக்கப்பெற்றிருந்ததைக் கல்வெட் டுக்கள் சுட்டுகின்றன. ஆகவே, முத்து, எண்ணெய் இரண்டும் இத்துறைமுகத்திலிருந்து ஏற்றுமதிப் பொருள்களாகவே சென்றிருக்க வேண்டும். இவையன்றி பல மண்டலங்களிலிருந்தும் சரக்குகள் இத்துறைமுகம் வழியாக வந்து சென்றுள்ளன. ஆனால் இப்பெயர்கள் கல்வெட்டில் குறிப்பிடப்பெறவில்லை.

## 33. சங்ககாலக் காசுகள்

ஆறுமுகசீதாராமன், தஞ்சை.

### அ. சேரர் காசுகள் (சுமார் கி.மு. முதல் நூற்றாண்டு).

சங்ககாலச் சேரரின் செப்புக் காசுகள் நான்கு வகை கரூர் அமராவதி ஆற்றுப்படுகையில் கிடைத்துள்ளன.

**வகை-1:** 1.750 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் காளை, காளையின் மேல் பிறை, காளையின் கீழே கலப்பை ஒன்று உள்ளது. காசின் பின்பக்கத்தில் வில், அம்பு அங்குசம் உள்ளன.

**வகை-2:** 1.7 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் காளை உள்ளது. காசின் பின்பக்கத் தில் வில், அம்பு, அங்குசம், அம்பின் இரண்டு பக்கத்திலும் ஸ்வஸ்திக் சின்னம் காணப்படுகின்றன.

**வகை-3:** 1.5 கிராம் எடையுள்ள நீண்ட சதுர காசின் முன்பக்கத்தில் வேலியிட்ட மரம் ஒன்று உள்ளது. காசின் பின்பக்கத்தில் வில், அம்பு உள்ளன.

**வகை:4** 1.350 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் குதிரை உள்ளது. குதிரையின் முன் சூலம், சூலத்திற்கு கீழ் பரசுகட்டாரி ஒன்று உள்ளது. குதிரையின் மேல் கோட்டுருவில் காளைக் சின்னம் உள்ளது. காசின் பின்பக்கத்தில் வில், அம்பு, அங்குசம் உள்ளன.

### ஆ. சோழர் காசுகள் (சுமார் கி.மு. முதல் நூற்றாண்டு)

**வகை:1** செப்புக்காசு ஒன்று கரூர் அமராவதி ஆற்றுப் படுகையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 1.150 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் யானை, யானையின் மேல் நான்கு குறியீட்டுச் சின்னங்கள் காணப் படுகின்றன. காசின் பின்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் புலி, புலியின்மேல் சக்கரம் உள்ளன.

அ. சேரர் காசுகள்



வகை-1:



வகை:2



வகை-3:



வகை:4

ஆ. சோழர் காசுகள்



வகை:1



வகை-2:



வகை:3



இ. பாண்டியர் காசு



வகை;1



வகை:2

ஈ. மலையமான் காசுகள்

**வகை:2** செப்புக் காசு ஒன்று (கரூர்) வேலூர் காவேரி ஆற்றில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 1 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் புலி, புலியின் முன்னால் வில், புலியின், இரண்டு கால்களுக்கு நடுவே மீன் மற்றும் புலியின் மேல் சங்கு காணப்படுகிறது. காசின் பின்பக்கத்தில் எட்டு மங்கலச் சின்னங்கள் உள்ளன. இந்தக் காசு சேர, பாண்டியரை வெற்றிகொண்டதற்கான சோழர் சிறப்பு வெளியீடாகக் கருதலாம்.

**வகை:3** செப்புக்காசு ஒன்று திருச்சி மாவட்டம் அரியலூரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 2.550 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் யானை, யானையின் மேல் குடை உள்ளது. காசின் பின்பக்கத்தில் இடதுபக்கம் நோக்கி முன்காலைத் தூக்கியபடி புலி ஒன்று உள்ளது.

## இ. பாண்டியர் காசு(சுமார் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு.)

சங்ககாலப் பாண்டியரின் செப்புக்காசு ஒன்று கரூர் அமராவதி ஆற்றுப்படுகையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 4.8 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் யானை, யானையின் முன் கோல், சூலம் உள்ளது. யானையின் மேல் ஏழு மங்கலச் சின்னங்கள் உள்ளன. ஒரு சின்னம் காணவில்லை. காசின் பின் பக்கத்தில் உள்ளவை வேலியிட்ட மரம் மற்றும் பக்கத்தில் மீன் குறியீட்டுச் சின்னம்.

சங்க கால மன்னர்கள் வேலியிட்ட மரம், (கடிமரம்) இலச்சினை இரண்டிற்கும் சம முக்கியத்துவம் கொடுத்து உள்ளனர் என்பதை அறிய இந்த காசின் முக்கியத்துவத்தை நாம் உணரலாம்.

## ஈ. மலையமான் காசுகள் (சுமார் கி.மு. முதல் நூற்றாண்டு)

சங்ககால மலையமானின் செப்புக் காசுகள் இரண்டு திருக்கோவிலூர் தென்பெண்ணை ஆற்றுப்படுகையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

**வகை : 1** 6.3 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் குதிரை, குதிரையின் முன் வேலியில்லாத மரம் ஒன்று உள்ளது. குதிரையின் மேல் வஜ்ஜிராயுதம்,

கோட்டுருவில் காளை சின்னம், பிறை ஆகியன உள்ளன. காசின் பின்பக்கத்தில் ஆற்றின் கரை கோடுகளால் உள்ளது. நேராக ஒரு வேலும், படுக்கைவாட்டில் ஒரு வேலும் உள்ளன.

**வகை:2** *3.4.* கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் குதிரை, குதிரையின் தலைக்குமுன் அங்குசம் ஒன்றும், குதிரையின் முதுகின் மேல் பிறை ஒன்றும் உள்ளது. காசின் பின்பக்கத்தில் ஆற்றைக் குறிக்கும் கோடுகள் உள்ளன.

## 34. முதலாம் நரசிம்மவர்மன் காசு

ஆறுமுகசீதாராமன், தஞ்சை
சங்கரன்ராமன், சென்னை

பல்லவ மன்னரின் வெள்ளி, செம்பு கலந்த இரண்டு காசுகள் ஆற்காடு வட்டம் பெண்ணையாற்றில் கிடைத்தன. 1.1 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் காளை மேல் 'கடும்பிடுகு' என்று தமிழ் எழுத்தில் உள்ளது. ம, பி என்ற இரண்டு எழுத்துகளும் கூட்டெழுத்தில் உள்ளன. காசின் பின்பக்கத்தில் வட்டத்திற்குள் வலதுபக்கம் நோக்கி நிற்கும் பன்றி உள்ளது. காசில் உள்ள எழுத்துகளின் காலம் கி.பி. 7ஆம் நூற்றாண்டு.

முதலாம் நரசிம்மவர்மன் தன்னுடைய 13-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி.642-643) மேலைச் சாளுக்கியத் தலைநகராகிய வாதாபியின் மீது படையெடுத்து சாளுக்கிய வேந்தனாகிய இரண்டாம் புலிகேசியை வென்றதன், நினைவாக இந்தக் காசை சிறப்பு வெளியீடாக வெளியிட்டிருக்கலாம். சாளுக்கியர்களின் இலச்சினை பன்றி என்பது குறிப்பிடத்தக்கது.

முதலாம் மகேந்திரவர்மன் பகாப்பிடுகு என்று சிறப்புப் பெயர் பெற்றிருந்தான். இதைப் போலவே இவன் மகன் நரசிம்மவர்மனும் கடும்பிடுகு என்ற பட்டத்தைக் கொண்டிருக்கலாம். கடும்பிடுகு என்ற சொல்லுக்கு கடுமையான இடிபோலப் பாய்பவன் என்று பொருள் கொள்ளலாம்.



## 35. கச்சிராபாளையம் நாணயங்கள் ஒரு தொழில் நுட்ப ஆய்வு

வே. ஜெயராஜ் , சென்னை.

**வெள்ளிப் புதையலின் வரலாறு:**

1985 ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் உள்ள கள்ளக்குறிச்சி வட்டம் கச்சிராபாளையத்திலிருந்து இந்திய புதைபொருள் சட்டத்தின் கீழ் 845 முத்திரை குத்திய வெள்ளிக்காசுகள் புதையலாக சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பெறப்பட்டன. இப்புதையல் பெறப்பட்டதும் பார்ப்பதற்கு பச்சை நிற துருவுடன் ஒன்றோடொன்று ஒட்டி செப்பு நாணயங்கள் போன்று காட்சியளித்தன. இந்நாணயங்கள் தூய்மைப்படுத்தப் பட்டவுடன் வெள்ளி நாணயங்கள் எனத்தெரியவந்தன.

**நாணயங்களைத் தூய்மை செய்தமுறை :**

இந் நாணயங்களில் பொதுவாக செம்பு கலந்திருந்ததாலும், பூமியில் புதைந்திருந்ததாலும் செம்பு உப்புக்களோடு வினைபுரிந்து செம்புக் குளோரைடு அல்லது கார்பனேட்டாக மாறி நீலங்கலந்த பச்சை நிறமாக தோற்றமளித்தன. நாணயங்கள் காரத்தன்மை யுடைய 3:1:16 என்ற விகிதத்தில் தயாரிக்கப்பட்ட சோடியம் பொட் டாசியம் டார்ட்ரேட், சோடியம் ஹேடிராக்ஸைடு, நீர்க் கரைசலின் உதவியுடன் தூய்மைப் படுத்தப்பட்டன. வெள்ளி நாணயங்களின் மீது படிந்திருந்த பச்சை நிற உப்புக்கள் அகற்றப் பட்டதும் வெள்ளை மற்றும் கருப்புநிறமாக வெள்ளி நாணயங்கள் தோற்ற மளித்தன. வெள்ளை நிற அரிப்புப் பொருள் நீங்க (வெள்ளி குளோரைடு) அமோனியா திரவத்தில் மூழ்கவைத்து அகற்றப் பட்டது. கருப்புநிற அரிப்புப் பொருள் (வெள்ளி சல்பைடு) நீங்க 10% பார்மிக் அமிலக்கரைசலில் நாணயங்கள்மூழ்கவைக்கப்பட்டு தேய்த்து சுத்தம் செய்யப்பட்டன. நன்கு நீரில் கழுவிய பின்பு உலர வைக்கப்பட்டு அசிட்டோன் திரவத்தில் கரைக்கப்பட்ட 2% பாலி வினைல் அசிட்டேட் பூசப்பட்டு நாணயங்கள் பாதுகாக்கப்பட்டன. நாணயங்கள் மீது காணப்பட்ட அடையாளங்கள் தெளிவாகத் தெரிந்தன.

**சிதையா முறையில் நாணயத்தின் உலோகங்களைக் காணல்:**

ஒப்படர்த்தி முறையில் (Specific gravity) நாணயத்தில் கலந்துள்ள உலோகங்களின் விகிதத்தினைக் காணலாம். வெள்ளி மற்றும் செம்பு ஆகிவற்றின் ஒப்படர்த்தி முறையே 10.5 மற்றும் 8.9 ஆகும். இக்குறிப்பிட்ட நாணயங்களின் ஒப்படர்த்தி 9.837 ஆகக் கண்டறியப்பட்டது. பொதுவாக வெள்ளி நாணயங்களில் தங்கம் அல்லது செம்பு கலந்திருக்கும். அதிகமாக செம்புதான் கலந்திருக்கும். இவ்வித நாணயத்தில் துத்தநாகம், ஈயம் போன்றவை 2%க்குள் தான் இருக்கும். எனவே, வெள்ளி நாணயங்களில் வெள்ளி அதிக அளவிலும் செம்புசிறிய அளவிலும் இருக்கும் என்ற அடிப்படையில் வெள்ளி மற்றும் செம்பு அளவுகள் கீழ்க்கண்ட விதம் கணக்கிடப்பட்டன

$$\frac{\text{வெள்ளி நாணய எடை}}{\text{ஒப்படர்த்தி}} = \frac{\text{வெள்ளி எடை}}{\text{ஒப்படர்த்தி}} \quad \frac{\text{செம்பு எடை}}{\text{ஒப்படர்த்தி}}$$

$$\text{வெள்ளியின் அளவு} = \frac{\text{வெள்ளியின் எடை}}{\text{வெள்ளி நாணய எடை}} \times 100$$

$$\frac{1.474}{2.302} \times 100$$

வெள்ளியின் அளவு = 64.03%

செம்பின் அளவு = 100 — 64.03 = 35.97%

**வேதிய பகுப்பாய்வு**

வெள்ளி நாணயத்தின் உலோக அளவுகள் நாணயத்தின் ஒரு பகுதி வெட்டப்பட்டு வேதியிய பகுப்பாய்வுக்கு உட்படுத்தப் பட்டு கண்டுபிடிக்கப்பட்டன. வெள்ளி 65.26% , செம்பு 32.03%, துத்தநாகம் 1.51%, ஈயம் 1.02%

நாணயத்தின் உலோக அளவுகள் இருமுறைகளிலும் ஏறத் தாழ சமமாக இருப்பினும் ஒரு நாணயத்தின் பழைமையை உறுதி செய்ய அந்த நாணயங்களின் வேதியிய கருவிகளின் மூலம் கண்டு பிடிக்கப்பட்ட துல்லியமான உலோக விகிதம் மிகவும் தேவையானது.

### நாணயத்தின் உட்புற உலோகத் தோற்றம்

ஒரு நாணயத்தின் உட்புறத் தோற்றம் அதனுடைய தயாரித்த முறை, அது எவ்விதமாக பாதிக்கப்பட்டுள்ளது என்பதைத் தெரிவிக்கும்; எவ்வாறு உலோகங்கள் ஒன்றோடு ஒன்று கலந்துள்ளன என்பதையும் அறியலாம். ஓரிலைத் தாவரம் போன்ற அமைப்பு உட்புறம் காணப்பட்டது. இவ்வமைப்பு வார்ப்பு முறையில் செய்யப்பட்டதையும், ஓரிடத்தில் இரண்டு அடுக்குகள் சேர்ந்துள்ளமை நாணயத்தின் அப்பகுதியில் முத்திரை குத்தப்பட்டதையும் தெரிவிக்கின்றது.

### தொழில் நுட்ப விவரங்கள்

வெள்ளி நாணயத்தின் மேல் நடத்தப்பட்ட ஆய்வு அவை வார்ப்புத் தகடுகள் என்றும், பின்னர் அச்சுக்களால் முத்திரை குத்தப்பட்டன என்றும் தெளிவுபடுத்துகிறது. மூலவார்ப்புத் தகடுகள் உலோகங்கள் உருக்கப்பட்டு தயாரிக்கப்பட்டன. பின்னர் எடைக்கேற்ப வெட்டப்பட்டன. பின்னர் அவற்றின் மீது முத்திரை அச்சுகள் பதிக்கப்பட்டன. நாணயங்கள் பூமியில் புதையுண்ட போது அவை துரு ஏற செம்பு காரணமாயிருந்தாலும், நாணய புழக்கத்தில் ஏற்பட்ட தேய்வைத் தடுக்க செம்பு உதவியாக இருந்தது எனலாம்.

---

**நன்றி**

தொழில் நுட்ப ஆய்வு செய்ய உதவிகள் செய்த சென்னை இந்திய தொழில் நுட்பக்கழக உலோகத்துறைத் தலைவர் டாக்டர் கே.ஜே.எல். ஐயர் அவர்களுக்கும் இப்பணி செய்ய அனுமதி அளித்த அருங்காட்சியகங்களின் ஆணையர் அவர்களுக்கும் கட்டுரை ஆசிரியர் நன்றி தெரிவிக்கிறார்.

**துணை நூல்கள்:**

1. Thompson, F.C., Chatterjee, A.K., "The Age Embrittlement of Silver Coins', *Studies in Conservation*, Vol. No.3, 1954.
2. ZVX Goffer, *Archaeological Chemistry*, John Wiley & Sons, 1984.
3. Bag, A.K., *Science and Civilization in India*, Naurang, New Delhi, 1985.
4. Jeyaraj, V., "Three Coiled Silver Ring from Kodumanal' Tamili Nadu, *"Indian Journal of Chemical Science"*, Vol.5, 1991.

# 36. குண்டாறு பள்ளத்தாக்கில் தொல்லியல் ஆய்வுகள்

வீ. செல்வகுமார், பூணே.

இந்தியாவில் பழங்கற்காலக் கருவி முதன் முதலில் கண்டுபிடிக்கப்பட்டது தமிழகத்தில்தான் என்றாலும், வரலாற்றுக்கு முந்தைய காலத்தைப் பற்றிய ஆய்வில் தமிழகம் பின் தங்கியே உள்ளது. தமிழகத்தில் சென்னைக்கு அருகில் பழங்கற்காலக் கருவிகள் கிடைக்கும் கொற்றலை ஆற்றுப்படுகை மற்றும் திருநெல்வேலி மாவட்டத்தில், நுண்கற்கருவிகள் (Microlithic) காணப்படும், தேரி என்றழைக்கப்படும், செம்மண் குன்றுகளைப் பற்றியுமே அதிக அளவில் ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. தமிழகத்தின் மற்ற பகுதிகளில் குறிப்பிடத்தக்க அளவில் ஆய்வுகள் நடத்தப்பெறவில்லை. இந்தப் பின்னணியில், தென் தமிழகத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடரைச் சார்ந்துள்ள குண்டாறு பள்ளத்தாக்கில் உசிலம்பட்டி, திருமங்கலம் மற்றும் பேரையூர் வட்டங்களைச் சார்ந்த சுமார் 400 சதுர கிலோ மீட்டர் பரப்பளவு ஆராய்ச்சிக்காக தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்தக் கட்டுரை 1991-1996 ஆம் ஆண்டுகளில் நடத்தப்பட்ட ஆய்வின் கண்டுபிடிப்புகளை விவரிக்கிறது.

## முந்தைய ஆய்வுகள்

மதுரைப் பகுதியில் இராபர்ட் புரூஸ் பூட் (1883,1916) பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆவியூர், தல்லாகுளம் உட்பட பல இடங்களில் கற்காலக்கருவிகளைக் கண்டுபிடித்தார். பின்னர் 1950 களில் கே.வி. இராமன் (1979) குண்டாறு பள்ளத்தாக்கில் கள ஆய்வு மேற்கொண்டு இரண்டு இடைப் பழங்கற்காலக் கருவிகளையும், பல இடங்களில் நுண்கற்கருவிகளையும், இரும்புக்கால தடயங்களையும் கண்டறிந்தார். இந்திய அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை 1976-77 மற்றும் 1979-80 ஆம் ஆண்டுகளில், தே. கல்லுப்பட்டி அருகே உள்ள ஊரிருக்கை மற்றும் ஈமச்சின்னங்களை ஆராய்ந்து செம்புக்கால (Chalcolithic) பண்பாட்டுக்கூறுகள்

நிலப்படம் 1 : இடைக்கற்கால நிலைகள்



இரும்புக்காலப் பண்பாட்டு நிலைகளில் ஊடுருவி இருந்தமையைக் கண்டுபிடித்தது (IAR., 1976-77, 1979- 80). 1980களில் வேதாசலம் (1985) சில நுண்கற்கருவிகள் கிடைக்கும் இடங்களைக் கண்டுபிடித்தார்.

**தற்போதைய ஆய்வு**

தற்போதைய ஆய்வின் நோக்கம், குண்டாறு பகுதியில் காணப்படும் பண்பாட்டு நிலைகளையும், அந்நிலைகளில் வாழ்ந்த மனிதர்களின் வாழ்க்கை எவ்வாறு அமைந்திருந்தது என்பதையும் கண்டறிவதே ஆகும். இந்த ஆராய்ச்சியின் விளைவாக இடைக்கற் கால (Mesolithic) மற்றும் இரும்புக்கால (Iron Age) தடயங்கள் பல இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால், பழங்கற்காலம், புதியகற்காலம் (Neolithic) மற்றும் செம்புக்காலம், ஆகியவற்றிற் கான ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

**இடைக் கற்காலம்** (Mesolithic)

இடைக்கற்காலம் என்பது பொதுவாக பழங்கற்காலத்திற்கும் புதிய கற்காலத்திற்கும் இடைப்பட்ட, மனிதன் வேட்டையாடி உணவுசேகரித்த காலகட்டத்தை (தோராயமாக கி.மு 8000 முதல் கி.மு 2000 இடைப்பட்ட காலத்தை) குறிக்கும். இடைக்கற்காலம் நுண்கற்காலம் (Microlithic) என்றும் சில ஆராய்ச்சியாளர்களால் குறிப்பிடப்பட்டு வருகிறது. நுண்கற்கருவிகள் இடைக்கற் காலத்தில் அதிகமாக காணப்பட்டாலும், அவை மனிதன் உணவு உற்பத்தி செய்த (Food Producing Stage) புதியகற்காலம், செம்புக் காலம் மற்றும் இரும்புக்காலத்திலும் ஓர் அளவு பயன்பாட்டில் இருந்து வந்தன. எனவே, இக்காலத்தை இடைக்கற்காலம் என்ற ழைப்பதே பொருத்தமானதாகும். நுண்கற்கருவிகள் கிடைக்கும் அனைத்து இடங்களும் இடைக்கற்காலத்தை சேர்ந்தவை அல்ல.

குண்டாறு பள்ளத்தாக்கில் இடைக்கற்கால இருப்பிடங்கள் பல இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. (வரைபடம்1) பெரும்பாலான இடங்களில் கற்கருவிகள் மட்டுமே கிடைத் துள்ளன, சில இடங்களில் விலங்குகளின் எலும்புகளும் கிடைத் துள்ளன. இந்த இருப்பிடங்கள் பாறை இருக்கைகளிலும்

(Rockshelter), சுனைகள் அமைந்த மலையடிவாரங்களிலும் காணப்படுகின்றன.

அலகுக்கத்தி (Blades), முக்கோண வடிவ கருவிகள் (Tri angles), பிறை வடிவகருவிகள் (Crescents), முனைகள் (Points), வெட்டிகள் (Choppers), சுத்தியல் கற்கள் (Hammer stones) போன்ற கருவிகளும், இவற்றைத் தயாரித்த போது உருவான பயனற்ற செதில்களும் (Waste chips) இந்த இடங்களில் கிடைத்துள்ளன. இக் கற்கருவிகள் பெரும்பாலும் பளிங்கு (Quartz) எனப்படும் கல்லைக் கொண்டு தயாரிக்கப்பட்டவை. செர்ட் (Chert), ஜாஸ்பர் (Jasper) போன்ற கற்கள் மிகவும் குறைந்த அளவிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளன. சில இடைக்கற்கால இருப்பிடங்களில் கருப்பு-சிவப்பு பானை ஓடுகளும் காணப்படுகின்றன.

இடைக்கற்கால இருப்பிடங்களில் மான்(Antilope Cervicapra, Cervus Unicolor) உடும்பு (Varanus), புள்ளி மான் (Axis axis) போன்ற விலங்குகளின் எலும்புகளும் கிடைத்துள்ளன.

**காலம்**

இடைக்கற்காலத்தை, முதல் இடைக்கற்காலம் (Early Mesolithic), பின் இடைக்கற்காலம் (Late Mesolithic) என இரண்டாகப் பிரிக்கலாம். முன் இடைக்கற்கால இருப்பிடங்களில் பானை ஓடுகள் காணப்படவில்லை. ஆனால் பின் இடைக்கற்கால இருப்பிடங்களில் கருப்பு-சிவப்பு பானை ஓடுகள் காணப்படுகின்றன.

இந்தியாவின் பிற பகுதிகளில் கிடைத்துள்ள ஆதாரங்களைக் கொண்டு, முன் இடைக்கற்காலம் கி.மு 8000 க்கும் கி.மு 1000 க்கும் இடைப்பட்ட காலத்தையும், பின் இடைக்காலம் கி.மு 1000 க்கும் கி.பி 500 க்கும் இடைப்பட்ட காலத்தையும் சேர்ந்திருக்கலாம் என இப்போதைக்குக் கருதலாம். கார்பன்-14 காலக்கணிப்பு முறை மூலமே இடைக்கற்கால தடையங்களின் காலத்தை முடிவாக நிர்ணயிக்க இயலும்.

## வாழ்க்கை முறை

இடைக்கற்கால மக்கள், வேட்டையாடி உணவு சேகரிப்பதில் ஈடுபட்டிருந்ததாக, இது வரை கிடைத்த தடையங்களின் மூலம் தெரிகிறது. அவர்கள் பயிர்செய்தலையோ ஆடு, மாடு வளர்த்தலையோ, பானை வனைதலையோ அறிந்திருக்கவில்லை. அவர்கள் கற்கருவிகளைக் கொண்டு விலங்குகளை வேட்டையாடியும் தாவர வகை உணவுகளான கிழங்குகள், பழங்கள் போன்றவற்றைச் சேகரித்தும் வாழ்க்கை நடத்தி இருக்கின்றனர். பாறை இருக்கைகளே அவர்களின் இருப்பிடமாக விளங்கியிருக்கின்றன.

## இரும்புக்காலம்

குண்டாறு பள்ளத்தாக்கில் புதியகற்காலத்திற்கான தெளிவான ஆதாரங்கள் கிடைக்கவில்லை. தே. கல்லுப்பட்டியில், புதியகற்காலக் கருவிகளும் மற்றும் பானை வகைகளும், கருப்பு-சிவப்பு பானை ஓடுகள் கிடைக்கும் மண்ணடுக்களில் காணப்படுகின்றன. இது புதியகற்காலம் செம்புக்காலம், இரும்புக்காலத்துடன் ஊடுருவி இருந்ததைப் புலப்படுத்துகிறது.

இரும்புக்கால ஊரிருக்கைகள் 5 இடங்களிலும், ஈமச்சின்னங்கள் 21 இடங்களிலும், ஊரிருக்கை ஈமச்சின்னங்கள் 4 இடங்களிலும் காணப்படுகின்றன. (நிலப்படம் 2)

## ஈமச்சின்னங்கள்

குண்டாறு பள்ளத்தாக்கில், கல்வட்டங்களுடன் கூடிய தாழிகள், தாழி வடிவமுள்ள குழிகள், நெடுங்கற்கள் (Menhir) புறக்கற்பதுக்கை (Dolmen) போன்ற ஈமச்சின்ன வகைகள் காணப்படுகின்றன. இவற்றில் கல்வட்டங்களுடன் கூடிய தாழிகள் மிகவும் பரவலாகக் காணப்படுகின்றன. ஒரு சில நெடுங்கற்கள் தி. கிருஷ்ணாபுரத்திலும், ச. பாப்பிநாயக்கன் பட்டியிலும் காணப் படுகின்றன. புறக்கற்பதுக்கை ம. கல்லுப்பட்டியில் கிடைத்ததாக கே.வி. இராமன் (1970) கூறுகிறார்.

அண்மை ஆய்வின் போது தாழி வடிவமுள்ள குழிகள் காராம்பட்டி, அணைக்கரைப்பட்டி, இராமசாமிபுரம் போன்ற

இடங்களில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இக்குழிகள் கடினமான செம்மண் படிவுகள் அமைந்துள்ள மலை அடிவாரங்களில் காணப்படுகின்றன. இக்குழிகள் 1.5 முதல் 2 மீ ஆழமும், குறுகிய வாய் பகுதியுடனும் (50 செ.மீ விட்டம்), அகன்ற உடல் பகுதியுடனும் (1.5 முதல் 2 மீ. விட்டம்) காணப்படுகின்றன. இக்குழிகளின் அருகாமையில் காணப்படும் கருப்பு-சிவப்பு பானை ஓடுகள் மூலமும், சில குழிகள் கற்பலகைகள் கொண்டு மூடப்பட்டிருப்பதாலும், இவை ஈமக்குழிகளே என்ற முடிவுக்கு வரலாம். இக்குழிகளின் உள்ளடக்கத்தை அகழ்வாய்வு செய்த பின்பே அறிந்து கொள்ள முடியும்.

ஈமச்சின்னங்களிலிருந்து, கருப்பு-சிவப்பு, கருப்பு, சிவப்பு மற்றும் செஞ்சாந்துக் கலவை பூசப்பட்ட பானை வகைகள், இரும்புக் கருவிகள் மற்றும் கார்னீலியன் மணிகள் கண்டெடுக்கப் பட்டுள்ளன.

ச. பாப்பிநாயக்கன் பட்டியில் சேதமடைந்த ஒரு தாழியி லிருந்து ஒரு மனித எலும்புக்கூடு மீட்கப்பட்டது. இதனை ஆய்வு செய்த தக்காணக் கல்லூரியை சேர்ந்த மானிடவியல் ஆராய்ச்சி யாளர் S.R. வாலிம்பே, இந்த எலும்புக்கூட்டின் தலைப்பகுதியில் ஒரு வெட்டுக்காயத்தைக் கண்டறிந்துள்ளார். முப்பது முதல் முப்பத்தைந்து வயது மதிக்கத்தக்க இம்மனிதன் அந்த வெட்டுக் காயத்தினால் இறந்திருக்கலாம் என்றும் கருதுகிறார்.

**ஊரிருக்கைகள்**

ஊரிருக்கைகள் 2 முதல் 4 ஹெக்டேர் பரப்பளவை உடைய வனவாக விளங்குகின்றன. தே. கல்லுப்பட்டியிலும், சின்னக் கட்டளையிலும் காணப்படும் ஊரிருக்கைகளில் சாம்பல் படிவுகள் காணப்படுகின்றன. ச. பாப்பிநாயக்கன் பட்டியில் இரண்டு தமிழ் - பிராமி எழுத்துகள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகளும், 'ரூலடட்' தட்டின் விளிம்புப் பகுதியும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இந்த ஊரிருக்கைகளில் குறைந்த அளவில் கற்கருவி களும், சங்கு வளையல் துண்டுகளும், இரும்புக் கழிவுகள் மற்றும் கல் மணிகளும் காணப்படுகின்றன. மேலும் காட்டு விலங்குகள் மற்றும் மனிதனால் வளர்க்கப்பட்ட ஆடு, மாடு, கோழி, பன்றியின் எலும்புகளும் கிடைக்கின்றன.

## காலம்

தே. கல்லுப்பட்டியில் கிடைக்கும் தடயங்களைக் கொண்டு இரும்புக்காலத்தை முன் இரும்புக்காலம், பின் இரும்புகாலம் என இரண்டு பிரிவுகளாக பிரிக்கலாம். தே. கல்லுப்பட்டியில் முன் இரும்புக்கால மண்ணடுக்குகளில் வெள்ளை நிறத்தில் வண்ணம் தீட்டப்பட்ட கருப்பு-சிவப்பு மற்றும் கருப்பு வகை பானை ஓடுகள் மற்றும் புதியகற்கால பானை ஓடுகள் காணப்படுகின்றன. பின் இரும்புக்கால மண்ணடுக்குகளில் செஞ்சாந்து பூசப்பட்ட ஓடுகள் காணப்படுகின்றன. தமிழ்நாட்டின் மற்ற பகுதிகளில் கிடைக்கும் ஆதாரங்களின் உதவியுடன், முன்னிரும்புக்காலம் கி.மு. 300 க்கு முற்பட்ட காலத்தையும், பின்னிரும்புக்காலம் கி.மு. 300 முதல் கி.பி. 500 வரையிலான காலகட்டத்தையும் சேர்ந்திருக்கலாம் எனக்கருதலாம்.

## வாழ்க்கைமுறை

தொல்லியல் ஆதாரங்கள் மூலம் குண்டாறு பள்ளத்தாக்கைச் சேர்ந்த இரும்புக்கால மக்கள் விவசாயத்திலும், கால்நடை வளர்ப்பிலும் ஈடுபட்டு வந்திருக்கின்றனர் என்று அறிகிறோம். இரும்பின் பயனை அறிந்திருந்த இம்மக்கள் எளிமையான வீடுகளில் வசித்து வந்தனர். இக்காலத்தைச் சேர்ந்த ஈமச் சின்னங்கள், அவர்கள் மூதாதையர்களை வழிபடும் வழக்கத்தை கொண்டிருந்தனர் என்பதை புலப்படுத்துகிறது. கடலில் விளையும் சங்குகளால் செய்யப்பட்ட பொருட்கள், நெய்தல் நிலப் பகுதிகளுடன் இவர்கள் கொண்டிருந்த தொடர்பை விளக்குகிறது.

---

## அடிக்குறிப்புகள்

1. இந்த ஆராய்ச்சி நடத்துவதற்கு வழிகாட்டியாக இருந்த முனைவர் பத்தையா அவர்களுக்கும், ஆராய்ச்சியில் உதவி புரிந்த முனைவர். P.K. தாமஸ், முனைவர். S.R. வாலிம்பே ஆகியோர் களுக்கும், கள ஆய்வில் உதவி செய்த இரவி, இராஜன், நிருபேன், கண்ணன் மற்றும் இரவிசந்திரன் ஆகியோர்களுக்கும், இந்தக் கட்டுரையை எழுதுவதில் உதவி புரிந்த வெங்கடேசனுக்கும் எனது நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

2. இது போன்ற செல்ட் (Celt) எனப்படும் முக்கோண வடிவக் கோடாரிகள் கிடைக்கும் ஊரிருக்கைகள் அனைத்தும் புதியகற்காலத்தைச் சேர்ந்தவை என்று சில ஆராய்ச்சியாளர்கள் முடிவு செய்கின்றனர். இக்கோடாரிகள் இரும்புக்காலத்திலும் பயன்பாட்டில் இருந்து வந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

## மேற்கோள் நூல்கள்

வேதாசலம், வே. *1985*, 'மதுரை மாவட்டப் பகுதிகளில் நுண்கற்கால கண்டுபிடிப்புகள்'. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை நடத்திய கருத்தரங்கின் போது படிக்கப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரை.

Foote, R.B. 1883. 'On the Geology of Madura and Tinnevelly Districts', *Memoirs of the Geological Survey of India* 20 (Part II) :, 157-183.

Foote, R.B. 1916. *The Foote Collection of Prehistoric and Protohistoric Antiquities.: Notes on their Ages and Distribution.* Madras: Government Museum.

*Indian Archeology-A Review.*

Raman, K.V. 1970 'Distribution Pattern of Cultural Traits in the Pre and Protohistoric Times of Madurai Region'. *ஆராய்ச்சி 1:433-509.*

**நிலப்படம் 2 : இரும்புக்கால நிலைகள்**

1. மீனாட்சிபுரம்
2. திடியன்
3. பெருமாள்கோவில்பட்டி
4. கணவாய்பட்டி
5. காரம்பட்டி
6. பாறைப்பட்டி
7. கோடங்கிநாயக்கன்பட்டி
8. எ. கோபாலபுரம்
9. எ. பெருமாள்பட்டி
10. குன்னாரப்பட்டி
11. திருமாணிக்கம்
12. அதிகாரிப்பட்டி
13. சின்னகட்டளை
14. ஆண்டிப்பட்டி
15. ம. கல்லுப்பட்டி
16. ச. பாப்பிநாயக்கன்பட்டி
17. புலவனூரணி
18. தி. கிருஷ்ணாபுரம்
19. கூட்டக்கள்ளி
20. விட்டில்பட்டி
21. இராமசாமிபுரம்
22. அணைக்கரைப்பட்டி
23. வண்டாரி
24. அத்திப்பட்டி
25. வீராப்பட்டி
26. ம. கல்லுப்பட்டி
27. மதிப்பானூர்
28. விஜயநாகையாபுரம்
29. பேரையூர்
30. தே. கல்லுப்பட்டி
31. சீவரக்கோட்டை

## 37. பரிகுளம் பழைய கற்கருவிகளின் தொழிற் கூடம்

**து. துளசிராமன், ஆர்க்காடு.**

பரிகுளம் என்னும் சிற்றூர் பூண்டிக்குத் தென்மேற்கே சுமார் 10 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. இவ்வூருக்கு தென் திசையில் உள்ள செம்பூரான் சரளைக்கல் மேட்டை இவ்வூர் மக்கள் தோண்டிய போது, அதில் பழைய கற்காலக் கருவிகள் கிடைக்கின்றன என்று வந்த தகவலையடுத்து அவ்விடத்தைச் சுற்றியுள்ள பகுதியில் கள ஆய்வு செய்யப்பட்டது.

இங்குள்ள சரளைக்கல் மேடு இன்றைக்குச் சுமார் ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு முன் நிலவிய பெருமழைக் காலத்தில் (Pluvial Period) தோன்றியது. இம்மேடு, படிவுப்படுகை என்றழைக்கப்படுகிறது. பெருமழைக் காலங்களில் அலிகுழி மலைத் தொடரிலுள்ள கூழாங்கற்களுடன் கூடிய பாறைகள் கரைந்து கிழக்கு நோக்கியுள்ள சமவெளிகளில் கூழாங்கற்கள், செம்மண், களிமண், போன்ற படிவுகளாக படிந்து பல படிவுப் படுகைகள் ஏற்பட்டன. அவ்வாறான ஒரு படிவுப் படுகை தான் பரிகுளத்தில் உள்ளது.

இப் படிவுப் படுகை மொத்தம் நான்கு படிவடுக்குகள் கொண்டுள்ளது. முதலில் சிதைந்த சரளைக்கல் அடுக்கும் (detrital laterite deposit) அதன்கீழ் சிறு கூழாங்கற்களுடன் கூடிய சரளைக்கல் அடுக்கும் அதன் கீழ் பெருங்கற்களுடன் கூடிய சரளைக்கல் அடுக்கும். அதன் கீழே கெட்டியான களிமண்ணும் (shale)காணப்படுகிறது. இவற்றுள் இரண்டாவதாக கூறப்படும் கூழாங்கற்களுடன் கூடிய சரளைக்கல் அடுக்கில் தான் பழைய கற்காலக் கருவிகள் கண்டறியப்பட்டன. இவ்வடுக்கு சுமார் ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் இப்பகுதியில் நிலவிய பிலைஸ் டசீன் காலத்தில் ஏற்பட்டதாகும். எனவே, இப்படிவடுக்கில் கிடைக்கும் கருவிகள் ஏறத்தாழ மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டத்தாகக் கொள்ளலாம்.

**கற்கருவிகளும் அதன் வகைகளும்:**

இம்மேட்டில் வெளிப்பட்ட கற்கருவிகள் நீண்ட காலமாக செந்நிற சரளைக்கல் அடுக்கில் கலந்திருந்ததால், இவற்றின் மேற்புறம் செந்நிறமாகக் (Patination) காணப்படுகிறது.

கள ஆய்வின் போது சுமார் எழுபதிற்கு மேற்பட்ட கற்கருவிகள் சேகரிக்கப்பட்ன. அவை ஒன்பது வகையாகப் பிரிக்கப் பட்டன. இவற்றுள் சில கைக்கோடாரிகள் அபவிலியோ - அசுலியன் பண்பாட்டை சேர்ந்தவை மற்றவையாவும் அசுலியன் பண்பாட்டைச் சேர்ந்தவை.

**கருவிகளின் வகைகள்:**

1. கைக் கோடாரிகள் (Hand Axes)
2. இதய வடிவிலான கைக்கோடாரிகள் (Cordate Hand Axes)
3. முக்கோண வடிவ கைக்கோடாரிகள் (Triangular Hand Axes)
4. வெட்டுக் கத்திகள் (Cleavers)
5. சுரண்டிகள் (Scrappers)
6. சிறிய வெட்டுக் கருவிகள் (Small Choppers)
7. கூர்முனைக் கருவிகள் (Points)
8. வட்டுகள் (Ovates)
9. உளி

இப்பகுதியில் வாழ்ந்த பழைய கற்கால மக்கள் மேற்கூறிய கற்கருவிகளைக் கொண்டு கிழங்குகளுக்காக நிலத்தைத் தோண்டு வதற்கும், மரக்கம்புகளில் கட்டி ஈட்டி போல் எறிந்து விலங்கு களைக் கொல்வதற்கும், மரங்களை வெட்டுவதற்கும், விலங்கு களின் தோலை உரிப்பதற்கும், இறைச்சியை வெட்டு வதற்கும், கொழுப்புப் பகுதிகளைச் சுரண்டுவதற்கும், மரப்பட்டைகளை உரிப்பதற்கும், மரங்களை வெட்டுவதற்கும் எனப் பல்வேறு பணிகளுக்காகப் பயன் படுத்தியுள்ளனர்.

**குறிப்பு**

பரிகுளத்தில் நிறைய கற்கருவிகளும், சில்லுகளும் (Flakes) கிடைப்பதால், இவ்விடம் பழைய கற்காலத்தில் கற்கருவிகள் செய்யும் தொழிற் கூடமாக (factory site) விளங்கியிருக்க வேண்டும். இவ்விடத்திலும், இது போன்ற சரளைக்கல் மேடுகள் உள்ள பிற இடங்களிலும் அகழாய்வு மேற்கொண்டு அவற்றின் படிவடுக்குகளைத் தொழில் நுட்ப முறையில் வகைப்படுத்தி ஒப்பீட்டு ஆய்வு செய்தல் வேண்டும். இங்கு கற்கால மனிதர்கள் மற்றும் விலங்குகளின் கல்படிவங்கள் (Fossils) கிடைக்கக் கூடும்.

கற்கால மக்களின் சில பழக்க வழக்கங்கள் தற்போதும் இப்பகுதியில் உள்ள இருளர் போன்ற பழங்குடி மக்களால் பின்பற்றப்படுகிறது. இவர்கள் இயற்கையாகக் கிடைக்கும் கூர்மையான பக்கங்களையுடைய கூழாங்கற்களை மரக்கிளை களை வெட்டுவதற்கும், சிறுமுட் புதர்களை அகற்றுவதற்கும் பயன்படுத்துகின்றனர். கற்காலப் பண்டாட்டின் எச்சமாக இதனைக் கருதலாம்.

செங்கற்பட்டு எம்.ஜி.ஆர். மாவட்டத்தில் திருவள்ளூர், திருத்தணி, ஊத்துக் கோட்டை, பொன்னேரி, கும்மிடிபூண்டி, சைதாப்போட்டை, ஆகிய வட்டங்களிலும், வடஆர்க்காடு மாவட்டம் அரக்கோணம் வட்டத்திலும் இதுவரை மொத்தம் முப்பத்தைந்து இடங்களில் பழைய கற்காலக் கற்கருவிகள் கிடைப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது. தற்போது மேற்கொண்ட மேற்பரப்பு ஆய்வுகள் மூலம் இப்பகுதியில் மேலும் 32 ஊர்களில் (பரிகுளம் உள்பட) பழைய கற்காலக் கருவிகள் கிடைப்பதாக அறியப்பட்டுள்ளது.

## முந்தைய ஆய்வுகளில் கண்டறியப்பட்ட இடங்கள்:

| | | |
|---|---|---|
| 1. பல்லாவரம் | 2. பூண்டி | 3. நெய்வேலி |
| 4. குடியம் | 5. அத்திரம்பாக்கம் | 6. கிருஷ்ணாபுரம் |
| 7. வடமதுரை | 8. நம்பாக்கம் | 9. இரங்காபுரம் |
| 10. தேவேந்திரபாக்கம் | 11. கூண்பாளையம் | 12. மாவண்டுர் |
| 13. ஸ்ரீபெரும்புதூர் | 14. மஞ்சங்கரணை | 15. எருமை வெட்டிபாளையம் |
| 16. ஏரிக்குப்பம் | 17. மதிரிமேடு | 18. புதூர் |
| 19. கரடிப்புத்தூர் | 20. போந்தபாக்கம் | 21. மாதர்பாக்கம் |
| 22. ரோஷா நகரம் | 23. அமரம்பேடு | 24. திருமுல்லைவாயில் |
| 25. புத்தூர் | 26. பரந்தூர் | 27. வதியூர் |
| 28. நாய்க்கன்பாளையம் | 29. அரக்கோணம் | 30. புலியமங்கலம் |
| 31. திருமால்புரம் | 32. கிழ்வெண்பாக்கம் | 33. அம்ரீனாபுரம் |
| 34. தக்கோலம் | 35. மயிலாப்பூர் | |

## தற்போது மேற்கொண்ட கள ஆய்வுகள் மூலம் அறியப்பட்டுள்ள இடங்கள்:

| | | |
|---|---|---|
| 1. புல்லரம்பாக்கம் | 2. ஒதப்பை | 3. அரும்பாக்கம் |
| 4. தோமூர் | 5. சீதஞ்சேரி | 6. ஸ்ரீராமபுரம் |
| 7. திம்மபூபால | 8. ராஜபாளையம் | 9. கொல்லபுரம்பாளையம் |
| 10. கம்மவாரிபாளையம் | 11. நாராயணபுரம் | 12. அம்மன் |
| 13. நெல்வாய் | 14. அலிகுழிபாக்கம் | 15. ஊத்துக்கோட்டை |
| 16. பிளேஸ்பாளையம் | 17. இலவம்கண்டிகை | 18. கலவை |
| 19. கச்சூர் | 20. நயப்பாக்கம் | 21. குஞ்ஞரபாளையம் |
| 22. மேட்டுப்பாளையம் | 23. பாதிரிவேடு | 24. தரணிவராகபுரம் |
| 25. செங்குன்றம் | 26. கருக்கம்பாக்கம் | 27. வேளகாபுரம் |
| 28. கட்டுப்புடி | 29. கல்மேடு | 30. மாளத்தூர் |
| 31. பரிகுளம். | 32. வெள்ளத்துக்கோட்டை | |

# 38. சுறா வசிய மந்திரவாதிகள்

ந. அதியமான், தஞ்சாவூர்.

சங்ககாலத்திற்கு முன்பிருந்து இந்நூற்றாண்டு வரை மன்னார் வளைகுடாவில் தமிழக, இலங்கை கடற் பகுதிகளில் முத்து மற்றும் சங்கு குளிக்கும் பணி தொடர்ந்து நடைபெற்றுவருவதை சங்க இலக்கியங்கள், தமிழக கடற்கரையோர பண்டைய நகரப் பகுதிகளில் நடைபெற்ற அகழாய்வுகள், இடைக்கால பயணியர் குறிப்புகள், பின்னர் 16 ஆம் நூற்றாண்டு தொடங்கி கிடைக்கின்ற போர்த்துக்கீசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்களது ஆவணங்கள் ஆகியவற்றின் மூலம் அறியலாம். முத்துக் குளிக்கும் நேரங்களில் கடல்வாழ் விலங்குகளால், குறிப்பாக சுறாமீன்களால், முத்துக் குளிப்போருக்கு ஆபத்து நேராவண்ணம் சுறா வசிய மந்திரவாதிகள் (கடல் கட்டுவோர்) எனப்படுவோர் சில மந்திரங்களை உச்சரித்து மீன்களின் வாயைக் கட்டிவிடுவதாக சான்றுகள் உள்ளன. தமிழகக் கடற்கரையோரங்களில் கள ஆய்வு செய்தபோது இவ்வழக்கம் தற்போழுது நடைமுறையில் இல்லை என அறியப்பட்டுள்ளது. அக்காலங்களில் வசிய மந்திரங்களால் சுறாமீன்கள் கட்டுப்படுத்தப்பட்டனவா அல்லது வெறும் நம்பிக்கையா என்பதை இக்கட்டுரை ஆய்வு செய்கிறது.

**முத்துக் குளித்தல்**

முத்துக் குளிக்கும் முறையை இடைக்கால சீனப்பயணி சௌஜுகுவா (Chau Jukua, *1225* A.D. ) விரிவாக விளக்குகிறார்(Hirth and Rockhill 1966:229-239). பின்னர் வந்த மார்க்கோபோலோ (Marcopolo, 1260-1300 A.D.), சீனப்பயணி வாங்தயுவான் (Wang TaYuan) ஆகியோரும் முத்துக் குளித்தலை விரிவாகக் கூறியுள்ளனர் (Caldwell 1982:39 and Rockhill 1915:385-387). பதினாறாம் நூற்றாண்டில் வருகை புரிந்த வெனீசியப்பயணி சீசர் பிரடெரிக் (Caesar Frederick) என்பாரும், இலங்கை வரலாற்றை எழுதிய ரிபைரோ (Ribeiro 1685 A.D.) என்பாரும் எழுதிய குறிப்புகள் முத்துக் குளித்தல் அக்காலங்களில் எங்ஙனம் நடைபெற்றது என விரிவாக எடுத்துரைக்கின்றன (Pieris 1909:163-167 and Hornell 1922:30-32).

இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த லெபக் (Lebeck 1797 A.D), ஸ்டுவர்ட் (Steuart 1843:1-105), தர்ஸ்டன் (Thurstun 1894 A.D), ஹார்னல் (Hornell 1922:1-190) ஆகியோரது குறிப்புக்கள் மன்னார் வளைகுடாவில் முத்து மற்றும் சங்கு குளித்தலைப் பற்றி விரிவாக எடுத்துரைக்கின்றன. மேற்கூறிய சான்றுகளில் சில தவறுகள் இருப்பினும் சங்க காலத்தில் இருந்து முத்துக் குளித்தல் தொழில் எவ்வாறு நடைபெற்றது என்பதைக் கீழ்வருமாறு தொகுக்கலாம்.

இத்தொழில் பெரும்பாலும் மார்ச்சு, ஏப்ரல், மே மாதங்களில் நடைபெறும். முத்துக்குளிப்போர் தங்கள் பாய்மரப் படகுகளில் நடு இரவிலோ இல்லது அதிகாலையிலோ முத்துச்சிப்பி கிடைக்கும் கடற்பகுதி நோக்கிச் செல்வர். இப்படகுகளில் 10 நீர்மூழ்குபவர் உள்பட சுமார் 20 பேர் இருப்பார். படகுகள் முத்துச்சிப்பி கிடைக்கும் இடத்திற்கு பொதுவாக காலை நேரங்ளில் சென்றடையும். முத்துக்குளிக்கும் இக்கடற்பகுதிகளில் 6 லிருந்து 12 ஆள் ஆழம் இருக்கும். படகு நங்கூரமிட்டு நிறுத்தப்பட்டபின் சுமார் 20 பவுண்டு எடையுள்ள 5 கற்கள், ஒரு பக்கத்தில் மூன்றும் மறுபக்கத்தில் இரண்டுமாக தொங்கவிடப்படும். முதலில் 5 நீர்மூழ்குநர்கள் கடலில் குதித்து கல் கட்டப்பட்டிருக்கும் கயிற்றை கால் விரல்களால் பற்றிக்கொள்வர். மற்றொரு கயிறு, மூழ்குநர் இடுப்பில் சுற்றப்பட்டு ஒரு முனை படகில் உள்ளவரிடம் இருக்கும். வலை அல்லது கூடை ஒன்று நீரமூழ்குநர் கழுத்திலோ அல்லது இடுப்பிலோ கயிற்றினால் இணைக்கப்பட்டிருக்கும்.

நீர்மூழ்குநர் நன்றாக மூச்சை இழுத்து கடலில் மூழ்கும் பொழுது கல் கட்டப்பட்டுள்ள கயிறு பிரித்து விடப்படும். கல்லின் எடையினால் அவர் வேகமாக தரைக்குச் செல்வார். கல்கட்டப்பட்ட கயிற்றில் வைத்த காலை விடுவித்து தரையில் கிடைக்கும் முத்துச்சிப்பிகளையோ, சங்குகளையோ வலையில் சேகரிப்பார். தாமதமின்றி தன் இடுப்பில் கட்டப்பட்டிருக்கும் கயிற்றை இழுத்து சமிக்ஞை தெரிவிப்பார். உடனே படகில் உள்ளவர்கள் அவரையும் சேகரித்த சிப்பிகளையும் மேலே இழுப்பர். கடல் மட்டத்திற்கு வந்தபின் வலையில் உள்ள முத்துச் சிப்பிகள் படகில் சேர்க்கப்படும். ஒருமுறை தரைக்குச் சென்று இப்பணியைச் செய்துகடல் மட்டத்திற்கு வர சுமார் ஒரு நிமிடம்

ஆகும். சில நிமிட ஓய்விற்குப் பின் மறுபடியும் முத்துக் குளிப்போர் தம் பணியைத் தொடர்வர். சற்றுநேரம் கழித்து படகில் காத்திருக்கும் மற்ற ஐந்து நீர்மூழ்குநர்கள் இப்பணியைத் தொடர முன்பு பணிபுரிந்தவர்கள் படகில் ஓய்வெடுப்பர். இப்பணி பெரும்பாலும் மதிய வேளை வரை நடைபெற்று, படகுகள் மாலை வேளையில் கரை வந்து சேரும்.

### கடல் கட்டுதல்

முத்துக் குளிக்கும் நேரங்களில் சுறாமீன் மற்றும் பிற அச்சம் மிகுந்த உயிரினங்களால் ஆபத்து ஏற்பட வாய்ப்புகள் உண்டு. இவ்வாபத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள மீனவர் கற்றிருந்தனர் என்பதைச் சங்க இலக்கியமான அகநானூறு குறிப்பிடுகிறது.

இலங்கு இரும்பரப்பின் எறி சுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான் திமிற் பரதவர்

அகநானூறு (350:10-11)

பெரிய கடற்பரப்பில் எறியும் சுறாமீனை ஒதுக்கி வலம்புரி சங்கினை மூழ்கி எடுத்த பெரிய படகினை உடைய பரதவர் எனும் பொருளாகும் (சிவசுப்ரமணியன்: *106-107*).

முத்துக் குளிக்கும் நேரங்களில் சுறாமீன்கள் தாக்கா வண்ணம் 'ஆப்ரியமென்' (பிராமணர்?) எனும் கடல் கட்டுவார் தமது வசிய மந்திரத்தால் பகல் பொழுதில் அவைகளின் வாயைக் கட்டிவிடுவர் எனவும் இரவு நேரங்களில் அவைகளின் கட்டு அவிழ்த்து விடப் படும் எனவும் மார்க்கோபோலோ குறிப்பிடுகிறார். இச்செயலுக் காக முத்துக் குளிப்போர் தனது சேகரிப்பில் ஒரு பங்கை கடல் கட்டு வார்களுக்கு இனாமாக அளிப்பதாகவும் கூறியுள்ளார் (Caldwell 1982:40). பின்னர் வந்த வாங்-த-யுவான், இத்தொழில் ஆரம்பிப் பதற்கு முன்னர் அம்மக்களின் தலைவன்; ஒரு மனிதன் மற்றும் சில மிருகங்களை பலி கொடுப்பதாகக் குறிப்பிடினும் கடல் கட்டு பவர்களைப் பற்றி எவ்வித செய்தியும் குறிப்பிட வில்லை. பின்னர் வந்த பயணியர் குறிப்புக்களிலோ, போர்த்துக் கீசிய, டச்சு ஆவணங் களிலோ கடல் கட்டுபவர்களைப் பற்றி எவ்வித செய்தியும்

இல்லை. ஆனால் ஆங்கிலேயரது ஆவணங்களில் இது பற்றி நிறைய குறிப்புக்கள் காணப்படுகின்றன. 1797இல் முத்துக் குளிப்பின் கண்காணிப்பாளராய் இருந்த லெபக் என்பார், இவர்களை சுறா மந்திரவாதி (Shark Conjurer) எனக் குறிப்பிடுகிறார். இவர்களின் உதவியின்றி திறமையாக முத்துக் குளிப்பவரும் கடலில் இறங்க மறுத்ததையும், இலங்கையில் இப்பணிபுரிய 13 பேர் இருந்தனரெனவும் அவர்களில் இருவரை அரசாங்கம் கூலி கொடுத்து பணியில் அமர்த்தியது எனவும் குறிப்பிடுகிறார்.

இக்கடல் கட்டுவார் கடற்கரையில் நின்று காலை முதல் உணவின்றி (தண்ணீர் தவிர), தூக்கமின்றி படகுகள் கரை சேரும்வரை மனப்பாடம் செய்யப்பட்ட மந்திரத்தை உரக்க உச்சரிப்பார் எனவும் அம்மந்திரத்தின் பொருள் அவருக்கே தெரியாமல் இருக்கலாம் எனவும் லெபக் குறிப்பிடுகிறார். சில சமயங்களில் இவர்கள் முத்துக் குளிப்போரின் படகுகளில் செல்வர் எனவும் தெரிகிறது. சில ஆண்டுகளுக்கு முன் முத்துக் குளிப்பவர் ஒருவரின் காலை சுறாமீன் கடித்ததாகக் கிடைத்த செய்தியின் அடிப்படையில் கடல் கட்டுவோரின் தலைவனை விசாரித்ததற்கு, சூன்ய கிழவி ஒன்று மாற்று வசியம் மூலம் இச்செயலைச் செய்தது தனக்கு தாமதமாகத் தெரிந்ததெனவும், தற்போழுது அவ்வசியத்தை முடக்கி வெற்றி கண்டுவிட்டதாகவும், அதன்பின் முத்துக்குளிப் போரின் மத்தியில் சுறாமீன்கள் தென்படினும் அவை கடிக்கவில்லையெனவும் பதிலிறுத்தாராம்.

19ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலக் கட்டங்களில் கண்காணிப்பாளராய் இருந்த ஸ்டுவர்ட், சுறாமீன்களை வசியப் படுத்துவோருக்கு நாள் ஒன்றுக்கு 9 பென்சு (Pence) கூலியாக ஆங்கிலேய அரசாங்கம் கொடுத்ததாகவும், சில காலம் கழித்து முத்துக் குளிப்போருக்கு தலைக்கு ஒரு சிப்பியும், படகு ஒன்றிற்கு பத்துச் சிப்பிகளும் தினமும் இனாமாகப் பெற்றனர் என்பதையும் குறிப்பிடுகிறார். மேலும் இச்செயலை மூடநம்பிக்கை என ஆங்கிலேயர்கள் முத்துக்குளிப்போரிடம் வலியுறுத்தியும் இந்து, இசுலாம், கிறித்துவ மதத்தைச் சார்ந்த எவரும் கடல் கட்டுவாரின் துணையின்றி பணிபுரிய மறுத்தனர். சிலர் தங்களது புரோகிதர் எழுதிக் கொடுத்த மந்திரங்களை எண்ணெய்த் துணியில் சுற்றி

தன்னுடன் நீர்மூழ்கும் போது எடுத்துச் சென்றனர் எனவும் குறிப்பிடுகிறார்.

ஒரு முறை கடல்கட்டுவார் ஒருவரை அழைத்து அவரது மந்திர சக்தியைப் பயன்படுத்தி படகின் அருகில் சுறாமீன்களை வர வழைக்கக் கோரியதாகவும் அதற்கு அவர் நாசூக்காக 'முன்னோர் வழியாக வந்த இம்மந்திரத்தை விளையாட்டிற்காக பயன்படுத்தக் கூடாது' என்று பதிலளித்தாராம். சில காலத்திற்குப் பின்பு சுறாமீன் ஒன்று முத்துக் குளிக்கும் துறையில் தென்பட்டதாக அறிந்து, கடல் கட்டுவார் அழைக்கப்பட்டு, விளக்கம் கோரியபோது 'தாங்கள் நீண்ட நாட்களாக என்னிடம் சுறாமீன்களை வரவழைக்கக் கேட்டிருந்தீர்கள். துரையவர்களை திருப்திபடுத்தவே அச்சுறாமீனை வரவழைத்தேன்' என பதிலளித்தாராம்.

இதன் பின்னர் இத்தொழிலின் கண்காணிப்பாளர்களாய் இருந்த தர்ஸ்டன், டெனன்ட் ஆகியோரும் இக் கடல் கட்டுவார்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலங்களில் பணிபுரிந்த ஹார்னல் என்பார் கீழக்கரையில் வசித்த அப்துல் ஜலாலுதீன் மரக்காயர் என்பவர் சுறாமீனை வசியப்படுத்துபவர் எனக் குறிப்பிடுகிறார்.

முத்துச்சிப்பி அதிக அளவில் மன்னார் வளைகுடாவில் கிட்டாத காரணத்தினால் 1961 ஆம் ஆண்டிற்குப் பிறகு முத்துக் குளித்தல் இந்தியாவில் நடைபெறவில்லை (Pragasam and Dev 1991:79). எனினும் சங்கு குளித்தல் நடைபெற்று வருகிறது.

எனவே இது குறித்து கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டதில் கடல் கட்டுவார் அல்லது சுறாமீனை வசியப்படுத்துபவர் என்போர் தற்போழுது இல்லை எனத் தெரிய வருகிறது. மேலும் அவர்கள் பணிக்காக கடலில் இறங்கும் பொழுது அவ்வச் சமயத்தைச் சார்ந்த பிரார்த்தனையை ஓரிரு நிமிடங்கள் செய்கின்றனர். இத்தொழில் புரியும் போது சுறாமீன்கள் தென்பட்டால் அனைவருக்கும் உடனடியாகத் தெரிவிக்கப்பட்டு கரையை அடைவர். கோவிலில் சிறப்பு வழிபாடு செய்த பின்னரே மறுபடியும் கடலுக்குச் செல்வர்.

இக் கடல் கட்டுவோர் எம்மதத்தைச் சர்ந்தவர் என்றோ எந்தக் குலத்தைச் சேர்ந்தவர் என்றோ கிடைக்கும் சான்றுகளைக் கொண்டு உறுதியாகக் கூற இயலவில்லை. மார்க்கோ போலோ குறிப்பிட்ட கடல் கட்டுவார் பிராமண இனத்தைச் சேர்ந்தவரா என்பதை அறிய முடியவில்லை. போர்த்துக்கீசியர் காலங்களில் இந்துக்களாய் இருந்த பல பரதவர்கள் கிறித்துவ மதத்திற்கு மாறினார்கள். ஆங்கிலேயரது ஆவணங்களில் இக்கடல் கட்டுவார் ரோமன் கத்தோலிக்கர்கள் எனக் குறிப்பிடுகின்றனர். ஹார்னல் கீழக்கரையைச் சார்ந்த இசுலாமிய கடல் கட்டுபவரைக் குறிப்பிடுகிறார். எனவே இத்தொழிலில் அனைத்து மதத்தைச் சார்ந்தவர்களும் இருந்துள்ளனர் எனலாம். மேலும் இவர்களது வசிய மந்திரத்தைப் பற்றிய சான்றுகளும் கிட்டவில்லை.

**கடல் கட்டுதல் வெறும் நம்பிக்கையே**

முத்துக் குளித்தல் நடைபெறும் நாட்களில் எவ்வொரு சுறாமீன் தாக்குதலும் நடைபெறவில்லை என தர்ஸ்டன், டெனன்ட் வியந்து குறிப்படுவது சிந்திக்கத் தக்கது. ஆயினும் இடைக்கால பயணியர்களான சௌஜுகுவா மற்றும் வாங்தயுவான் ஆகியோர் இவ்விபத்துக்களை குறிப்பிடுகின்றனர். மேலும் லெபக், ஸ்டூவர்ட் ஆகியோர் சுறாமீன்களால் ஆபத்து ஏற்பட்டதைக் குறிக்கின்றனர்.

முத்துக் குளிக்கும் முறைகளையும் சுறாமீன்கள் குணங்களையும் பொருத்திப் பார்த்தால் அவைகளின் தாக்குதல் உண்மையிலேயே கடல் கட்டுவார்களால் கட்டுப்படுத்தப் பட்டனவா அல்லது இயற்கையிலேயே அமைந்து இத்தொழிலை அவர்கள் தங்களது லாபத்திற்காக பயன்படுத்திக் கொண்டனரா என்பதை அறிய இயலும்.

சுறாமீன்கள் தாக்குதல் பெரும்பாலும் மாலை 2 முதல் 6 மணிக்குள்ளேயே நடை பெறுகின்றன (Rajkumar 1996:II). முத்து மற்றும் சங்குக் குளித்தல் பெரும்பாலும் மதியவேளையில் முடிவுபெற்றுவிடும்.

சுறாமீன்கள் ஒளிமிகுந்த, அசைகின்ற பொருட்களை இரை யெனக் கருதி தாக்குகின்றன. முத்துக் குளிப்போர் பெரும்பாலும் கறுப்பு நிறத்தவர் (Ommanney 1977:77-99).

சுறாமீன்கள் இரையைத் தாக்கும் முன் சிலநிமிடங்கள் சுற்றிவரும், ஆனால் முத்துக் குளிப்பவர் கடல் மட்டத்திலிருந்து கீழே சென்று பணியை முடித்துவர ஏறக்குறைய ஒரு நிமிடமே எடுத்துக் கொள்வர் (Ommannery 1977:77-99).

மேற்கூறிய காரணங்கள் மட்டுமின்றி அதிக எண்ணிக்கையுள்ள படகுகளில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட நீர்மூழ்குநர்கள் முத்துக் குளிக்கும் போது கடலில் ஏற்படும் இரைச்சலால் அவை தொலைவிற்கு சென்றுவிடக்கூடும்.

மேலும் இன்று உலகில் காணப்படும் ஏறத்தாழ முந் நூற்றுக்கும் மேற்பட்ட சுறாமீன்களில் 40 இனங்களே மனிதர்களைத் தாக்குகின்றன என்று கண்டறியப்பட்டுள்ளது.

இவையன்றி மாலை வேளையில் தொடர்ந்து முத்துக் குளித்தல் நடைபெற்று இருந்தாலோ, முத்துக் குளிப்போருக்கு காயம் ஏற்பட்டு ரத்தம் கசிந்திருந்தாலோ சுறாமீன்களால் தாக்கப்பட்டிருப்பதற்கு வாய்ப்புண்டு. இதைச் சூன்யக்கிழவி வந்தது எனவும் அல்லது முத்துக் குளிப்போர் ஏதேனும் பாவம் செய்தவர் எனவும் அக்காலங்களில் அவர்கள் காரணம் காட்டியிருக்கலாம். மேற்சுட்டப்பட்ட சான்றுகளிலிருந்து கடல் கட்டுதல் வெறும் மூடநம்பிக்கையாக இருந்தது என்றும் முத்துக் குளித்தல் தொழிலின் முறைகள், அது நடைபெற்ற நேரம் முதலியன சுறாமீன்கள் தாக்காவண்ணம் அமைந்ததை கடல் கட்டுவார் தமக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொண்டனர் எனக் கூறலாம். ஆயினும் இம்மூட நம்பிக்கையே முத்துக் குளிப்போர்க்கு மனவலிமையை அளித்து இத்தொழில்புரிய உதவியதை மறுப்பதற்கில்லை.

## துணை நூற்பட்டியல்

சிவசுப்ரமணியன், வெ. *அகநானூறு மூலமும் உரையும்*, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை.

பரிமளா, ச. 1991, *மீன்கள் அன்றும் இன்றும்*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

Arunachalam, S. 1952, *The History of the pearl fishery of the Tamil coast*, Annamalai University Historical Series no. 10, Annamalai Nagar.

Caldwell, B.R. 1982, *A History of Tinnevelly*, Asian Educational Services, New Delhi.

Hirth, F and Rockhill, W.W. 1966 Chau Ju-Kua, Paragon Book Reprint Corp. New York.

Hornell, J. 1922, "The Indian Pearl Fishery of Gulf of Mannar and Palk Bay, *Madras Fisheries Bulletin*, Voi XVI, Madras.

Ommanney, F.D. 1977, *The Fishes,* Time Life Books, Hong Kong.

Pieris, P.E. 1909, *Ribeiro's History of Ceilao,* The Colombo Apothecaries Co.Ltd. Printers, colombo.

Pragasam, B. and Dev, D.S. 1991, "Studies on the Pearl Oyster Population in Pearl Oyster Grounds off Tuticorin in the Gulf of Mannar, *CMFRI Bulletin,* No. 42, pp. 79-83.

Raj kumar, R. 1996 "The Formidable predator, *The Hindu* (Daily), Madurai, 24 Aug. 1996.

Rockhill, W.W. 1915 *Toung Pao:* Notes on the Relations and Trade of China with Eastern Archipelago and the Coasts of the Indian Ocean during the Fourteenth Century, Part II, LIBRAIRE ET IMPRIMERIE, CI-DEVANT, E.J. BRILL LEIDE.

Steuart, J. 1843, *Account of The Pearl Fisheries of Ceylon*, Cotta, Church Mission Press.

# 39. ஆனூர் மும்மூர்த்தி சிற்பத்தொடர்

ப.தெ. பாலாஜி, சென்னை.

ஆனூர் என்னும் ஊர் செங்கை-அண்ணா மாவட்டத்தில், செங்கல்பட்டு தாலுக்காவில், பொன்விளைந்த களத்தூர் என்னும் ஊருக்கு அருகில் அமைந்துள்ளது. இங்கு அட்டபுரீசுவரர் என்னும் சிவன் கோயிலும், வேதநாராயண பெருமாள் என்னும் பெருமாள் கோயிலும் அமைந்துள்ளன. இங்கு காணப்படும் பல்லவர் மற்றும் சோழர் காலக் கல்வெட்டுகளிலிருந்து[1] இவ்வூர் பழங்காலத்தில் ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில், களத்தூர் கோட்டத்தில், களத்தூர் நாட்டில் இருந்தது என்பதை அறியலாம். பல்லவர்கள் காலத்தில் சத்தியராய குலகால சதுர்வேதி மங்கலம் என்றும், ஆனியூர் என்றும் அழைக்கப்பட்டு, ஒரு பிரம்மதேயமாக இருந்துள்ளதை, இங்கு காணப்படும் கி.பி.893 ஆண்டை சார்ந்த கல்வெட்டு உறுதிப்படுத்துகிறது.

இவ்வூரில் கள ஆய்வு மேற்கொண்டபோது சிவன்கோயிலில் நான்கு அரிய சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அவை (1) சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மும்மூர்த்திகளை கொண்ட சிற்ப தொடர், (2) பிள்ளையார், (3) சண்டேச்சுவரர் (4) ஜேஷ்டாதேவி. இவையனைத்தும் புடைப்புச் சிற்பங்களாக இக்கோயிலின் பிற்காலத்தில் கட்டப்பட்ட மதில் சுவரில் வைத்துக் கட்டப்பட்டுள்ளன. இச்சிற்பங்களில் மும்மூர்த்தி சிற்பத் தொடர் முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது.

இச்சிற்பத் தொடர் முறையே 15 செ.மீ. நீளமும், 10 செ.மீ. அகலமும் கொண்டதாக மாவுக் கல்லினால் (Soap Stone) ஆன பலகைக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. இதில் விஷ்ணு - நரசிம் மராக, பிரும்மா, உயர்ந்த மேடையில் சிவலிங்கம், அடுத்து தேவி யோடு முருகர், இதற்கடுத்து காளையின் மீது உமாமகேசுவரானாக அமர்ந்த கோலத்தில் சிவன், அடுத்து ஸ்ரீவத்சமாக இலக்குமி, எருமை உருவில் உள்ள மகிஷன் என்னும் அரக்கனை நீண்டவாள் கொண்டு கொல்லும் துர்க்கை, அடுத்து ஓர் உயர்ந்த மேடையில் அமர்ந்த கோலத்தில் பிள்ளையார் ஆகியவை செதுக்கப்

பட்டுள்ளன. இவை அனைத்தும் நேர்த்தியாகச் செதுக்கப்பட்டிருந்தாலும், இச்சிற்பங்களில் உயிரோட்டம் இருப்பதாகத் தெரியவில்லை. தற்காலத்தில் செய்யப்படும் கொண்டபள்ளி பொம்மைகளைப் போல் காட்சி அளிக்கின்றது.

இவ்வகை சிற்பத் தொடர்கள் ஆந்திரதேசத்தில் கடப்பா மற்றும் கர்னூல் மாவட்டங்களிலும்,[3] தமிழ்நாட்டில் தொண்டை மண்டலத்தில் முன்னூர் (தென்ஆற்காடு), பிரம்மதேசம் (வடஆற்காடு), உக்கல் (வடஆற்காடு) மற்றும் செங்கல்பட்டு மாவட்டத்தில் தென்னேரி, மதுராந்தகம், உத்திரமேரூர். மணிமங்கலம் ஆகிய ஊர்களிலும் காணப்படுகின்றன[4].

இதுவரை தமிழ்நாட்டில் கிடைத்த இவ்வகை சிற்பத் தொடர்களில் சிவன் (லிங்கமாக), விஷ்ணு (நரசிம்மராக), பிரம்மா, முருகன் தன் தேவியோடு, உமாமகேசுவரர், லட்சுமி (ஸ்ரீவத்சமாக), துர்க்கை, பிள்ளையார் ஆகிய உருவங்களே முழுமையாக காணப்படுகின்றன. ஆனால் இத் தெய்வங்களின் உருவங்களை வரிசைக்கிரமப்படுத்தி செதுக்குவதில் மட்டுமே இடத்துக்கு இடம் மாறுபடுகிறது.

மணிமங்கலம்[5] (தர்மேசுவரர் கோயில்): இங்குள்ள சிற்பத் தொடரில் உமா மகேசுவரர், இடையே சிவலிங்கம், அடுத்து முருகர், நரசிம்மர், ஸ்ரீவத்சம், மேல் நோக்கிய இருகைகள், அடுத்து இரண்டு பக்கமும் மலர் ஏந்திய பெண்களால் சூழப்பட்ட இரு கைகூப்பிய இரு உருவங்கள் காணப்படுகின்றன.

முன்னூர்[6] (ஆடவல்லிச்சுரர் கோயில்): இங்குள்ள இரு சிற்பத் தொடர்களில் ஒன்றில் பிரம்மா, மேடை மீது சிவலிங்கம், உமாதேவி, முருகர், நரசிம்மர் ஆகிய உருவங்களும், மற்றொன்றில் நின்றகோலத்தில் ஒரு பெண்ணும், இரண்டு ஆண்களும் அடுத்து மாட்டுத் தலையை கொண்ட மாந்தனும், அமர்ந்த ஜேஷ்டாதேவியும் இறுதியாக நின்ற கோலத்தில் மாந்தியும் காணப்படுகின்றன.

மதுராந்தகம்:[7] இங்குள்ள ஒரு சிவாலயத்தில் 30 செ.மீ 20 செ.மீ அளவில் இரண்டு சிற்ப தொடர்கள், சண்டேச்சுவரர் சிற்றாலயத்தில் உள்ளது. இதில் சிவலிங்கம், உமாதேவி,

இருவருக்கும் இடையே குழவி வடிவில் முருகர், உமையின் இடப்புறம் பிள்ளையார், தொடர்ந்து அடுத்த சிற்பத் தொடரில் பிரம்மா, விஷ்ணு, விஷ்ணுவின் வலது தோள்மீது ஸ்ரீவத்சம், அர்த்தநாரீசுவரர், இறுதியாக மாந்தன், மாந்தியோடு கூடிய ஜேஷ்டாதேவி காணப்படுகின்றன. இது கி.பி.7-8ஆம் நூற்றாண்டை சார்ந்ததாகும்.

ஆக மேற்கூறியவைகளைக் கொண்டு பார்க்கும் போது, தமிழ்நாட்டில் கிடைக்கும் இவ்வகை சிற்பத் தொடர்களில் சிலவற்றில் உமாமகேசுவரரோடு சிவலிங்கமும், மேலும் சிலவற்றில் சிவன் உருவம் இல்லாமல் சிவலிங்கம் மட்டும் இடம்பெற்று, உமை சிவலிங்கத்திற்கு இடப்புறம் அமர்ந்தும் சித்தரிக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் வரிசையின் தொடக்கத்தில் பிரம்மாவும், முருகர்-உமாதேவிக்கு அடுத்தும், விஷ்ணு - நரசிம்மராகவும் சித்தரிக்கப்பட்டுள்ளது. மதுராந்தகம் சிற்பத் தொடரில் அர்த்தநாரீசுவரர் உருவில் உமாமகேசுவரர் சித்தரிக்கப் பட்டுள்ளார். அதே போல் சில தொடர்களில் துர்கைக்கு மாறாக ஜேஷ்டாதேவி சித்தரிக்கப்பட்டுள்ளது. இது இத்தேவிக்கு அக்காலத்தில் அளிக்கப் பட்ட முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. இருந்தாலும், இத் தேவியின் வழிபாடு சுமார் கி.பி 11ம் நூற்றாண்டிற்கு பிறகு நடைமுறையில் இல்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும்[8].

சுருங்கக் கூறின் சிவலிங்கம், விஷ்ணு, பிரம்மா ஆகிய உருவங்கள் அனைத்துச் சிறபத் தொடர்களிலும் காணப்படுகிறது. இது மும்மூர்த்திகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதைப் போல் அமைந்துள்ளது.

ஆனால் ஆனூரில் காணப்படும் மும்மூர்த்தியின் சிற்பத் தொடர், தமிழகத்தில் காணப்படும் பிற சிற்பத் தொடர்களின் சிற்ப அமைதியிலிருந்து வேறுபட்டு ஆந்திர தேசத்திலுள்ள பெத்த முடியம்[9] என்னும் இடத்தில் காணப்படும் இவ்வகை சிற்பத் தொடரைப் போன்று ஒருமித்து காட்சியளிக்கின்றது. ஏற்கனவே கூறியவாறு ஆந்திரதேசத்தின் கடலோரப் பகுதிகளில் இவ்வகைச் சிற்பங்கள் கிடைத்தாலும், பெத்தமுடியம் என்னும் ஊரில் இவை அதிகமாகக் காணப்படுகின்றன. இவற்றில் சில சென்னை

அருங்காட்சியகத்தில் உள்ளன. இவைகளில் பிரம்மா தாமரை மீது நின்று அல்லது அமர்ந்து, விஷ்ணு மனித உருவிலோ அல்லது சிம்மமுகம் கொண்டோ சிவன், லிங்கமாகவும் மற்றும் உமாமகேசுவரராக அமர்ந்த நிலையிலும் முருகர் தேவசேனையோடு நின்ற கோலத்திலும் லட்சுமி மனித உருவிலோ அல்லது ஸ்ரீவத்சமாகவோ, துர்கை மகிஷனை கொல்வது போன்றும் இறுதியாக பிள்ளையார் மேடை மீது அமர்ந்த நிலையிலும் காணப்படுகின்றது. பிள்ளையாருக்கு இடப்பக்கம் மேல் நோக்கிய இரண்டு கைகள் காணப்படுகின்றன.

ஆக ஆனூரில் புதியதாகக் கண்டுபிடிக்கப்பட்ட இச்சிற்பதொடர், பெத்தமுடியம் என்ற இடத்தில் காணப்படும் சிற்பத்தொடர்களைப் போன்றே காணப்படுகிறது. இதில் ஏற்கெனவே கூறியவாறு முதலில் பிரம்மாவும், நரசிம்மரும், மேடையின் மீது சிவலிங்கமும், முருகரும், தேவசேனையும் காளையின் மீது அமர்ந்த நிலையில் உமாமகேசுவரரும், மேடையின் மீது லட்சுமி ஸ்ரீவத்சமாகவும், அடுத்து துர்கை தனது இடது காலால் எருமைத் தலையினை மிதித்து இடது கையால் அதன் வாலினைப் பிடித்து வலது கையில் நீண்டவாளைக் கொண்டு மகிஷனை கொல்வது போன்றும் அடுத்த மேடை மீது பிள்ளையாரும், அடுத்து மேல் நோக்கிய இரண்டு கைகளும் காணப்படுகின்றன. அனைத்து உருவங்களும் இருகைகளைக் கொண்டு நின்ற நிலையில் உள்ளது. பிள்ளையார், துர்கை, உமை தவிர மற்ற உருவங்கள் கைகளைக் கீழே தொங்கவிட்டவாறு எந்த ஆயுதத்தையும் ஏந்தியிராமல் உள்ளன. உமையின் ஒரு கையில் தாமரையும், துர்கையின் வலக்கையில் வாளும், பிள்ளையாரின் ஒரு கையில் பழமும் மற்றொரு கையில் தந்தமும் ஏந்திக் காணப்படுகின்றனர். எந்த உருவங்களிலும் மேலாடை காணப்படவில்லை. கீழாடை மட்டுமே காணப்படுகிறது.

சிற்ப அமைதியைக் கொண்டு இச்சிற்பத் தொடைரை பெத்தமுடியம் சிற்பங்களோடு சேர்த்து, முற்கால பல்லவர்காலமாகிய கி.பி. 4-5ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கணிக்கலாம். மேலும், இச்சிற்ப அமைதியில் இவ்வகை சிற்பத் தொடர் தமிழ்நாட்டில் இதுவரை கண்டு பிடிக்கப்படவில்லை.

இம்மாநிலத்தில் இதுவரை கிடைக்கப்பெற்ற இவ்வகை சிற்பத்தொடர்களின் சிற்ப அமைதி, மற்றும் உருவங்களின் அமைப்பு, ஆனூரிலிருந்து முழுவதும் வேறுபட்டுக் காணப்படுகிறது. மேற்கூறிய கருத்துக்களை வைத்து பார்க்கும் போது ஆனூரில் கண்டுபிடிக்கப்பட்ட இம்மும்மூர்த்தி சிற்பதொடர் ஓர் வேளை அண்டை மாநிலமான ஆந்திர தேசத்திலிருந்து தமிழகத்திற்கு கொண்டுவரப்பட்டதாக இருக்கலாம். இவ்வகைச் சிற்பத்தொடர்கள் கோயில் சிற்பக்கலை தொடக்க கட்டத்தில் இருக்கும்போதோ அல்லது அதற்கு முன்னரோ, மக்கள் அனைத்து தெய்வங்களையும் ஒருங்கே வழிபடுவதற்காக வடிவமைக்கப்பட்டதாக இருக்கலாம்.

### அடிகுறிப்புகள்

1. *ARE.* 75 to 83 of 1932-33.
2. *ARE.* 82 of 1932-33.
3. I.K. Sharma, *The Development of Early Saiva Art and Architecture,* p. 156.
4. *Ibid, Damilica* No.1, 1970. pp. 1-3.
5. *Damilica* No.1, 1970, p.3.
6. *Ibid.* p.2
7. *Ibid.* p.3.
8. K.R. Srinivasan, *"Religion as Gleaned by Early Monuments", Journal of Mardas University,* XXXII No.1 P.156.
9. I.K. Sharma op.*cit* pp.155-156., also plate.86 (A to F)



## 40. பல்லவர் காலத்துப்புடைப்புச் சிற்பங்கள்

**முத்து. எத்திராசன், சென்னை.**

''மறங்கடை கட்டிய குடியை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே,

என்பது தொல்காப்பிய நூற்பா. இந்நூற்பா பொருளதிகாரத்தில் புறத்திணை பற்றிய செய்தியைக் கூறும்போது வீரர்கள் வழிபடும் தெய்வமாகக் கொற்றவையை எடுத்துக்காட்டுவார் ஆசிரியர் தொல்காப்பியர்.

கலித்தொகையில் உள்ள மருதக்கலியின் 24-ஆம் பாடலில் உள்ள,

''எல்லாம் வல் எல்லா
பெருங்காட்டுக் கொற்றிக்குப்
பேய்நொடித் தாங்கு'',

என்னும் வரிகளில் கொற்றவை எல்லாம் அறிந்தவள் என்றும்,

''பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்வி'',

(பெரும்பாணாற்றுப்படை 458-59)

என்று கூறுவதிலிருந்தும் சங்க இலக்கியக் காலங்களில் கொற்றவை வழிபாட்டைக் காண்கிறோம். ஆனால் அக்கொற்றவை எப்படி இருந்தாள் என்பதை அறிய சிற்பங்கள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. பின்னால் தோன்றிய பல்லவர் ஆட்சியில் கற்பனையில் செதுக்கி வழிபட்டுவந்த கொற்றவை சிற்பங்கள் பல ஊர்ப்புறங்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன. அவற்றுள் நான்கினைப் பற்றி இங்கு நாம் காண்போமாக.

**கீழ்வளம்:** படம் 1ல் காணப்படும் புடைப்புச்சிற்பம் செங்கல்பட்டு மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தில் கீழ்வளம் என்னும் ஊரின் தெற்கில் கோயில் மானியம் எனப்படும் இடத்தில் பலகைக் கல்லில் உள்ளது. இது பல்லவர் காலத்தைச் சார்ந்த கொற்றவையாகும். இதனை இவ்வூரார் துர்க்கை என்று பெயரிட்டு அழைக்கின்றனர்.

இத்துர்க்கைப் பலகையின் உயரம் 38 செ.மீ. அகலம் 23 செ.மீ. இத்துர்க்கை தன் இருகால்களையும் ஒரு சேர வைத்தபடி நம்மைப் பார்க்கும் வண்ணம் உள்ளது. தலையில் அழகிய முடியும் காதுகளில் குண்டலங்களும் காணப்படுகின்றன. வலப்புறம் மேற்கையில் சக்கரமும், கீழ்க்கை அபய முத்திரையும் கொண்டு விளங்குகிறது. இடது புறம் மேற்கையில் சங்கும் கீழ்க்கை தொடைமேல் வைக்கப்பட்டும் உள்ளது. கைகளில் வளையல்கள் உள்ளன. தோள் வளையும் அணியப்பட்டுள்ளது. கழுத்தில் அணிகள் பல அழகு செய்கின்றன. மார்பில் கச்சை அணியப்பட்டுள்ளது. இடுப்பில் மேகலை முதலான அணிகலன்கள் அணியப்பட்டுள்ளன. ஆடை தொடைக்கு மேலாகவே விளங்குகின்றது. கால்களில் காப்பு, சிலம்பு போன்றவை காட்சியளிக்கின்றன. வாகனம், வழிபடுவோர் யாருமின்றி காணப்படும் இச்சிற்பம் மிகவும் பழைமை வாய்ந்ததாகக் காணப்படுகின்றது.

கைகளில் உள்ள சக்கரம் நேரான நிலையில் வைக்கப்பட்டுள்ளதாலும் சிற்ப அமைதியைக் கொண்டும் இது பல்லவர் காலத்துப் படைப்பு என்பது தெளிவாகிறது. இத்துர்க்கையை விஷ்ணுதுர்க்கை என்று அறிஞர்கள் வழங்குவர்.

**ஒழலூர் :** படம் 2-ல் காணப்படும் இச்சிற்பம் செங்கல்பட்டு நகரத்திலிருந்து பாலாற்றங்கரை நோக்கிச் செல்லும் தென்கிழக்குத் திசையில் சுமார் 6 கி.மீ. தொலைவில் உள்ள ஊரில் உள்ள பெருமாள்கோயிலின் சுவரை ஒட்டிய சாலையோரத்தில் புதர்களிடையே மறைந்து காணப்படுகிறது. இச்சிற்பம் கொண்டுள்ள பலகையின் உயரம் 96 செ.மீ. அகலம் 48 செ.மீ.

தலையில் அழகிய முடியும், காதில் பருத்துக் காணப்படும் வட்டக்குழைகளும் கொண்டுள்ள இச்சிற்பமும் விஷ்ணு துர்க்கை யாகும். வலப்புற மேற்கையில் சக்கரமும், கீழ்க்கை அபய முத்திரை யுமாகக் கொண்டு விளங்குவதும், இடப்புறமேற்கையில் சங்கும் கீழ்க்கை இடுப்பின்மேலும் அமைக்கப்பட்டிருப்பது காண்கையில் கீழ்வளம் சிற்பம் போன்றே இது உள்ளது எனலாம். இச்சிற்பத்தின் ஆடை, அணிகலன்களும் அவ்வாறே உள்ளன. ஆகவே இதுவும் ஓரளவு கீழ்வளம் சிற்பத்தின் காலம் எனலாம்.



## விஷ்ணு துர்க்கை

கீழ்வளம் : மதுராந்தகம் வட்டம்
(கருங்குழி அருகில்)
செங்கல்பட்டு மாவட்டம்



## துர்க்கை

ஒழலூர், காட்டாங்குளத்தூர் ஒன்றியம்,
செங்கல்பட்டு மாவட்டம்.



## விஷ்ணு துர்க்கை

விளங்கம்பாடி குளக்கரை,
திண்டிவனம் - விழுப்புரம் சாலை.
(8 கி.மீ. தூரம்)
நிழற்படம் எடுத்தநாள் : 1-2-96.



## பாய்கலைப் பாவை

(துர்க்கை)
நத்தம்மேடு : திண்டிவனம் வட்டம்
தென்னார்க்காடு இராமசாமி மாவட்டம்

**விளங்கம்பாடி :** படம் 3-ல் காணப்படுவது விளங்கம்பாடி என்னும் ஊரில் உள்ளதாகும். இவ்வூர் விழுப்புரம் இராமசாமி படையாட்சியார்மாவட்டம் திண்டிவனம் வட்டத்தில் உள்ளது. திண்டிவனத்திலிருந்து விழுப்புரம் செல்லும் சாலையோரத்தில் சுமார் 8 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ள இவ்வூரின் குளக்கரையில் இச்சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பம் அமைந்துள்ள பலகைக்கல்லின் உயரம் 50 செ.மீ. அகலம் 24 செ.மீ. முதலிரு சிற்பங்களிலிருந்து சற்று வேறுபாடு கொண்டு விளங்குகிறது.

தலையில் அழகிய வேலைபாட்டுடன் கூடிய கிரீடமகுடம் காணப்படுகிறது. நீண்டு தொங்குங் காதுகளில் குண்டலங்கள் உள்ளன. கழுத்தில் வடங்கள் பல உள்ளன. மார்பில் கச்சையணிந்துள்ளது. இதுவும் நான்கு கைளைக் கொண்டு மேலிரு சிற்பங்களில் உள்ளபடி கைகள் அமைந்துள்ளன. இடுப்பில் மேகலை போன்ற அணிகளுடன் உடுத்தப்பட்டிருக்கும் ஆடை முழங்கால் வரை காணப்படுகிறது. ஒரு சேரக் கால்களைக் கொண்டு புன்முறுவல் பூத்த முகத்துடன் நம்மை நோக்கி நிற்கும் தோற்றமும் அழகும் பல்லவர்களின் படைப்பு வரிசையில் இதுவும் ஒன்றாக விளங்குகிறது. எனினும் இச்சிற்பம் முன்னிரண்டு சிற்பங்களைவிட காலத்தால் பிந்தியதாகும். இதுவும் விஷ்ணுதுர்க்கை ஆகும்.

**நத்தமேடு :** இவ்வூர் திண்டிவனத்திற்குக் கிழக்கே எல்லை யோரத்தில் அமைந்துள்ள சிற்றூராகும். ஊருக்குப் போகும் வழியில் மேட்டின் மேல் ஆலமரத்தடியில் பலகைக்கல்லில் வழிபாட்டுடன் புடைப்புச் சிற்பமாக இச்சிற்பம் (படம் 4) காணப்படுகிறது.

உயரம் 150 செ.மீ. அகலம் 85 செ.மீ. அளவு கொண்டு விளங்கும் இப்படைப்புச்சிற்பம் முன்னர் காணப்பட்ட சிற்பங்கள் எல்லாவற்றையும்விட பல மாறுதல்களை பெற்று விளங்குகிறது.

தலைமுடி அழகியமுடி, இது பல்லவர் அமைப்பாக உள்ளது. காதில் குண்டலமும் அவ்வாறே. ஆனால் கைகள் எட்டு பெற்றுள்ளன. வலது புறக் கைகள் நான்கு, மேலிருந்து வரிசையாக

சக்கரம், நீண்டவாள், குறுவாள் இவற்றைப் பெற்றுள்ளன. கீழ்க்கை வாகனமான மானை ஒட்டியுள்ளது. இடதுபுறக் கைகளில் சங்கு, வில், கேடயம் முதலியன காணப்படுகின்றன. கீழ்க்கை இடுப்பின்மேல் வைக்கப்பட்டுள்ளது.

இடுப்பில் மேகலை போன்ற அணிகலன் கொண்ட ஆடை முழங்கால் வரை நீண்டுள்ளது. கால்கள் ஒரு சேர எருமை மாட்டின் தலைமேல் நின்றபடி காணப்படுகிறது. வாகனமாக மான் பின்புறம் அணிசெய்ய வலப்புறத்தே காலடியில் வீரன் ஒருவன் தன் தலையைத் தானே அரிந்து கொள்ள முயலும் காட்சி அமைக்கப்பட்டுள்ளது.

இதை நோக்கும்போது,

''அடிக்கழுத்தில் நெடுஞ்சிரத்தை அரிவராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்பாராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்கு மாலோ''

என்னும் கலிங்கத்துப் பரணியின் (111) வரிகள் நமக்கு நினைவுக்கு வருகின்றன. இச்சிற்பம் பல்லவர் காலத்தில் சிற்ப அமைதி கொண்டிருந்தாலும் பலவித மாற்றங்களைக் காண்கையில் இது பாய்கலைப் பாவையின் சிற்பமாகக் கொள்ளவேண்டும்.

மேற்சென்றவற்றையெல்லாம் ஆய்ந்து பார்க்கையில், கொற்றவை வழிபாடே, விஷ்ணுதுர்க்கையாகவும், பாய்கலைப் பாவையாவும், மகிடாசுரமர்த்தினியாகவும் மக்கள் பலவிதமாக எண்ணி வழிபட்டுள்ளனர் எனக் கருதவேண்டியுள்ளது. இது இக்காலத்தே விநாயகக்கடவுளை பல்வேறு பெயர்களில் மக்கள் பெயர்வைத்து அழைப்பதைப் போன்றதாகும்.

## 41. தக்கோலத்தில் ஓர் அரிய கணபதி

**கோ. திருமூர்த்தி, சென்னை.**

தக்கோலம் என்னும் ஊர் வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம் அரக்கோணம் வட்டத்தில் அரக்கோணம் - பேரம் பாக்கம் சாலையில் 11 கி.மீ. தொலைவில் உள்ளது. சோழர்களின் அரசியல் ஆதிக்கத்தை சற்றே நிறுத்திய சோழ இராட்டிரகூடப் போர் கி.பி. 879-ல் இவ்வூரில் தான் நடைபெற்றது.

இவ்வூரில் உள்ள திருவூறல் மகாதேவர் கோயில், தொண்டை மண்டலத்து பாடல் பெற்ற 32 தலங்களுள் ஒன்றாகும். முதலாம் ஆதித்திய சோழன் காலத்திய (கி.பி. 871-907) கற்றளியான இச்சிவன் கோயிலில் ஐம்பதுக்கும் மேற்பட்ட சோழர், இராட்டிரகூடர், விஜயநகர மன்னர்களது கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

இக்கோயிலில் உள்ள அரசமரத்தடியின் மேடை மீது நாக தெய்வங்களோடு வரிசையில் வைக்கப்பட்டுள்ள பல்லவர் காலத்திய மணற்கல்லாலான (Sandstone) கணபதி சிற்பம் ஒன்று அண்மையில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வின் போது கண்டறியப்பட்டது.

அமர்ந்த நிலையில் இடம்புரி கணபதி நான்கு கைகளுடன் கரண்ட மகுடம், கழுத்தணிகள், தோள்வளை, முதலிய அணிகலன்களுடன் பூணூல், அரைஞாண், ஆகியவற்றோடு அங்குசம், பாசம், கொளுக்கட்டை ஏந்தியுள்ளார். பருத்த மற்றும் சரிந்த நிலையில் உள்ள வயிறு, தொப்புள் ஆகியன அழகுற வடிக்கப்பட்டுள்ளது. திறந்த வெளியில் உள்ளதால் வெயிலாலும் மழையாலும் இச்சிற்பம் சற்று சிதைவுற்றுள்ளது. மேலும் எண்ணெய்ப் பூச்சு, கற்பூர புகை ஆகியவற்றினால் சிற்பம் மீது கருப்புப் படலம் காணப்படுகிறது.

மணற்கல்லாலான இக்கணபதியே பல்லவர் காலத்திய மண்டளியின் தேவகோட்டத்தினை அலங்கரித்திருக்க வேண்டும், மண்டளி கற்றளியாக மாற்றப்பட்ட போது கணபதி உள்ளடங்கிய மணற்கல்லாலான மற்ற தேவகோட்டத்து சிற்பங்களும்

அப்புறத்தப்பட்டிருக்க வேண்டும் என்பது வெளிப்படை. எனினும் அப்புறப்படுத்தப்பட்ட மணற்கல் கணபதியின் உருவ அமைப்பை ஒத்தவாறே கருங்கல்லில் கணபதி வடிக்கப்பட்டு தேவ கோட்டத்தில் வைக்கப்பட்டுள்ளது என்பது நோக்கத்தக்கது.

மணற்கல் பல்லவர்கள் காலத்தில் மட்டுமே கோயில்கள் மற்றும் சிற்பங்கள் செய்வதற்க்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. காஞ்சிபுரம், மாமல்லபுரம் போன்ற இடங்களில் உள்ள பல்லவர் காலத்திய கோயில்களும் சிற்பங்களும் மணற்கல்லாலானவையே என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.



## 42. சமயபுரம் நடுகல்

கி. ஸ்ரீதரன், திருச்சிராப்பள்ளி.

திருச்சிராப்பள்ளி- பெரும்பிடுகு முத்தரையர் மாவட்டம் லால்குடி வட்டம், சமயபுரம் கோயில் சாலையி லிருந்து போசளீ சுவரர் கோயிலுக்கு செல்லும் சாலையின் இடப்புறத்தில் உள்ளது.

நிறுத்தி வைக்கப் பட்டுள்ள இந்நடுகல்லில் நான்கு பிரிவாக சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கீழ்ப் பகுதியில் அரசன் ஒருவன் யானையின் மீது அமர்ந்து போருக்குச் செல்கிறான். அடுத்துள்ள இரு பிரிவுகளில் அரசன் குதிரை மீது அமர்ந்து வாள் ஏந்திசண்டை போடுவது போல காட்டப் பட்டுள்ளது. குதிரைக்கு முன்னர் உள்ள வீரர்களும் வாள் ஏந்தி யுள்ளனர். இறுதியாக தலைப் பகுதியில் சிவ லிங்கத்தை இரு பக்கங்களில் பக்கத்திற்கு இரண்டு பேர் அமர்ந்து வழிபடுவது போல காட்டப்பட்டுள்ளது. சிவ லிங்கத்தின் மேல் குடையும் இருபக்கங்களில் சாமரங் களும் காணப்படுகின்றன. அரசன் போரில் இறந்து பட அவனை லிங்க வடிவில் வழிபடுவது இக்கல்லில் காணப்படும் சிறப்பாகும். கல்வெட்டு ஏதும் இல்லை. இதன் காலம் கி.பி. 13-14ம் நூற்றாண்டு.



ஆவணம், இதழ் 8, 1997

# 43. புதிய வெளியீடுகள்

**டாக்டர். வ. தேனப்பன்,**

1. ***ஒன்பது நகரக்கோயில்கள்.*** தேன்வள்ளியம்மை பதிப்பகம், 6, வெள்ளையன் ஊருணி வடக்கு, தேவகோட்டை, 1990 பக்கங்கள் 320-88.

பசும்பொன் தேவர்திருமகனார் மாவட்டத்தில் அமைந்த செட்டிநாட்டில் உள்ள ஒன்பது நகரத்தார் கோயில்களையும், நகரத்தார் சமூக அமைப்பையும் அறிந்து கொள்ளத் துணைசெய்யும் நூல் இதுவாகும். இடைக்காலத் தமிழ்நாட்டில் இருந்த வணிக நகரங்களின் அமைப்பு முறையை அறிய இவ்வாய்வுநூல் வரலாற்று ஆய்வாளர்களுக்குத் துணைபுரியும். நகரத்தார் கோயில்களின் தோற்றம், வளர்ச்சி, அமைப்பு, வழிபாடு, நிர்வாகம், சமயப்பணி, சமுதாயப்பணிகள் ஆகியவை விரிவாக இதில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. நகரத்தார் கோயில்கள் குறித்த இலக்கியச் செய்திகளும், கல்வெட்டுச் செய்திகளும் ஆய்வு செய்யப் பட்டுள்ளன. நகரத்தார் வாழ்க்கை கோயிலைச் சார்ந்து அமைந் துள்ளது என்பதே இந்நூலின் அடிநாதமாக ஒலிக்கிறது. இந்நூ லாய்வில் தரப்பட்டுள்ள முடிவுகள் சில மேலும் சிந்திப்பதற் குரியவை. மற்றவை நகரத்தார் மரபை நன்கு அறியத் துணைபுரி கின்றன. வரைபடங்கள், புகைப்படங்கள், கல் வெட்டுகள், நேர் காணல், வினா-விடையளித்தோர் பட்டியல் ஆகியவை நிறைந்த பின்னிணைப்பு இறுதியில் உள்ளது.

வெ. வேதாசலம்.

2. R. Champakalakshmi, *Trade Ideology and Urbanization : South India 300 BC to AD 1300,* Oxford, Delhi, 1996, pp.485.

தென்னிந்தியாவில், குறிப்பாகத் தமிழக நகராக்கத்தின் பல்வேறு பரிமாணங்களை இந்நூல் எட்டு அதிகாரங்களில் ஆராய் கிறது. முதல் கட்டுரையில், நகராக்கத்திற்கான கோட்பாடுகள் ஆராயப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் சங்க கால மற்றும் இடைக் கால நகராக்கத்தின் தன்மைகள் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

நகராக்கத்திற்குத் தூண்டுகோலாக வணிக நடவடிக்கைகள் எவ்வாறிருந்தன என்று இந்நூல் விளக்குகிறது. சங்ககால வணிக நகரங்களின் வளர்ச்சியை அகழாய்வுப் பொருள்களோடும், தொன்மையான தமிழ்-பிராமி கல்வெட்டுக்களோடும் ஒப்பிட்டு விளக்கியுள்ளார். இதனை முதல் நகராக்க முயற்சி என்பார் ஆசிரியர்.

சோழர் ஊர்களில், முக்கியமாக குடமூக்கு (கும்பகோணம்), பழை யாறையில் ஏற்பட்ட நகராக்கத்தின் இயல்புகள் விவரிக்கப் பட்டுள்ளன. தஞ்சை நகரின் வளர்ச்சியும் அது தொடர்பான நகராக்க முயற்சிகளின் போக்கும் ஆராயப்பட்டுள்ளன. இவ்வகையில் நடைபெற்ற நகராக்க முயற்சி இரண்டாம் கால கட்டத்தைச் சார்ந்தது என்றும் இக்காலத்தில் நகராக்க முயற்சிகள் பிரமதேயம் மற்றும் கோவில்களை ஒட்டி நடைபெற்றன என்பார். இந்நகராக்க நடவடிக்கை யாவும் பக்தி கோட்பாட்டின் போக்கை ஒட்டியே நடைபெற்றன.

தமிழகத்துப் பழம் நகரங்களில் பல ஆண்டுகள் கள ஆய்வு மேற்கொண்டு பேராசிரியர் சம்பகலஷ்மி இக்கட்டுரைகள் பலவற்றை முன்பே பல ஆய்வு இதழ்களில் வெளியிட்டுள்ளார். ஆயினும் அவையாவும் இந்நூல் வாயிலாக ஒருங்கே நமக்குக் கிடைக்கின்றன. ஒரு நீண்டகால ஆய்வின் சிறந்த வெளிப்பாடு இந்நூல். பொருளியல் வரலாற்றாய்வாளர்களுக்கும் பொது ஆய்வாளர்களுக்கும் இந்நூல் மிகுந்த பயனைத் தருவதாகும்.

ப. சண்முகம், சென்னை.

3. R.Nagaswamy, (Ed), *Studies in South Indian History and Culture*, V.R. Ramachandra Diskshitar Centenary Committee, Nitya Apartments, 25/B-15, II Main Road, Gandhi Nagar, Adayar, Chennai - 600 020, 1997,pp.346.

சென்னைப் பல்கலைக் கழக இந்திய வரலாற்றுத் துறையில் 25 ஆண்டுகள் பணியாற்றிய பேராசிரியர் வி.ஆர். ராமசந்திர தீக்ஷிதரின் நூற்றாண்டு நினைவு வெளியீடாகும் இந்நூல். மூன்று பகுதிகளைக் கொண்ட இந்நூலில்; முதற் பகுதியில் வி.ஆர். ராமச்சந்திரதீக்ஷிதருடைய வாழ்க்கை வரலாறு சுருக்கமாக தரப்பட்டுள்ளது.

அவரது பல கட்டுரைகளிலிருந்து 36 ஆய்வுக்கட்டுரைகளைத் தேர்நதெடுத்து இரண்டாம் பகுதியில் வெளியிட்டுள்ளனர. இந்திய வரலாற்றுக் கட்டுரைகளே பெரும்பகுதியை அடைத்துள்ளன. தென்னிந்திய வரலாறு மற்றும் சிறப்பாக தமிழ்நாட்டு வரலாற்றுக்குத் துணை புரியும் ஆய்வுக்கட்டுரைகள் சிலவே. முக்கியமாக குறளிலிருந்து தெரிய வரும் அரசியல், காஞ்சி மாநகர் கடிகை, உத்தரமேரூர் சபை ஆகிய சில ஆய்வுக்கட்டுரைகளே உள்ளன. ஒரு நூற்றாண்டு காலத்தில் வரலாற்று வரைவியலும், நெறிமுறைகளும், கருத்துக்களும் அடைந்த மாற்றங்களை இப்பகுதியில் தெளிவாகக் காணலாம்.

இக்கால வரலாற்றாய்வாளர்களின் பதின்மூன்று ஆய்வுக்கட்டுரைகளைக் கொண்டது மூன்றாம் பகுதி. காஞ்சிபுர அகழாய்வில் கிடைத்த பழம் பிராகிருத மொழிக் கல்வெட்டு, பானையோட்டுக் கீறல் குறிகள், சரபமூர்த்தி வடிவம், கல்வெட்டுக்களில் காணப்படும் நிலக்கொடைகள், தாராசுரத் தோடான திரிபுராந்தகர் தொடர்புகள் ஆகியன பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் உள்ளன. தமிழ் மொழி பற்றிய ஆய்வுக்கட்டுரைகளும், சீவகசிந்தாமணி பற்றிய ஆய்வும் இடம் பெற்றுள்ளன. சிவ வணக்கம், தமிழ் பக்தி இயக்கம், மற்றும் பாசுபதர் இலக்கியம் பற்றியும் ஆய்வுக்கட்டுரைகள் உள்ளன.

மிகக் கவனமாகவும் வெகு நேர்த்தியாகவும் பதிப்பிக்கப்பட்ட இந்நூல் வரலாறு, பண்பாட்டு ஆய்வாளர்களுக்குக் கிடைத்த சிறந்த நூல்.

# 44. செய்தித் திரட்டு

## 1. கேரளத்தின் தொன்மையான கல்வெட்டுகள்

கேரள மாநிலத்தில் வயநாடு மாவட்டத்தில் எடக்கல் மலைக் குகையில் பொறிக்கப்பட்ட தொன்மையான ஆறு தமிழ்க் கல்வெட்டுக்களைப் பற்றிய விவரங்களை தொல்லெழுத்தியல் அறிஞர் ஐராவதம் மகாதேவன் அண்மையில் தமிழக மக்களின் கவனத்திற்குக் கொண்டு வந்தார். இக்கல் வெட்டுகளில் நான்கு, தமிழ் பிராமி எழுத்துக்களில் பொறிக்கப் பட்டவை. ஏறத்தாழ கி.பி.2-3 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. மற்ற இரண்டு கல்வெட்டுகள் கி.பி. 5-6 ஆம் நூற்றாண்டு வட்டெழுத்தில் பொறிக்கப் பட்டவை.

இக்கல்வெட்டுக்களில் மூன்று கல்வெட்டுக்கள் சேரகுல மன்னர்களைப் பற்றியவை. பழைய கல்வெட்டு ஒன்றைத் தேடிச் சென்ற ஐராவதம் மகாதேவன் குழுவினர் புதிய, தொன்மையான கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்தனர். இக்கல்வெட்டுக்களில் ஒன்றில் *கடும்மி புத செர* என்ற சேர மன்னர் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது மூன்றாவது கல்வெட்டுகள் ஏற்கெனவே 1901 ஆம் ஆண்டில் கண்டுபிடிக்கப்பட்டவை. இக்கல்வெட்டுக் களை அன்றைய கல்வெட்டறிஞர். ஹுல்ட்சுவினால் சரியாக வாசிக்க முடியவில்லை, இவ்விரண்டு கல்வெட்டுகளும் தற்போது அழிந்து விட்டன. ஆயினும் ஐராவதம் மகாதேவன், பழைய புகைப்படங்களின் உதவியால் அவ்விரண்டு கல்வெட்டுக்களையும் சரியாக வாசித்துள்ளார். இரண்டாவது கல்வெட்டு *கோ ஆதன்* என்ற சேர மன்னருடையதாகலாம். மூன்றாம் கல்வெட்டு *கோ பூதி வீரன்* என்ற மற்றொரு சேர மன்னனு டையதாகலாம்.

இக்கண்டுபிடிப்புக்கள் சேர மன்னர்களின் வரலாற்றில் புதிய செய்திகளைத் தந்துள்ளன. தமிழகத் தொல்லெழுத்தியல் வரலாற்றிலும், தமிழ் பிராமி, வட்டெழுத்துக்களின் வளர்ச்சி, பரவல் ஆகிய தன்மைகளை அளந்தறியவும் இக் கண்டுபிடிப்புகள் துணை புரியும் என்பதில் ஐயமில்லை.

தினமணியில் (மதுரைப் பதிப்பு, 9-2-97) ஐராவதம் மகாதேவன் எழுதிய கட்டுரையிலிருந்து.

## 2. பள்ளியில் ஒரு காலப்பெட்டகம்

வரலாறு, மக்களின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துஉள்ளது என்பதில் ஐயமில்லை. சென்ற நூற்றாண்டில் தமிழ் நாட்டு வட்டார

வரலாற்றுக்கு முக்கியத்துவம் தரப்பட்டது தெரியவந்துள்ளது. கோபிச் செட்டிப்பாளைய வைர விழாப் பள்ளியின் பழைய கட்டிடங்களை இடித்து புதுக்கட்டிடங்கள் கட்டுவதற்காகத் தோண்டும்போது ஒரு நூற்றாண்டு பழமையான பொருள்கள் கிடைத்தன. ஒரு கண்ணாடி பாட்டிலில் அக்காலக் (1839-1895) காசுகள் சிலவும், 5 மி.மீ. ஐம்பொன் தகடும், இந்து (The Hindu),மெட்ராஸ் மைல் (The Madras Mail), ஆகிய ஆங்கில நாளிதழ்களின் (2-3-1898) பிரதிகளும், வைர விழாப் பள்ளியின் கட்டிடம் தொடர்பான ஆங்கிலத்தில் எழுதப்பட்ட ஒரு குறிப்பும் கிடைத்தன. இங்கிலாந்துப் பேரரசி விக்டோரியாவின் வைர விழா கொண்டாட்டங்கள் தொடர்பாக எழுப்பப்பட்ட பள்ளிக் கட்டிடத்திற்கு வைரவிழாப் பள்ளிக் கட்டிடம் எனப் பெயர் வைத்ததாகவும் அக் குறிப்பில் எழுதப்பட்டுள்ளது. காசுகளில் 1839ஆம் ஆண்டைய கிழக்கிந்தியக் கம்பெனியாருடைய நாணயம் பழமையானதாகும். விக்டோரியா அரசி உருவம் பொறித்த செப்புகாசும், இரண்டணா வெள்ளிக்காசுகளும் இருந்தன. இவற்றையெல்லாம் நோக்கும் போது காலப்பெட்டகக் கருத்தை கோபிச்செட்டிப்பாளைய ஊர் மக்கள் ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே தமிழகத்தில் விதைத்தனர் எனலாம்.

**தினமலர்**(ஈரோடு) 14-9-96, ***The Hindu,*** 18-9-96 நாளிதழ்களிலிருந்து)

**3. இந்டர்நெட்டில் (Internet) தொல்லியல்**

விரைவாக வளர்ந்து வரும் கணிப்பொறி கருத்துப்பரிமாற்றப் பெருவழியில் தொல்லியலார்க்கும் ஒரிடம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இவ் ஆண்டு (1997) ஜுன் மாத முதல் இந்டர்நெட்டில் இப்பகுதி செயல்பட உள்ளது. இப்பகுதியில் கணிப்பொறி உதவியோடு தொல்லியல் தொடர்புடைய செய்திகளைப் பரிமாறிக்கொள்ளலாம். இந்திய கற்காலங்கள், இந்தியாவில் அண்மையில் நடைபெற்ற அகழாய்வுகள் சிறப்பியல்புகள், புதிய நூல்களைப் பற்றிய செய்திகள், கடலகழாய்வு போன்ற பல பொருள்களில் கருத்துப்பரிமாற்றம் நடைபெறும். உங்கள் கண்டுபிடிப்புக் களையும் இந்டர்நெட்டில் இலவசமாக வெளியிட முடியும். கீழ்க்கண்ட பகுதியில் இந்டர்நெட் செய்திகளை நீங்கள் பரிமாறிக் கொள்ளலாம் : http://www.picatye.com/dig/dig.htm : மேலும் விவரங்களுக்கு கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளலாம்: DISCOVER INDIA GALLERY, Dr. Shanti Pappu, Editor, Flat No. 4, 112/3, Moti Mahal Bldg., Alandi Road, Pune - 411 006. email : shantipappu @ hotmail. com.

# கட்டுரையாளர்கள்

**திரு ந. அதியமான்**
*முதுநிலை விரிவுரையாளர்*
*நீரகழாய்வு மையம்*
*தமிழ்ப் பல்கலைக் கழகம்*
*தஞ்சாவூர் - 613 005*

**திரு ஆறுமுக சீதாராமன்**
*12, ராஜராஜன் நகர்,*
*மானோஜிப்பட்டி (தெற்கு)*
*தஞ்சாவூர் - 613 005*

**முனைவர் சு. இராசகோபால்**
*இராஜாஜி இல்லம்*
*4 அ , முதல் தெரு*
*வெங்கடேஷ்வரா நகர்*
*அடையாறு*
*சென்னை - 600 020*

**திரு கரு. இராசேந்திரன்**
*ஆசிரியர்*
*மேலப்பனையூர் (அஞ்சல்)*
*விராச்சிலை வழி*
*புதுக்கோட்டை - 622 420*

**திரு சீ. இலட்சுமணன்**
*உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்*
*தமிழூர்*
*அடைக்கலப்பட்டணம்*
*திருநெல்வேலி - 627 808*

**திரு ஐராவதம் மகாதேவன்**
*இ.ஆ.ப. (ஓய்வு)*
*18 அ, 4வது கடற்கரைச் சாலை*
*வால்மீகி நகர், திருவான்மியூர்*
*சென்னை - 600 041*

**திரு முத்து. எத்திராசன்**
*128, காமராசர் குடியிருப்பு*
*தெற்கு உஸ்மான் சாலை*
*தியாகராயநகர்*
*சென்னை - 600 017*

**திரு நாக. கணேசன்**
*காப்பாட்சியர்*
*தமிழ்நாடு அரசு தொல்பொருள்*
*ஆய்வுத்துறை*
*இராமலிங்க விலாசம்*
*இராமநாதபுரம் - 623 501*

**முனைவர் எஸ்.எம். கமால்**
*21, ஈசா பள்ளி வாசல் தெரு*
*இராமநாதபுரம் - 623 501*

**திரு ம. காந்தி**
*காப்பாட்சியர்*
*அரசு அருங்காட்சியகம்*
*வேலூர் - 632 004*

**Sri. K.G. Krishnan**
Chief Epigraphist (Rtd)
711, Vaijayanti
16th Main Road, Saraswathipuram
Mysore -570 009

**செல்வி ஜெ. கிறிஸ்டி வேதா**
*மாணவி*
*பண்டைய வரலாறு*
*தொல்லியல் துறை*
*சென்னைப் பல்கலைக் கழகம்*
*சென்னை - 600 005*

**திரு தே. கோபாலன்**
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை
மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகம்
நாகர்கோவில் - 1

**திரு சங்கரராமன்**
சென்னை

**முனைவர் ப. சண்முகம்**
பேராசிரியர்
பண்டைய வரலாறு
தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை - 600 005

**திரு அ. சந்திரபோஸ்**
வரலாற்று மையம்
பாரதிதாசன் பல்கலைக் கழகம்
திருச்சிராப்பள்ளி - 620 024

**திரு சொ.சாந்தலிங்கம்**
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை - 625 001

**Dr. S. Swaminathan**
Senior Epigraphist
O/o. The Director Epigraphy
Old University Office Building
Mysore - 570 005

**V. Selvakumar**
Research Fellow
Dept. of Archaeology
Deccan College
Pune - 410 006

**திரு ஜி. சேதுராமன்**
இணைப் பேராசிரியர்
கலை வரலாற்றுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை -625 021

**திரு இல. தியாகராசன்**
முதுநிலை விரிவுரையாளர்
வரலாற்றுத்துறை
அரசு கலைக் கல்லூரி
அரியலூர் - 621 704

**திரு கோ. திருமூர்த்தி**
உதவி தொல்லியல் ஆய்வாளர்
இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத் துறை, புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 001

**திரு வெ. இரா. துரைசாமி**
கோயில்காடு
வெள்ளக்கல்பட்டி (அஞ்சல்)
நாமகிரிப்பேட்டை வழி
சேலம் - 637 406

**திரு மு. துரைராசு**
கந்தர்வக் கோட்டை
புதுக்கோட்டை

திரு து. துளசிராமன்
*காப்பாட்சியர்*
*அகழ்வைப்பகம்*
*13, சித்தி விநாயகர் கோயில் தெரு*
*ஆற்க்காடு - 632 503*

திரு அ. பழனியப்பன்
தமிழாசிரியர்
*பழனியாண்டவர் தெரு*
*ஜம்பை, பவானி வட்டம்*
*ஈரோடு மாவட்டம்*

முனைவர் ப.தெ. பாலாஜி
*பண்டைய வரலாறு*
*தொல்லியல் துறை*
*சென்னைப் பல்கலைக் கழகம்*
*சென்னை*

திருமதி மங்யைர்க்கரசி வீரராகவன்
*66, முத்துவேல் - லே-அவுட்*
*கே.கே.சாலை*
*விழுப்புரம் - 605 606*

திரு ப. வெங்கடேசன்
*3/78, கம்பன் தெரு*
*பெல்லியப்பா நகர்*
*வாலாஜாபேட்டை - 632 513*

முனைவர் வெ. வேதாசலம்
*கல்வெட்டாய்வாளர்*
*தமிழ்நாடு அரசு தொல்பொருள்*
*ஆய்வுத்துறை*
*திருமலை நாயக்கர் அரண்மனை*
*மதுரை - 625 001*

திரு பா. ஜெயக்குமார்
*ஆய்வு உதவியாளர்*
*கல்வெட்டியல் துறை*
*தமிழ் பல்கலைக் கழகம்*
*தஞ்சாவூர் - 631 005*

முனைவர் எஸ். ஜெயசீலா ஸ்டீ:பன்
*ஆய்வாளர்*
*பிரெஞ்சு இந்தியவியல் கழகம்*
*புதுச்சேரி*

முனைவர் வெ. ஜெயராஜ்
*காப்பாட்சியர்*
*வேதியல் பாதுகாப்புப் பகுதி*
*அரசு அருங்காட்சியகம்*
*சென்னை - 600 008*

திரு கி. ஸ்ரீதரன்
*91 ஏ, மேல் அடையவிளஞ்சான் வீதி*
*திருவரங்கம்*
*திருச்சிராப்பள்ளி - 620 006*




## அஞ்சலி

### பேராசிரியர் B.R. கோபால்

இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவில் கல்வெட்டாய்வாளராகவும், கர்நாடகப் பல்கலைக் கழகத்திலும், மைசூர் பல்கலைக் கழகத்திலும் இணைப் பேராசிரியராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றவரும் தென்னிந்தியக் கல்வெட்டுகளில் அறிஞராகவும் விளங்கிய முனைவர் B.R. கோபால் அண்மையில் காலமானார். இவர் கல்வெட்டுக்கு அளித்த முக்கிய நன்கொடைகளாக எபிகிராபியா கர்னாடிகா (Epigraphica Carnatica) திருத்தியப் பதிப்பு தொகுதிகள் 1-8; விஜயநகரக் கல்வெட்டுகளின் இடவாரிப் பட்டியல் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இவரது மறைவு தென்னிந்தியக் கல்வெட்டியலுக்கு ஒரு பேரிழப்பாகும்.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY,

THANJAVUR.

*RECEIPTS & PAYMENTS ACCOUNTS*
*FOR THE YEAR ENDED 31.3.97*

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| Cash at in I.B. | 611.00 | Stationery | 561.00 |
| Cash at in S.B.I. | 19,750.00 | Printing, Typing | 17,417.45 |
| Cash in hand | 48.10 | Audit fee | 300.00 |
| Fixed Deposit | 55,000.00 | Salary | 300.00 |
| Sale of Books | 32,817.00 | Postage | 4,422.00 |
| Member ship fee | 10,900.00 | Bank commission | 35.00 |
| Interest on F.D | 6,685.00 | Transport expenses | 498.00 |
| Interest | 441.00 | Sundries | 55.00 |
| | | T.A.S | 2,000.00 |
| | | Treasurer A/c. | 600.00 |
| | | **CLOSING BALANCE** | |
| | | Fixed Deposit | 95,000.00 |
| | | Cash at I.B.,Tnj | 639.00 |
| | | Cash at S.B.I., Tnj | 2,767.00 |
| | | Cash in hand | 1,657.65 |
| | 1,26,252.00 | | 1,26,252.10 |

*INCOME AND EXPENDITURE FOR THE YEAR ENDED 31.3.1997*

| EXPENDITURE | | INCOME | |
|---|---|---|---|
| To Stationery | 561.00 | By Sale of Books | 32,817.00 |
| " Printing & Typing | 17,417.45 | " Membership | 10,900.00 |
| " Audit fee | 300.00 | " Interest on F.D. | 6,685.00 |
| " Salary | 300.00 | " Interest on S/B | 441.00 |
| " Postage | 4,422.00 | | |
| " Bank commission | 35.00 | | |
| " Transport Expenses | 498.00 | | |
| " Sundries | 55.00 | | |
| " E.S.I. | 2,000.00 | | |
| " Excess of Income over Expenditure | 25,254.55 | | |
| | 50,843.00 | | 50,843.00 |

*BALANCE SHEET AS ON 31.3.1997*

| LIABILITIES | | | ASSESTS | | |
|---|---|---|---|---|---|
| CAPITAL ACCOUNT : | | | Fixed Deposit in | | |
| Opening Balance | 74,809.10 | | S.B.I., Tnj. | | 95,000.00 |
| ADD : Excess Income | 25,254.55 | | Cash at Bank | | |
| | | 1,00,063.65 | I.B. Tnj. | 639.00 | |
| | | | S.B.I. Tnj. | 2,767.00 | |
| | | | | | 3,406.00 |
| | | | Cash in hand | | 1,657.65 |
| | | 1,00,063.65 | | | 1,00,063.65 |

Sd./-

**V. RAMASAMY,** B.Com., A.C.A.,
No.8, First Street,
Anna Nagar, Thanjavur - 613 004.

(முன் அட்டைத் தொடர்ச்சி)

1. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி 2,3ஆம் பதிப்பு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், 1967, பக்.83-90.

## கட்டுரைகளுக்கு

கட்டுரை ஆசிரியர் பெயர் (தந்தை அல்லது குறிப்பு எழுத்துக்கள் முதலிலும், தொடர்ந்து முழுப்பெயரும்) கட்டுரைத் தலைப்பு மேற்கோள் குறிகளுக்குள் தரப்படவேண்டும், கட்டுரை வெளிவந்த நூல் அல்லது பருவ ஏட்டின் பெயர் அடிக்கோடிடப்படல் வேண்டும். (பருவ ஏடுகளுக்கான பெயர் சுருக்க எழுத்துக்களில் தரப்படலாம். அவையும் அடிக்கோடிடப்படல் வேண்டும்.) தொகுதி எண், வெளியிடப்பட்ட இடம், ஊர், வெளியிடப்பட்ட ஆண்டு, பக்க எண். போன்றவை.

சூ.சுவாமிநாதன், ''புஞ்சை மூலபருடைக் கல்வெட்டு'', ஆவணம், தொ. 6, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர், சூலை 1995, பக்.23, அடிக்குறிப்பு எண் 6.

ஆங்கில நூல்களுக்கும் இது பொருந்தும். ஆங்கில நூல் தலைப்புகளை ஆங்கிலத்திலே கொடுக்கலாம்.

சொற்குறுக்கங்களைப் பயன்படுத்தலாம். சில கீழே தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| பக். | - | பக்கம்/ பக்கங்கள். |
| அகு. | - | அடிக்குறிப்பு |
| பதி. | - | பதிப்பாசிரியர் |
| த.தொ.க. | - | தமிழகத் தொல்லியல் கழகம் : |

கிரந்த எழுத்துக்களை எழுத்துப் பெயர்ப்பு செய்ய ஆவணம் வழங்கி வரும் முறையைப் பின்பற்றலாம். அல்லது மூல எழுத்துக்களை அப்படியே மாற்றாமல் தரலாம்.

எல்லா வரைவுகளும் தெளிவாகவும் சுருக்கமாகவும் தட்டச்சில் இரு படிகள், **எ. சுப்பராயலு, ''ஆவணம்'' பதிப்பாசிரியர், மே / பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 005** என்ற முகவரிக்கு அனுப்பவேண்டும்.

## உறுப்பினர் கட்டணம்

தமிழகத் தொல்லியல் கழக வாழ்நாள் உறுப்பினர் கட்டணத்தை (ரூ.500) கா.ராஜன் பொருளாளர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். காசோலை, வரைவோலைகள், ''தமிழகத்தொல்லியல் கழகம்'' என்ற பெயரில் இருத்தல் வேண்டும்.

பிற தகவல்களுக்கு செயலர், தமிழகத் தொல்லியல் கழகம், மே / பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 005. என்ற முகவரியில் தொடர்பு கொள்ளவும்.